# கல்கி

KALKI 30.5.1971 40காசு







ந்த வாரம்
ழு நாவல்

விக்கிரமாதித்தனின்
வாள்



விட்டமின்கள் மற்றும்
தாதுப் பொருட்களுக்கான
'உணர முடியாப் பசி' உங்களுக்கு
சோர்வும் எரிச்சலும் ஊட்டுகிறது...

# வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக்

## மட்டுமே 12 இன்றியமையாத சத்துக்களை அளிக்கிறது

## அந்த 'உணரமுடியாப் பசி'யைத் தீர்ப்பதற்கு

உங்கள் உடலில் விட்டமின்கள், தாதுக்கள் மற்றும் முக்கிய சத்துக்களுக்கான பசி நிரந்தரமாக இருக்கிறது. இந்த 'உணர முடியாப் பசி'யின் விளைவு—சோர்வு, எரிச்சல், இருப்புக் கொள்ளாமை, பசியின்மை, ஜீரண சக்தி குறைவு.

எல்லா சத்துக்களும் அடங்கிய வாட்டர் பரீஸ் விட்டமின் டானிக் சாப்பிட்டு 'உணர முடியாப் பசி'யைப் போக்குங்கள். அதில் 12 முக்கிய சத்துக்கள் உள்ளன; வளர்ச்சிக்கும், வலிமைக்கும் விட்டமின்கள்; இரத்த விருத்திக்கு இரும்புச்சத்து; நல்ல பசியெடுக்க எல்லாப் பொருட்களும்; நரம்புகளுக்கு உரமூட்ட பாஸ்ஃபேட்டுக்கள்.

சிந்தித்துப் பாருங்கள்; உங்களுக்கு அல்லது உங்கள் குடும்பத்தில் யாரேனும் ஒருவருக்கு வாட்டர் பரீஸ் விட்டமின் டானிக் தேவை இன்றே!

இரண்டு அளவுகளில் கிடைக்கிறது:
250 ml 470 ml.




ஒரு தரமான வார்னர் லாம்பர்ட் தயாரிப்பு.
WVT-G-5 TM

WVT.G.5.71



# கல்கி

## பொருளடக்கம்

விரோதிகிருது, வைகாசி 16 — மே 30, 1971



"கல்கி"யில் வெளிவரும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப்பெயர்களே சம்பவங்களும் கற்பனையே.


| சந்தா விவரம்: | ஒருவருடம் | ஆறுமாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20-00 | ரூ. 10-00 |
| இலங்கை (இலங்கைநாணயம்) | ரூ. 21-00 | ரூ. 10-50 |
| இதர நாடுகள் | ரூ. 40-00 | ரூ. 20-00 |

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. -- பாரதியார்



மலர் 30



இதழ் 44

# ஸ்தாபன காங்கிரஸ் மகாநாடு

**ஸ்**தாபன காங்கிரஸின் மகாநாடு சமீபத்தில் பம்பாயில் நடந்தேறியிருக்கிறது. தேர்தலுக்குப்பின் தேசத்தில் ஏற்பட்டுள்ள நிலவரத்தில் ஸ்தாபன காங்கிரஸின் பணி என்ன என்று வரையறை செய்ய இம்மகாநாடு ஒரு தகுந்த சந்தர்ப்பமாக அமைந்தது. ஆனால் மகாநாட்டின் முடிவுகள் திருப்தியளிப்பனவாக இல்லை. தேசத்தின் முக்கியமான பத்திரிகைகள் மகாநாடு பற்றி அதிருப்தியை வெளியிட்டுள்ளன.

ஸ்தாபன காங்கிரஸ் மகாநாட்டின் குறிப்பிட்டுச் சொல்லக்கூடிய ஒரு முடிவு, அது மற்ற ஜனநாயக எதிர்க் கட்சிகள் எதனுடனும் கூட்டுச் சேராமல், தனியாக சுய பலத்திலேயே இயங்க வேண்டும் என்பதாகும். ஒரு கட்சி செய்கிற இது போன்ற முடிவுகளை வேறெவரும் தடுத்து நிறுத்துவதற்கில்லை. இந்திரா காங்கிரஸின் அபாயகரமான கொள்கைகளைத் தனித்து நின்றே ஸ்தாபன காங்கிரஸ் எதிர்த்து வெல்ல முடியுமாயின் அதில் அனைவருக்கும் மகிழ்ச்சியே உண்டாகும்; ஸ்தாபன காங்கிரஸ் தன் இலட்சியத்தில் வெற்றி பெறட்டும் என அனைவரும் வாழ்த்துவோம்.

ஆயினும், பிரத்தியட்சக் கண்ணோட்டத்துடன் பார்ப்போமாயின் இப்படிப்பட்ட இலட்சியத்தை ஸ்தாபன காங்கிரஸ் தனித்தே அடைய முடியும் என்று நம்புவதற்கில்லை. தீவிரமான நெருக்கடி நிலையில் இந்த மகாநாடு நடந்தும்கூட, கட்சிக்குச் சக்திவாய்ந்த ஒரு புத்துருவம் தரும் வாய்ப்பை ஸ்தாபன காங்கிரஸ்காரர்கள் தவற விட்டிருப்பதாகவே காண்கிறோம். 'தோல்வி அடைந்ததன் காரணமாகவே விவேகம் பிறப்பதும் உண்டு' என்று சொல்வதுண்டு. ஆனால் துரதிருஷ்டவசமாக ஸ்தாபன காங்கிரஸில் இத்தகைய விவேகம் பிறந்ததாகத் தெரியவில்லை. இந்திரா காங்கிரஸ் கூறும் அதே பொய் சோஷலிஸ கோஷங்களை எழுப்புவதன் மூலம் ஸ்தாபன காங்கிரஸுக்குப் புத்துயிர் தந்துவிட முடியாது என்று அதன் தலைவர்கள் உணரக் காணோம்.

ஸ்தாபன காங்கிரஸ் செய்துள்ள பெரும் தவறு யாதெனில், தேர்தலில் அது அடைந்த தோல்விக்குக் காரணம் சுதந்திரக் கட்சி முதலியவற்றுடன் கூட்டுச் சேர்ந்ததே என்று அது கருதுவதேயாகும். இதுவல்ல தோல்விக்குக் காரணம். ஜனநாயக எதிர்ப்பு முன்னணி இன்னும் முன்னதாகவே உருவாகி, திட்டவட்டமாக உறுதிப்படுத்தப் பெறாததே தேர்தல் தோல்விக்குக் காரணம் எனலாம். எதிர்ப்பு முன்னணி ஆட்சிக்கு வந்தால் என்ன செய்யும் என்று விளக்குகின்ற செயல் திட்டம் ஏதும் வாக்காளருக்கு அளிக்கப் படாததும் தோல்விக்குக் காரணமாகும். முன்னணியில் உள்ள எல்லாக் கட்சிகளுக்கும் பொதுவாக ஒரு செயல் திட்டம் வகுக்கப்பட வேண்டும் என்று சுதந்திரக் கட்சித் தலைவர் வலியுறுத்தியும் ஸ்தாபன காங்கிரஸ் இதற்கு இணங்கவில்லை. காங்கிரஸ் இரண்டாகப் பிளக்கு முன்பே அதற்கு ஒரு செயல் திட்டம் வகுக்கப்பட்டிருந்தது. இந்தத் திட்டம் பிறகு ஸ்தாபன காங்கிரஸின் பரிபூர்ண ஆதரவு பெற்றதேயாகும். இந்தத் திட்டத்தின் சாரத்தையே எதிர்ப்பு முன்னணியின் பொதுச் செயல்திட்டமாக வாக்காளரின் முன் வைக்க வேண்டும் என்று சுதந்திரக் கட்சி விரும்பியது. ஆயினும் துர்ப்பாக்கியவசமாக, பொதுச் செயல் திட்டத்தை வெளியிட ஸ்தாபன காங்கிரஸ் மறுத்துவிட்டது.

இந்திரா காங்கிரஸுக்கு எதிரான ஜனநாயகக் கட்சிகள் யாவும் பூரணமாக ஒன்றுபட்டு ஒத்துழைத்தாலே அதற்குத் தோல்வி தந்து, நாட்டில் உண்மை சுதந்திரத்தையும் ஜனநாயகத்தையும் ஏற்படுத்த முடியும். இன்று நமது அரசியல் அரங்கில் தெற்றெனத் தெரிகிற உண்மை இதுவே. தேர்ந்த அரசியல் அறிவும், நீண்ட அநுபவமும் வாய்ந்த ஸ்ரீ மொரார்ஜி தேசாய், ஸ்ரீ நிஜலிங்கப்பா, ஸ்ரீ எஸ். கே. பாட்டீல் ஆகியோரும்கூட இதை உணரத் தவறி, வெற்றுக் கோஷங்களுக்கு அஞ்சி ஆட்பட்டது பரிதாபம்.

ஆயினும் ஸ்தாபன காங்கிரஸ் மாநாட்டில் கூறப்பட்ட விஷயங்களைவிட முக்கியமான ஓர் உண்மையை ஸ்ரீ நிஜலிங்கப்பா பம்பாயில் குறிப்பிட்டிருக்கிறார்.

''அரசியல் சாஸனம் அளிக்கும் ஜீவாதார சுதந்திர உரிமைகளை அழிக்க இந்த சர்க்கார் முற்பட்டிருக்கிறது. இது மக்களின் மாண்புக்கு இழைக்கப்படும் அநீதியாகும். தேச நலனை முன்னிட்டும், கட்சியின் நலனை முன்னிட்டும் நாம் இதனை எதிர்த்துப் போராடுவோம்'' என்று ஸ்ரீ நிஜலிங்கப்பா கூறியிருக்கிறார். ஸ்தாபன காங்கிரஸின் தலைமைப் பதவியிலிருந்து விலகியுள்ள பெருமதிப்புக்குரிய ஸ்ரீ நிஜலிங்கப்பாவின் இந்தத் தெளிவான கருத்தைத் தேசப் பற்றுள்ள அனைவரும் வரவேற்போம். ஸ்தாபன காங்கிரஸ் இந்தத் திசையிலேயே தனது பணியை வகுத்துக் கொள்ள வேண்டும் என வலியுறுத்துவோம். ஆளும் கட்சியின் வெற்று கோஷங்களுக்கு அஞ்சி சத்தியம் தம் பக்ஷத்தில் இருந்த போதிலும் தைரியமாய் எதிர்க்காமல் இந்திரா காந்தியின் கோஷங்களையே தாங்களும் கோஷமிட்டு எந்தவிதமான வெற்றியையும் ஸ்தாபன காங்கிரஸ் அடைய முடியாது. காலம் கடத்துவதில் பயன் இல்லை. அதனால் இந்திரா காந்திக்குத்தான் அனுகூலம் அதிகரிக்கும்.

(அடிப்படை:
**ராஜாஜி ''ஸ்வராஜ்யா''வில் எழுதியது.)**

# ராஜாஜியின் கருத்துக்கள்

பிரதம மந்திரி உள்பட எல்லா மத்திய மந்திரிகளின் பதவிகளுக்கும் ஹிந்தியில் நாமகரணம் செய்திருப்பதை ஏதோ ஒரு மகத்தான சாதனைபோல் வெளியிட்டுள்ளனர். பல பெரிய பிரச்னைகள் நம்மைச் சூழ்ந்துள்ள தருணத்தில் இதற்கு இவ்வளவு முக்கியத்துவம் தரத் தோன்றியதே ஆச்சரியமானது!

எகிப்தில் ஸதத் அவர்கள் நீக்கியுள்ள மந்திரிகளின் பதவிகளை அராபிய மொழியில் குறிப்பிட்டிருந்தால் நம்மில் யாருக்கேனும் விஷயம் புரிந்திருக்குமா? ஆயினும் ஹிந்தி வெறியருக்கு உலகம் கருங்விட்டதென்ற உணர்வு பிறக்கவில்லை. இந்திய தேச விவகாரங்களில் நமக்கு நன்கு பழக்கமான சர்வதேசியச் சொற்றொடர்களை விட்டு விட்டுக் குறுகிய மொழிப் பித்தைக் கலப்பது முன்னேற்றமல்ல; பிற்போக்குத்தனமேயாகும்.

இப்போது செய்துள்ள ஹிந்தி நாமகரணம் போதிய சிந்தனையுடன் செய்யப்படவுமில்லை. 'ஹோம் மினிஸ்டர்' என்பது 'உள்நாட்டு விவகாரங்களைக் கவனிக்கும் மந்திரி' எனப் பொருள்படுவது. அதை 'க்ருஹ மந்திரி' என்று மொழிபெயர்த்திருக்கிறார்கள். க்ருஹ மந்திரி என்றால் ஜாகை வசதி செய்து தரும் மந்திரி என்றே அர்த்தமாகுமேயன்றி, உள்துறை மந்திரி என்று ஆகாது.

★

தமிழ் நாட்டு கவர்னரை ராஜ பவனத்திலிருந்து வெளியேற்றுவதற்கு முதன் மந்திரி

## சரபேச்வர ஹோமம்

இரணியனைக் கொன்று உலகை உய்வித்த நரசிம்ம மூர்த்தியின் உக்கிரத்தைத் தணிப்பதற்காகப் பரமேசுவரன் கொண்ட திருக்கோலம் சரபமூர்த்தி எனப்படும். சரபம் என்பது நிகழ்கால உலகம் அறியாத ஒரு மிருகம். இந்த விலங்கின் வடிவைத் தரித்து, சிங்கப்பிரானின் சீற்றம் தணித்தார் சிவபெருமான். தஞ்சை மாவட்டத்தில் உள்ள திரிபுவனத்தில் சரபருக்குப் பிரசித்திபெற்ற சந்நிதி உள்ளது. சரபேசுவர உபாசனை மந்திர சாஸ்திரங்களில் மிகவும் போற்றப்படுவது. இம்மை — மறுமை இரு பயனும் அளிப்பதோடு, இடையூறுகளையும், சத்துருக்களின் தொல்லையையும் தீர்ப்பதில் சரப மந்திரம் விசேஷ சக்தி வாய்ந்ததாகக் கருதப்படுகிறது. இப்படிப்பட்ட உத்தமமான சரபேசுவர மந்திரத்தை லக்ஷம் ஆவிருத்தி ஜபித்து ஹோமம் செய்கிற திவ்வியப் பணியைப் புதுக்கோட்டையில் ஸ்ரீமத் சாந்தானந்தஸ்வாமிகள் நடத்தி வைக்கிறார்கள். ஜூன் மாதம் நாலாம் தேதியிலிருந்து ஜூலை முதல் தேதிவரை இருபத்தெட்டுநாட்களுக்குப் புதுக்கோட்டை அதிஷ்டானத்தில் லக்ஷ ஹோமம் நடக்கிறது. அன்பர்கள் கலந்து கொண்டு நலம் பெற வேணும். ஸ்ரீ எஸ். வைத்யநாத சாஸ்திரிகள், காரியதரிசி, ஸ்ரீ சத்குரு சதாசிவப் பிரம்மேந்திர சரஸ்வத்யவதூத ஸ்வாமி அதிஷ்டானம், கீழ ஏழாம் வீதி, புதுக்கோட்டை — 1 என்ற விலாசத்துக்கு ரூ. 15-ம், தங்களது விலாசமும் அனுப்பி வைப்பவர்களுக்குச் சரப ரக்ஷை அனுப்பி வைக்கப்படும்.



●

உத்தேசித்திருந்ததைப் பிரதமர் ஏற்க மறுத்து விட்டார். பிரதமரின் முடிவு சரியானது. இது குறித்து மகிழ்கிறேன். ராஜ பவனத்தின் விஸ்தாரமான மனையை அவசியமான நற்பணி எதற்கும் எடுத்துக் கொள்ளலாம். ஆயினும் அங்கு மிருகக் காட்சிச் சாலை அமைப்பது பற்றி யோசிப்பதற்கில்லை. உலகெங்கிலுமிருந்தும் முக்கியஸ்தர்களான விருந்தாளிகள் வந்து தங்குமிடம் ராஜபவனம். அங்கு மிருகக் காட்சிச் சாலைக்கே உரிய துர்நாற்றத்தைக் கிளப்புவது சரியல்ல.

★

மது விற்பனைக்கு விதித்த கலால் வரியை ஈடுகட்டுவதற்காகவே, ஆதியில் மதுவிலக்கை அமல் செய்த போது நான் விற்பனை வரியை ஏற்படுத்தினேன் என்றும், எனவே இப்போது மதுவிலக்கை ரத்து செய்தால் விற்பனை வரியையும் ரத்து செய்ய வேண்டும் என்றும் ஒரு வாதம் எழுந்துள்ளது.

இது விஷயமாக எனக்கு ஒருவர் கடிதம் எழுதியிருக்கிறார். வர்த்தக வரிகள் மந்திரி திரு ப. உ. ஷண்முகம் சமீபத்தில் திருப்பூர் கூட்டத்தில் பேசுகையில், மதுவிலக்கை முன்னிட்டு விற்பனை வரி விதிக்கப்படவில்லை என்று கூறியதை அவர் தமது கடிதத்தில் எடுத்துக் காட்டி, இது உண்மைக்குப் புறம்பானது என்று எழுதியிருக்கிறார். 1939ல் மதுவிலக்கு சிறிய அளவில் மேற்கொள்ளப்பட்டபோது நான் சிறிய அளவில் விற்பனை வரி விதித்ததையும், 1948ல் ராஜ்யம் முழுவதிலும் மதுவிலக்கு விஸ்தரிக்கப்பட்டபோது பதினேழு கோடி ரூபாய் நஷ்டம் ஏற்பட்டதால் விற்பனை வரி விகிதம் உயர்த்தப்பட்டதையும் அவர் நினைவூட்டுகிறார். எனவே, இப்போது மதுவிலக்கை ரத்து செய்வதுடன், விற்பனை வரியையும் ரத்து செய்ய வேண்டியது சர்க்காரின் தார்மிகக் கடமை என்கிறார். "இவ்விஷயத்தில் தங்கள் கருத்தைத் தெரிவித்தால் வர்த்தக சமூகம் தங்களிடம் நன்றி கொள்ளும்" என்று முடித்திருக்கிறார்.

இக்கடிதத்துக்கு என் பதில் வருமாறு: "நீங்கள் கூறுவது போல், மது விற்பனையில் கிடைத்த வருமானத்தை ஈடு செய்யவே விற்பனை வரி விதிக்கப்பட்டது. ஆயினும் அது விசாலமான அடிப்படையில் செய்யப்பட்ட ஏற்பாடு. மது வருமானத்தைச் சரிக்கட்ட வேண்டும் என்ற உடனடித் தேவைக்காக இவ்வரி விதிக்கப்பட்ட போதிலும், தனிப்பட்ட முறையிலேயே இவ்வாறு விற்பனைக்கு ஒரு வரி விதிப்பதற்கு நியாயமுண்டு.

"இவ்விஷயமாகப் பத்திரிகைகளுக்கு உரிய முறையில் எழுத உங்களுக்கு விருப்பம் இருந்தால் அவ்விதமே செய்யலாம். இவ்விஷயத்தில் என்னுடைய கருத்து யாதெனில், மதுக் கடைகளைத் திறப்பதால் ஏழைகளுக்குத் தவிர்க்க முடியாத ஒரு சபலம் உண்டாக்கப்பட்டு ஏராளமான குடும்பங்கள் துன்பத்தில் ஆழ்த்தப்படும் என்ற காரணத்துக்காகவே எதிர்ப்புக் கிளர்ச்சி நடத்த வேண்டும். இந்த விஷயத்தை, வருமான வரியை ரத்து செய்கிற போராட்டமாக மாற்றிவிடக் கூடாது. மதுவிலக்கை எடுத்தால் விற்பனை வரியையும் எடுக்க வேண்டும் என்று வர்த்தக சமூகம் கோருவது சரியாகாது. ஏனெனில், அப்படிச் செய்தால், தனது நலனை முன்னிட்டு மதுக் கடைகளை மீண்டும் திறப்பதை வர்த்தக சமூகம் மறைமுகமாக வரவேற்கிறது என்றே ஆகும்."

# என்ன சேதி?



## பிரியாவிடை

சர்தார் உஜ்ஜல் சிங் அவர்கள் தமிழ் மக்களிடம் உள்ளார்ந்த அன்பு செலுத்தி, தமிழ் மக்களின் மனமார்ந்த அன்பைப் பெற்றவர். காங்கிரஸ் ஆட்சி, தி. மு. க. ஆட்சி இரண்டிலும் நடுக்கண்ட நியாயம் அறிந்தவராக நற்பெயர் எடுத்தார். கவர்னர் பதவிக்குரிய கௌரவத்தைச் சிறப்புறக் காத்தார். பண்பு நிறைந்த சர்தார் உஜ்ஜல் சிங் அவர்கள் தமிழக கவர்னர் பொறுப்பை நல்ல முறையில் நிர்வகித்து விட்டு நம்மிடமிருந்து விடை கொள்கிறார். இச்சமயத்தில் அவர் நில வரம்புகளை மேலும் குறைப்பதன் அவசியத்தை எடுத்துக் காட்டியிருப்பது நடுநிலைமை வாய்ந்த ஓர் உண்மை நண்பரின் நல்லுரை என்று தமிழக அரசாங்கம் உணருமாக!

கவர்னர் அவர்களின் சகதர்மிணியான சர்தாரிணி உஜ்ஜல் சிங் தமிழகத்தின் சமூக வாழ்வுக்குச் சோபை ஊட்டி வந்தார். கவர்னரின் காரியம் யாவுக்கும் கை கொடுத்து வந்தார். இத்தம்பதியருக்கு அன்புடன் விடையளித்து அவர்கள் நாளும் வழிபடும் சீக்கிய வேதத்தின் இருவருளை வேண்டுகிறோம்.

## புதிய கமிஷனர்



சென்னை நகரத்தின் புதிய போலீஸ் கமிஷனராக நியமனம் பெற்றுள்ள ஸ்ரீ கே. ஆர். ஷெணய் அவர்களுக்கு வரவேற்புக் கூறி அவர் தமது பணியைச் சிறப்புடன் ஆற்ற வாழ்த்துகிறோம்.

# வருங்காலத்தவருக்கு வஞ்சனை செய்யலாமா?

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசார்ய ஸ்வாமிகள்

நமது பழைய சாஸ்திரங்களில் இல்லாத விஷயங்களே இல்லை. போஜராஜன் செய்துள்ள ஸமராங்கண ஸூத்திரம் என்ற நூலில், பலவிதமான மிஷின்கள் செய்யும் முறைகள் கூட உள்ளன. அதில் ஆகாய விமானத்தைப் பற்றிக்கூட வருகிறது என்றால் ஆச்சரியமாயிருக்கும். போஜன் இந்த விமானத்தைப் பற்றிய சித்தாந்த முறையை (Theory) மட்டுமே சொல்லிவிட்டு, "நடைமுறையில் இதைப் பண்ணும் வழியை நான் சொல்லாததால் எனக்கு அது தெரியாது என்று நினைக்க வேண்டாம். நடைமுறையைச் சொல்லி இந்த விமானம் செய்யப்பட்டால் ஜனங்களுக்குச் சௌகரியத்தைவிட அசௌகரியமே அதிகமாகும் என்றே சொல்லவில்லை" என்கிறார்.

ஆகாய விமானம், அணுசக்திக் குண்டு இவற்றையெல்லாம் நடைமுறைக்குக் கொண்டு வந்ததன் அனர்த்தத்தை நாம் உலக யுத்தத்தில் கண்கூடாகப் பார்த்து விட்டோம். அது ஒருபுறம் இருக்கட்டும்.

போஜன் சொல்லியிருக்கிற ஆகாய விமான 'தியரி'யைச் சில என்ஜினியர்களுடன் சேர்ந்து படித்துப் பார்த்தேன். பலூன், ஜோர்டான் என்ஜின் போன்ற ஒரு முறையை போஜன் சொல்கிறார் என்று தெரிய வந்தது.

பழைய காலத்தில் ஒவ்வொரு கலைக்கும், ஸயன்ஸுக்கும் தனித் தனி நூல்கள் இருந்தன. இந்த நூல்கள் ஒவ்வொன்றையும் ஒரு அத்தியாயமாகச் சுருக்கி 'பிருஹத் ஸம்ஹிதை' என்ற புத்தகத்தை வராஹமிஹிரர் எழுதியிருக்கிறார். கிட்டத்தட்ட 1500 வருஷங்களுக்கு முன் எழுதப்பட்ட இந்தப் புத்தகத்தில் தாவர சாஸ்திரம், மிருக சாஸ்திரம், பட்சி சாஸ்திரம், தாது சாஸ்திரம் இப்படி சகல விஷயங்களும் அடங்கியிருக்கின்றன.

பழங் காலத்தவர்களின் என்ஜினீயரிங் ஞானம் இன்றுள்ள நிபுணர்களையும் ஆச்சரியத்தில் ஆழ்த்துகிறது. டில்லியில் குதுப்மினாருக்கு அருகே அதைவிட மிகப் புராதனமான ஒரு மிகப் பெரிய இரும்பு துவஜஸ்தம்பம் துருப்பிடிக்காமல் இருக்கிறது. டாடா தொழிற்சாலையும், நவீன ஃபர்னஸும் இல்லாமல் இப்படிப்பட்ட தூணை எந்த உலையில் அடித்தார்கள், அதை எப்படி நிறுத்தினார்கள் என்று நிபுணர்களும் அதிசயிக்கிறார்கள். ஆவுடையார் கோயிலின் கொடுங்கையில் ஒரு காகிதத்தின் பருமனே இருக்குமாறு கல்லை இழைத்திருக்கிறார்கள். திருவீழிமிழலையில் உள்ள வௌவால் ஒட்டி மண்டபத்தின் பெரிய வளைவைக் கட்டி வைத்தவர்களின் என்ஜினீயரிங் ஞானம் அதிசயமானது.

இவற்றுக்கெல்லாம் ஆதார நூல்கள், சாஸ்திரங்கள் உள்ளன. ஆயிரம் பதினாயிரம் வருஷங்களாக — தலைமுறை தலைமுறையாக — ரட்சிக்கப்பட்டு நம் கைக்கு வந்துள்ளன. இந்த நாள் போல் அச்சுப் புஸ்தகம் போடத் தெரியாத காலங்களிலும் இவற்றை நம் முன்னோர்கள் எப்படியோ காத்து நம் வரைக்கும் தந்துவிட்டார்கள். இப்படி யுகாந்தரமாக வந்த சாஸ்திரங்களை எல்லாம் நமக்குச் சகல வசதி இருந்தும், அடுத்த தலைமுறைக்குக் காத்துத் தராமல், தொடர்ந்து வந்து கொண்டிருந்த இழையை அறுத்துவிடுகிற 'பாக்கியம்' நமக்கு ஏற்பட்டிருக்கிறது!

குருடன் ஒருவன் கையில் லாந்தருடன் போய்க் கொண்டிருந்தானாம். எதிரில் வந்த ஒருவன், "உனக்குத்தான் கண் தெரியவில்லையே, லாந்தர் ஏன் எடுத்து வருகிறாய்?" என்று கேட்டான். அதற்குக் குருடன், "எனக்குக் கண் இல்லாவிட்டாலும் உனக்குக் கண் இருக்கிறது அல்லவா? அதற்காகத்தான் இதை எடுத்து வருகிறேன். இல்லாவிடில் இந்த இருட்டில் நீயே என்மேல் தடுக்கி விழுந்திருப்பாய்" என்றானாம். அது போலவே பழைய சாஸ்திரங்கள் நமக்குப் புரியாவிட்டாலும், எதிர் காலத்தில் யாருக்காவது புரியலாம், பயனாகலாம் என்பதற்காவது அவற்றை நாம் ரட்சித்தாக வேண்டும். "வசதியே இல்லாத காலங்களில் யுகாந்தரமாக ரட்சிக்கப்பட்ட சாஸ்திரங்களை நமக்கு முன் தலைமுறையினர் எல்லா வசதியிருந்தும் காப்பாற்றாமல் அழித்து நம்மை வஞ்சித்து விட்டார்கள்" என்று வருங்காலத் தலைமுறையினர் நம்மைக் குற்றம் சாட்ட இடம் வைக்கலாமா?

பழைய காலங்களில் சாஸ்திர ரட்சணம் அரசர்களின் பொறுப்பிலிருந்தது. இப்போது ராஜாக்கள் இல்லை; ராஜ்ய சர்க்கார்கள் தாம் உள்ளன. அவற்றுக்கு நிம்மதியே இல்லை. ஒரு பக்கம் பாஷைச் சண்டை; ஒரு பக்கம் எல்லைச் சண்டை. இப்படிப் பல கஷ்டங்கள். அந்தக் காலத்தில் ஒரு ராஜாவுக்கும் இன்னொரு ராஜாவுக்கும் சண்டை நடந்தது என்றால் இப்போது ஒரு ராஜ்யத்துக்கும் இன்னொரு ராஜ்யத்துக்கும் சண்டை. ஒரு வர்க்கத்துக்கும் இன்னொரு வர்க்கத்துக்கும் சண்டை. எனவே அரசாங்கத்தை சாஸ்திர ரட்சணத்துக்கு எதிர்பார்த்துப் பிரயோஜனமில்லை. 'சுற்றுப்புறத்தில் எல்லாம் ஒரே பூசல்; குடும்பத்திலும் தொல்லை' என்று நாம் தட்டிக் கழிக்கக் கூடாது. வன விலங்குகளைப் பாருங்கள். சிங்கம் புலியை அடிக்கிறது; புலி மானை அடிக்கிறது. இருந்தாலும் காட்டிலே சிங்கக் குட்டியும் புலிக் குட்டியும் மான் குட்டியும் வளர்ந்து கொண்டும், விளையாடிக் கொண்டும்தான் இருக்கின்றன. அப்படி இருக்க நாமும் பழக வேண்டும். எத்தனை இடையூறு இருப்பினும் நமக்கு எதிர்காலத்தினரிடம் உள்ள கடமையையும் பொறுப்பையும் உணர்ந்து சாஸ்திரங்களை ரட்சித்துத் தரவேண்டும்.



# சில்லறை பற்றிய சில்லறைத் துணுக்குகள்



சாப்பிடுபவர்: என்னய்யா இது! மொத்தமா புட்பால் மாதிரி ஒரே உருண்டையா இலையிலே போடுறீங்க?

பரிமாறுபவர்: கறி, கூட்டு, பச்சடி, சாம்பார்னு நாங்க சில்லறை சில்லறையாப் பரிமாறுவதில்லே. எல்லாம் கலந்து ஒரே மொத்தம். அவ்வளவுதான்.



பெண்களுக்கு அப்பா: ஒரே முகூர்த்தத்திலே என்னுடைய ஆறு பெண்களுக்கும் கல்யாணத்தை நடத்தி விடுவதாகத் தீர்மானித்து விட்டேன்! எனக்குச் சில்லறை பிஸினெஸ்ஸே பிடிக்காது!



பஸ் கண்டக்டர்: கோச் பாக்டரிக்கு ஒரு டிக்கட்டுன்னுட்டு ஒரு ரூபா நோட்டைக் கொடுக்கிறியே! அங்கெல்லாம் தனியாப் போகக்கூடாது. துணைக்கு மூணு பேரைச் சேர்த்துக்க இந்தக் கூட்டத்திலே. பிடி நாலு டிக்கட். ஒரு ரூபாய் சரியாப் போச்சு!



"கீரை கட்டு என்ன விலை கிழவி?"
"ரூபாய்க்குப் பத்துக் கட்டு!"
"இந்தா! இரண்டு கட்டுக் கொடு!"
"பத்துக் கட்டுக்குக் குறைஞ்சு இங்கே சில்லறை வியாபாரம் பண்றதில்லீங்க?"



சில்லறைக்குத்தான் பஞ்சம்
சில நாளாகவே நான் பட்டினி.
மொத்தமா ஒரு ரூபாய் தர்மம் பண்ற
முதலாளிக்குக் கூடவா பஞ்சம்?

## சில்லறை அறிவிப்புகள் சில அபிவிருத்திகள்

**சில்லறைத் தட்டுப்பாடு தங்கள் ஒத்துழைப்பு தேவை**

**சரியான சில்லறை கொடுங்கள்**

**சில்லறை கிடையாது**

**சில்லறை இருந்தால் சாப்பிட வாருங்கள்**

| | | |
|---|---|---|
| காப்பி கப் | -- | 1-00 |
| போண்டா 2 | -- | 1-00 |
| தோசை | -- | 1-00 |
| இட்லி 2 | -- | 1-00 |
| பஜ்ஜி 1 பிளேட் | -- | 1-00 |

குறிப்பு: எந்த ஒரு அயிட்டத்தின் கூடவும், சாப்பிடுபவர்கள் விரும்பினால் வேறு இரண்டு அயிட்டங்கள் இலவசமாக வழங்கப்படும்.

கருத்து: பட்டினத்தார்




தன் அருகில் காலியாக இருந்த இடத்தில் வந்து அமரப் போன வாலிபனைக் கண்டதும் சட்டென்று எழுந்து கொண்டாள் ரேணுகா.

திடீரென்று உச்சந் தலையில் தடியால் ஓங்கிக் குத்தினாற் போல் அதிர்ந்து நின்றான் அவன். சட்டென்று அவன் விழிகள் ரேணுவின் மீது பதிந்து, தாழ்ந்தன. கனல் தெறிக்கும் அக் கருவிழிகளை நேருக்கு நேர் சந்திக்க இயலாமல் தோல்வியுற்ற பார்வையின் பாவத்தை மறைக்க, கைக்குட்டையால் முகத்தைத் துடைப்பது போல் பாவனை செய்தபடியே, "சாரி மேடம்! நீங்களே உட்கார்ந்து கொள்ளுங்கள்..." என்றான் அவன்.

அவளை ஏற இறங்க ஒரு முறை நோக்கிய ரேணுகாவின் முகத்தில் கோபம் குழம்பியது.

".....தேவையில்லை! நீங்களே உட்கார்ந்து கொள்ளலாம்......" அவளுடைய சொல்லின் சூடு அவனுக்கு உறைத்தது போலும்! பதில் பேசாமல் ஏக்கத்துடன் வேறு வழியின்றி ஆசனத்தில் அமர்ந்து கொண்டான்.

"அடி, அசட்டுப் பெண்ணே! இந்தக் காலத்தில் இதெல்லாம் யார் பார்க்கிறா?.....அதுவும் இந்தப் பட்டணத்திலே! நீ பாட்டுக்கு உட்கார்ந்துண்டிருக்க வேண்டியது தானே?"

முன் ஆசனத்தில் உட்கார்ந்திருந்த ரேணுவின் பாட்டி மெல்ல முணுமுணுத்தாள். அதைக் கேட்டு, அவள் பக்கத்தில் அமர்ந்திருந்த நடுத்தர வயது மாது ஒருத்தி, தனக்குள் சிரித்தபடியே ரேணுகாவைத் திரும்பிப் பார்த்தாள்.

அடி இதழ்களை அழுந்தக் கடித்து ஆத்திரத்தை அடக்கிக் கொண்டாள் ரேணுகா.

அந்த வாலிபனை நினைக்கையில், பரிகாசமும், பரிதாபமும் ஒருங்கே எழுந்தது பாட்டிக்கு. சரியாகத்தான் மூக்கறுப்புச் செய்தாள் ரேணுகா. நெருப்பு அல்லவா அவள்?

பாட்டியின் பார்வை ஒரு விநாடி ரேணுகாவின்மீது பதிந்தது.

எளிமையான தோற்றத்தில், அழகின் சிறப்பை மறைக்க அரும்பாடுபட்டது போன்ற அடக்கமான அலங்காரம். சாதாரண நூல் புடவை; முதுகை வளைத்து மூடிய முந்தானை. நடு வகிட்டுக்கு இரு மருங்கிலும் வளைவுகளுடன், இறுகப் பின்னலிடப்பட்ட நீண்ட கூந்தல் — அவிழ்த்து விட்டால் முழங்கால்வரை தோகையாய்ப் படரும் — இத்தனைக்கும் சிகரம் வைத்தாற்போல், நெற்றியிலும் வகிட்டின் ஓரத்திலும் மின்னும் குங்குமம்.

ஆபிசுக்குப் போய் உத்தியோகம் செய்யும் பட்டணத்துப் பெண்ணாய்த் தோன்றவில்லையே இவளைப் பார்த்தால்!

வீட்டில் பூவான பூக்கள் — ரோஜாவும் மல்லியும், கனகாம்பரமுமாய்ப் பூத்துச் சொரிகின்றன. இந்தக் காலத்தில் விதம் விதமாய்க் கொண்டை இனுசுகள்; கூந்தல் அலங்காரங்கள்.

ரேணுவுக்கு இவற்றிலெல்லாம் ஆசை இல்லையே? தன் தோற்றத்தில் அவள் தனிப்பட்ட அக்கறை காட்டுவதில்லை; எதிலும் ஆசையில்லாதவள் போல், பற்றற்று இருக்கிறாள்.

இந்த வயதிலேயே இப்படி ஒரு சுய கட்டுப்பாடா?

பஸ் நின்றது. முகத்தின் கடுகடுப்பு சற்றும் மாறாமல், ''... உம். இறங்குங்கள், பாட்டி!....'' என்றாள் ரேணுகா. பாட்டியின் பக்கத்து ஆசனத்தில் அமர்ந்திருந்த நடுத்தர வயது மாது, ஒதுங்கி, வழிவிட்டவள், திகைப்புடன் ரேணுகாவையும் பாட்டியையும் மாறி மாறிப் பார்த்தபடியே, ஆச்சரியத்தை அடக்க முடியாமல் வாய்விட்டுக் கேட்டே விட்டாள்!

'' இவர்கள் உங்கள் பாட்டியா ?''

''நம்ப முடியாத உண்மை!....'' இறுகப் பிணைந்திருந்த இதழ்களில், பலவந்தமாக வரவழைத்துக் கொண்ட இளநகையுடன் ரேணுகா மெல்லிய குரலில் பதிலிறுத்தாள். ஆம்! அவள் பேச்சைக்கூட அளந்துதான் பேசுவாள்! அழுத்தமான பெண்!

பெருமை நெஞ்சு கொள்ளாமல் பொங்கி வழிவதைப் பாட்டியின் பூரித்த முகம் எடுத்துக் காட்டிற்று. அவளுடைய இளமை...

அறுபது வயதாகப் போகும் தோற்றத்தைச் சிறிதுகூட அறிவிக்க இயலாத உடல் அமைப்பு; குங்குமப்பூ கலந்த பால் போன்ற மேனியிலும் முகத்திலும், இடம் பெறாத முதுமை: அங்கொன்றும் இங்கொன்றுமாக இப்போதுதான் இழையோட ஆரம்பித்திருந்த கூந்தல் நரை தெரியாமல் மூடி மறைத்துக்கொண்ட கொண்டை அலங்காரம்.

ரேணு!.... சாயலும் உருவமும் அவள் பேச்சும் அசல் பாட்டியைப் போலவேதான்... ஆனால்.... சுபாவம்...?

குப்பையும் கூளமும் நிறைந்த அறையை ஒழித்துப் பெருக்குகையில் அகப்படும் சாமான்களைப்போல், பாட்டியின் உள்ளத்தில் பழைய நினைவுகள் இடறின.

அப்போது பாட்டிக்கு ரேணுவைவிட ஐந்தாறு வயது குறைவாகத்தான் இருக்கும். வயசுக்கு மீறிய உடல் வாகு. வாழ்வின் நிலைவாயிலில் அடியெடுத்து வைக்கக் காத்து நிற்கும் பருவம். பத்து வயதில் — அக்கால வழக்கப்படி — விவாகமான பின்னர், மண வாழ்வின் வசந்தத்தை எட்டுவதற்கு, நாலைந்து வருஷங்கள் காத்திருக்க வேண்டியதாயிற்று. பாட்டியின் கணவர் அவளைவிடப் பன்னிரண்டு வயது பெரியவர். ஆடி, ஆறும் மாதம், தீபாவளி என்று மாதம் ஒரு பண்டிகையைச் சாக்கிட்டு மாப்பிள்ளையை அழைப்பார்கள். அவளைக் காணும் ஆவலில் அவரும் தட்டாமல் ஒவ்வோர் அழைப்பையும் ஏற்றுக் கொண்டு விஜயம் செய்வார்.

ஆனால், அந்தக் காலத்தில் எல்லாம் இப்போதைய நாட்களைப் போலப் புதுமணத் தம்பதிகளுக்கு இவ்வளவு சுதந்திரம் ஏது? காலையில் கல்யாணம் முடித்துவிட வேண்டியதுதான்; உடனேயே 'தேன் நிலவு' கிளம்பும் காலம் இது.

அந்த நாளில் அளவுக்கு மீறிய கட்டுப்பாடு. சாந்திக் கல்யாணம் ஆகு முன்பு கணவர் எதிரே வரக் கூடாது; அவர் முகத்தைக்கூடப் பார்க்கக் கூடாது; ஏன் — கணவர் காதுபடக் குரலைக் கூட வெளிக் காட்டக் கூடாது; ஆமாம்; பாட்டி காலத்திய பழைமைக் கட்டுப்பாடுகள் இவை.

திருமணமானபின், பருவமடையச் சில வருடங்கள்; அப்புறம் புக்ககத்தார் வீட்டுக்கு அழைக்கும் வரை சில வருடங்கள். இடையிடையே தவறாமல் மாப்பிள்ளை வந்து போவார். சுவை மிக்க இனிப்புப் பண்டத்தைக் கண்ணில் காட்டிக் காட்டி ஒளித்து வைத்த நிலை.

அவர் அங்கு வர நேர்ந்தபொழுதெல்லாம் எவரும் அறியாமல் சைகைகள் மூலம் உறவாடிக் கொள்ள ஆரம்பித்தார்கள் அவர்கள். அந்த உறவாடல் அவர்கள் பிரிந்ததும் மேலும் தாபத்தை வளர்க்கத்தான் உதவிற்று. நாளடைவில் அவர்களிடையே தைரியம் மெல்லத் தலைதூக்கலாயிற்று. திரை மறைவில் வைக்கப்பட்டிருக்கும் தின்பண்டத்தை உடனே எடுக்கத் துடிக்கும் குழந்தையைப் போல அவர்களிடையே ஆவல் மீதூறியது.

அடுத்த தடவைகளில் சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக் கொண்டு சில நிமிடங்கள் வீட்டிலேயே திருட்டுத்தனமாகச் சந்தித்துக் கொள்ள முற்பட்டார்கள் அவர்கள்.

'....ஆகா! இவ்வளவு அழகா இவளுக்கு!' என்று அவர் வியந்து மகிழ்ந்த சமயத்தில் 'இத்தனை கம்பீரமா இவருக்கு!' என்று அவள் பூரித்தாள். கல்யாணமாகியும் காதலர்களைப் போல வாழ்ந்தார்கள்.

அந்த வருடம்...

ஏதோ பண்டிகைச் சமயம். கூடவே ஒரு வாரம் லீவு போட்டு விட்டு அவர் வந்திருந்தார். இந்த ஒரு வாரத்தில் அவர்கள் எத்தனை தடவை சந்திக்க 'சான்ஸ்' கிடைக்குமோ என்று அவள் தனக்குத் தானே மனத்துக்குள் கணக்கும் கவலையுமாக மறுகிக்கொண்டிருந்தாள். அந்தத் தடவை அவர் அவளுக்கு வாங்கி வந்திருந்த பரிசு...

கைக்கு அடக்கமான பெட்டியுள் அழகிய சிறு செலுலாயிட் பொம்மை! ரகசியமாக அதை அவர் அவளிடம் கொடுத்தபோது அவளுக்கு வெட்கம் பிடுங்கித் தின்றது.

பண்டிகை முடிந்த மறுநாள்.

திடீரென்று அவள் அம்மா ஊருக்குப் புறப்பட வேண்டிய அவசியம் ஏற்பட்டு விட்டது. நெருங்கிய உறவினர் எவரோ 'போய் விட்டதாக'ச் செய்தி வந்தது.

அவளுக்கு உள்ளூற மகிழ்ச்சி. எனினும் அம்மா எதிரே அதை வெளிக் காட்டிக் கொண்டால் சும்மா விடுவாளா?

''...நீ ஊருக்குப் போனால் எப்படியம்மா? உன் மாப்பிள்ளை வேறே நாலைந்து நாட்கள் தங்கியிருப்பார் போலிருக்கு... என்னம்மா செய்யறது?.... உம்...''

மகிழ்ச்சியை மறைத்துக் கொண்டு கெஞ்சலும் கொஞ்சலுமாகத் தாயாரின் மடியில் முகம் புதைத்தபடியே விம்மினாள் அவள்.

''...அதுதானடி எனக்கும் புரியவில்லை. அப்பாவும் நானும் அவசியம் போயாகவேண்டிய நிர்ப்பந்தம். போகலையென்றால் அவர்கள் நாலு பேசுவார்கள். வந்த மாப்பிள்ளையைப் போகச் சொல்ல முடியுமா? என்ன செய்யறதுன்னு எனக்கும் புரியலே... நாலு பேர்

நாலு பேச இடம் வைக்கக்கூடாது பார்'' என்று அம்மா குமுறினாள்.

அவளுக்குச் சிரிப்புத்தான் வந்தது. அம்மாவுக்கு நாலு பேர்தான் உலகம். யார் அந்த நாலு பேரோ? அப்படிப் பேசுகிறவர்கள் 'நாலு' தானா பேசுவார்கள்? 'நானூறு' கூடப் பேசுவார்கள். நன்றாக நாக்கு வலிக்கும்வரையில் பேசட்டுமே?

துடிப்பின் எல்லையை எட்டிக் கொண்டிருந்த இள மனத்தின் நினைப்பு அவளுக்கு.

குமுறிக் குமுறி அம்மா தவித்தபோது அப்பா ஒரு முடிவை வெளியிட்டார். அம்மாவும் அப்பாவும் புறப்பட்டுப் போய் இரண்டு நாட்களில் திரும்பி விடுவது. அதுவரை மாப்பிள்ளைக்குத் தேவையானவற்றை — சாதம் போடுவது, வேண்டியதை எடுத்துக் கொடுப்பது முதலிய வேலைகளை அவளுடைய ஏழு வயதுத் தங்கை கவனித்துக் கொள்வது என்று தீர்மானம் செய்தனர். அரை மனத்துடன்தான் அம்மா புறப்பட்டுப்போனாள்.

சமையல் செய்து முடித்ததும் சமையல் அறைக்குள்ளிருந்தபடியே தங்கையிடம் ஒவ்வொரு பதார்த்தமாக எடுத்துக் கொடுப்பாள் அவள். பாவம், அச்சிறுமி தட்டுத் தடுமாறிக் கொண்டு பரிமாறுவதைக் கண்டு அவர் தம் அருகில் அவைகளை வைக்கச் சொல்லித் தாமே எடுத்துப் போட்டுக் கொண்டு சாப்பிடுவார்.

பதமான சூட்டில் வெந்நீரை விளாவி விளாவி, குளியலறையில் எடுத்து வைத்து விட்டுத் தங்கையிடம் சொல்லி யனுப்புவாள். மேல் துண்டும் சோப்புப் பெட்டியுமாய் அவர் அங்கே போகும்போது சமையலறை சன்னல் வழியே அவள் எட்டிப் பார்ப்பாள். அவர் மட்டும் இலேசுப்பட்டவர் இல்லையே? குறும்பு கொப்புளிக்கும் அவருடைய பார்வை அந்த சன்னல்மீது பதியும். சடக்கென்று மறைந்து விடுவாள் அவள்.

''...வெந்நீர் சுடுகிறது... ஒரு குடம் ஜலம் வேண்டுமே?....'' என்று அங்கிருந்தபடியே அவர் குரல் கொடுக்கும்போது அவள் தங்கை தூக்க முடியாமல் குடத்தைத் தூக்கிக் கொண்டு போவாள்.

''ஏன் உன் அக்கா கொண்டு வந்தால் என்னவாம்? நான் அவளைக் கடிச்சா முழுங்கிடப் போறேன்?'' என்பார் அவர். அதோடு மட்டுமல்லாமல் ''பாலுக்கும் பூனைக்கும் பாப்பா காவலாம்...'' என்று விஷமமாக அவளைப் பார்த்துச் சிரிப்பார்.

இரண்டாவது நாள் இரவுக்குள் அம்மா திரும்பி விட்டாள். அவளுக்கு அங்கே இருப்புக் கொள்ள வில்லையாம்.

அம்மா, அப்பாவை விட்டு மாப்பிள்ளை வீட்டாருக்குக் கடிதம் எழுதச்சொன்னாள். அவளை எப்போது வீட்டுக்கு அழைக்கப் போகிறார்கள் என்பதை அறிய அவளுக்கு ஆவல்.

கல்யாணமாகி மூன்று வருடங்கள். அப்புறம் பருவமடைந்த பின் ஒரு வருடம். இப்படி, கிட்டத்தட்ட நாலைந்து வருடங்கள் வீட்டிலேயே இருந்தாயிற்று. பிறர் பொருளைக் காலாகாலத்தில் ஒப்படைக்க வேண்டுமே?

மாப்பிள்ளை வீட்டிலிருந்து பதில் வந்தது. இன்னும் பதினைந்து தினங்களில் 'அந்த' சுபதினம் வரவிருந்தது.

## அச்சுப் பிழை அல்ல!



ஒரு நவீன திரைப்பட விளம்பரத்தை இவ்வாறு வெளியிட்டிருந்தார்கள்:

கவர்ச்சிக் காட்சிகள்!

புதுமுக நடிகையின் 'நைட் ஷோப்' நடனங்கள்!!

கும் கும் குத்துச் சண்டைகளினிடையே பெண்கள்!!!

நாணத் தவறாதீர்கள்!!!! - 'ஜெயந்தி'

திடீரென்று ஒரு நாள்...

அவளுக்கு ஒரே தலை சுற்றலாக இருந்தது. காலையில் வீட்டு வேலை செய்து கொண்டிருக்கையிலேயே மயங்கி விழ ஆரம்பித்தாள். 'பித்தமாக இருக்குமோ' என்று கைவைத்தியமாய் ஏதேதோ செய்து பார்த்தாள், அம்மா. அடுத்த சில தினங்களில் அவளுக்கு வாந்தியும் ஆரம்பித்து விடவே, மனத்தில் ஒருவித பயக் குறுகுறுப்புடன் அம்மா அவளை ஆஸ்பத்திரிக்கு அழைத்துப் போனாள்.

அம்மா பயந்தது உண்மையாயிற்று! அடிவயிற்றில் கூடை நெருப்பைக் கொட்டியது போல் துடிதுடித்துப் போனாள்.

''என்ன காரியம் செய்துட்டேடி பாவிப் பெண்ணே?... உன் சுழி உன்னைச் சும்மா இருக்க விடவில்லையா?...'' என்று ஆத்திரம் பொங்க, இன்னும் ஏதேதோ மகளைத் திட்டியவள், முடிவில் அவளைக் கட்டிக் கொண்டு கண்ணீர் உகுத்தாள்.

''பாலையும் பூனையையும் பக்கத்தில் வைத்துவிட்டுப் போனேனே பாவி!... என்னைத்தான் சொல்ல வேண்டும்...'' என்று தன்னைத் தானே நொந்து கொண்டாள்.

''அவர்தாம்மா... அவர்... எனக்கு... நான்....'' அவள் வார்த்தைகள் வெளி வராமல் தடுமாறினாள்.

''...ஆண் பிள்ளைகள் அப்படித்தான் இருப்பார்கள்.... பெண்ணுக்குப் புத்தி வேண்டாமா?... உன் புக்ககத்தார் உன்னை நம்பணுமே? உன்னைப்போல் மாப்பிள்ளையும் தம் தவற்றை ஒப்புக் கொள்வாரா? அப்படி அவர் செய்யாமல், 'இந்தப் பூனையும் பால் குடிக்குமா' என்று 'கம்'மென இருந்துவிட்டால், உன் நடத்தைக்கு மாசு கற்பித்து, குடியைக் கெடுத்து விடுவார்களேடி!... ஐயோ! என்னவெல்லாம் காத்திருக்கோ?...'' என்று அம்மா விளக்கமாக எடுத்துச் சொன்னபோதுதான் அவளுக்கு எல்லாமே புரிந்தது.

தன் தவற்றை உணர்ந்து கொண்ட அவள் பெரும் தவிப்பில் மூழ்கிப் போனாள். விளையாட்டாய் நினைத்தது விபரீதமாக உருவெடுத்து விடுமோ?

அவர் தைரியமாகத் தாம் அவசரப்பட்ட 'அந்த' விஷயத்தைத் தம் பெற்றோரிடம் ஒப்புக்கொள்வாரா? அல்லது அவமானமும் வெட்கமும் பயமுறுத்த, தமக்கு ஒன்றும் தெரியாது என்று அவளைக் கைவிட்டு விடுவாரோ?... ஐயோ! அப்படியாகி விட்டால் அவள் கதி?

மாப்பிள்ளை வீட்டாருக்கு அவள் நிலை தெரிய வந்தபோது அவர்கள் ஆகாசத்துக்

கும் பூமிக்குமாய் எகிறிக் குதித்தார்கள். தம் பிள்ளை அப்படிப்பட்டவன் அல்ல என்று சாதித்தார்கள். அவள்மீது ஏதேதோ அபவாதம் கூறினார்கள்.

ஆனால்...

அவன் செய்த பெரும் புண்ணியம் அவர் மட்டும் நேர்மை தவறவில்லை. தம் செய்கையைத் தைரியமாக ஒப்புக் கொண்டார். பெற்றோர்கள் அவரைப் பழித்தார்கள்; பகிஷ்கரித்தார்கள். சமுதாயம் தூற்றிற்று. ஊராரும் உறவினரும் ஒட்டாமல் எட்டி நின்றார்கள். சாஸ்திரோக்தமாகத் திருமணம் செய்து கொண்டவர்கள்தாம் என்றாலும் சம்பிரதாயத்தை மீறிவிட்டார்களே!

அவர் எதையும் பொருட்படுத்தாமல் அவளுடன் தனியாகக் குடித்தனம் நடத்த ஆரம்பித்தார். எப்படியோ தட்டுத் தடுமாறிப் பலரது ஏச்சுக்களையும் ஏளனங்களையும் சகிக்கப் பழகிக் கொண்டு, வாழ்வில் வளம் தேடிக் கொண்டார்கள் அவர்கள்.

பின்னே, குட்டி என்று ஒரு நிலைக்கு வந்தார்கள்; நாளடைவில் பேரன் பேத்தி என்று, அந்நிலையைத் தக்கவைத்துக் கொண்டார்கள்.

அது ஒரு தனிக் கதை.

இன்னும் அந்த நாலு பேர் — அவன் அம்மா வாய்க்கு வாய் கூறும் நாலு பேர் — அவர்களைப் பற்றி அவதூறு பேசிக் கொண்டுதான் இருக்கிறார்கள். தாழ்ந்தாலும் வம்பு; வாழ்ந்தாலும் வம்பு.

அன்று அவர்மட்டும் தம் தவற்றை மறைத்து அவள்மேல் அபாண்டம் சுமத்தியிருந்தால்?.. அவர் ஆண்; நினைத்திருந்தால் அப்படிச் செய்திருக்கவும் முடியும்!

இப்போது அதை நினைத்தாலும் கூடப் பாட்டியின் பாதாதி கேசம் ரத்தம் ஜிவ்வென்று பரவுகிறது.

எவ்வளவு கட்டுப்பாடுகள் இருந்தென்ன? தன் மனத்துக்குக் காவலிட்டுக் கொள்ளத் தவறிவிட்டானே, அவன்!

ரேணு இந்த நாளைய புதுமைப் பெண். படித்துப் பட்டம் பெற்றவள்; பல ஆண் பிள்ளைகளுக்கு நடுவே உத்தியோகம் பார்ப்பவளும்கூட. புதிதாக மணமான இளம் பெண்.

அன்று, பக்கத்து உறவினர் வீட்டு வைபவம் ஒன்றுக்குப் பாட்டியுடன் போய் வர வேண்டிய அவசியத்துக்காக ரேணு விடுமுறை எடுத்திருந்தாள். அநாவசியமாக ஓர் இடத்துக்கும் போக மாட்டாள் அவள். அன்று போயாக வேண்டிய நிர்ப்பந்தம் இருந்தது.

பாட்டி, தன் நகைகளுக்குப் பொருத்தமான புடவையைத் தேர்ந்தெடுப்பதில் மூழ்கியிருக்கையில், ரேணு தயாராகி, ஊஞ்சலில் அமர்ந்தபடியே பத்திரிகை படித்துக்கொண்டிருந்தாள்.

"உனக்குக் கடுதாசு வந்திருக்கு ரேணு!" என்றபடியே அவளிடம் ஒரு கவரைக் கொண்டு வந்து கொடுத்தாள் பாட்டியின் மருமகள் — ரேணுவின் தாயார்.

ரேணு ஊஞ்சலிலிருந்தபடியே நிதானமாகக் கடிதத்தைப் பிரித்தாள். என்ன பெண்ணடி இவள்! கணவனுடைய கடிதத்தைப் படிக்கிறாள்; மகிழ்ச்சியும், ஆர்வமும் குதூகலிப்பும் கழியாட வேண்டாமோ அந்த மலர்முகத்தில்?

ராணுவத்தில் பெரிய பதவி வகிப்பவன் ரேணுகாவின் கணவன். சென்ற வருடம்தான் அவனுக்கும் ரேணுகாவுக்கும் திருமணம் நடந்தது. பதினைந்து நாட்கள் விடுமுறையில் விவாகத்தை முடிக்க வேண்டி வந்திருந்தான்.

எதிர்பாராத விதமாய், திருமணத்தன்று மாலை, அவருக்கு ஒரு தந்தி வந்தது. அன்று மாலையே 'டியூட்டி'க்குத் திரும்ப வேண்டிய அவசியத்தை அறிவுறுத்தும் அவசரத் தந்தி.

இந்தக் கால வழக்கப்படி, அன்றைய இரவே — அதாவது திருமணத்தன்று இரவே புதுமணத் தம்பதிகள் ஒன்றுகூட நேரம் பார்த்திருந்தார்கள். அதற்கான ஏற்பாடுகளும் விமரிசையாய் நடந்து கொண்டிருந்தன. சிரிப்பும் கேலியுமாகத் தோழிகள் ரேணுவைக் 'கோட்டா' செய்து கொண்டிருக்கும் சமயம்.

உடனே ஊருக்குப் புறப்படத் தயாரான மாப்பிள்ளையைக் கண்டு பாட்டி உட்பட எல்லோருக்கும் மிகுந்த ஏமாற்றம்; கவலை; வேதனை. ஆனாலும் வேறு வழியில்லாத நிலையில் மாப்பிள்ளையின் பிரயாணத்துக்கான ஆயத்தங்களைக் கவனிப்பதில் ஈடுபட்டார்கள்.

மனைவிக்கும் மற்றவர்களுக்கும் ஆறுதல் கூறிவிட்டுக் கடமை வீரனாகப் புறப்பட்டான் ரேணுவின் கணவன்.

ரேணு ஏற்கெனவே பார்த்துக்கொண்டிருந்த வேலையைத் தொடர்ந்து பார்த்து வரட்டும் என்று முடிவாயிற்று. மருந்துக் கம்பெனி ஒன்றில் மதிப்பான பதவி வகித்துக் கொண்டிருந்தாள் அவள். தனக்குத் தானே வேலியிட்டுக் கொண்டு உடலையும் உள்ளத்தையும் எவ்வளவு கட்டுப்பாட்டுடன் வைத்திருக்கிறாள்! ரோஜாவைப் போன்ற மென்மையான இதயம் கொண்டவள்தான். ஆனால் அதைச் சுற்றியுள்ள முட்கள்!

"என்னடி பெண்ணே? என்ன எழுதியிருக்கிறான்?" என்று கேட்டாள் பாட்டி.

பாட்டிக்கு எப்பொழுதுமே உணர்ச்சிகளை அடக்கத் தெரியாது. எதிலும் ஓர் அவசரம்; படபடப்பு. ஆனால் ரேணுவோ? — ஓட்டுக்குள் நத்தை போல உணர்ச்சிகளை அடக்கும் பத்திரம்; அதுவே அவளுடைய பவித்திரம்.

"லீவு கிடைக்க இன்னும் ஆறு மாதங்கள் ஆகலாம் என்று எழுதியிருக்கார் பாட்டி!"

பாட்டியின் முகத்தில் சஞ்சலம்; ரேணு எவ்விதச் சலனத்தையும் வெளிக்காட்டவில்லை.

"ஆறு மாதங்கள் என்ன, ஆறு வருஷங்கள் கூட நீ காத்திருப்பாயடி பெண்ணே!" என்று தன்னுள் எண்ணினாள் பாட்டி.

மனமே காவலாகிக் காத்து நிற்கையில், மனிதர்களுடைய சட்ட திட்டங்களோ மற்றவர்களுடைய கட்டுப்பாடோ தேவையில்லைதான்; தவிர, அளவுக்கு மீறிய கட்டுப்பாடுகளால் மனம் தறிகெட்டுத்தான் ஓடுகிறதோ?

மனத்தை அடக்கும் திறன் மட்டும் இருந்தால் போதும்; எந்தக் காலத்திலும் வெற்றி காண முடியும்! சுய கட்டுப்பாட்டுடன் கூடிய துணிவும் நம்பிக்கையுமே வளமான வாழ்வுக்கு அடிகோலுகின்றன.

அந்தக் காலத்தில் பாட்டியைப் போன்றவர்களும் இருந்திருக்கிறார்கள்; இந்தக் காலத்தில் ரேணுவைப் போன்றவர்களும் இருக்கத்தான் செய்கிறார்கள்!

காலம் என்ன செய்யும்?

# ஆயிரத்தைக் கண்டவர்

**பௌ**பரீஸ் சாலை வழியே சி.ஐ.டி. நகர் முதல் தெருவிலுள்ள டாக்டர் ராமமூர்த்தியின் இல்லத்துக்குச் சென்றிருந்தேன். அன்று ஞாயிற்றுக்கிழமை. மாலை நேரம். டாக்டர் ராமமூர்த்தி அவர்களுடன் பேசுவதற்குச் சிறிது நேரம் கிடைக்கும் என்னும் நம்பிக்கையுடன் சென்றால், என்ன ஏமாற்றம் !

விடுமுறை நாளில், மாலையில்கூட, பலவித 'பிலிம்'களை, அட்டையில் 'ஸ்லேடு' போலப் பொருத்தி, ஏகாக்கிரக சிந்தனையுடன் பார்த்துக் கொண்டிருந்தார் ! வெகு நேரம் கழித்தே அவர் கவனத்தைக் கவர முடிந்தது.

''இந்த வாரக் கடைசியில் எடின்பரோ பயணம். அங்கே இரண்டு மாதங்கள் பேராசிரியராகப் பணி புரியவிருக்கிறேன். அதற்கான சில ஏற்பாடுகள் செய்து கொண்டிருக்கிறேன்...எல்லாம் பல மனிதர்களின் மூளைப் படங்கள்'' என்றார் புன்சிரிப்புடன்.

இந்தியாவிலேயே முதன் முதலாக, இருபது ஆண்டுகளுக்குமுன் சென்னையில்தான் நரம்பியல் பிரிவு தோற்றுவிக்கப்பட்டது. அரசினர் பொது மருத்துவமனையில் உள்ள நியூராலஜி பிரிவு சிகிச்சைக் கூடத்திலிருந்து ஆயிரக்கணக்கானவர்கள் நலம் அடைந்து திரும்புகிறார்கள். வாரம் ஒன்றுக்குப் பதினைந்து (மேஜர்) பெரிய ஆபரேஷன்கள் நடைபெறுகின்றன. ஒவ்வோர் ஆபரேஷனுக்கும் ஐந்து மணி நேரம் ஆகிறதாம். மூளை சம்பந்தப்பட்ட ஆபரேஷன்களை, இந்தியாவிலும் அயல் நாடுகளிலும் நிறம்பச் செய்து பலருக்குப் புதுவாழ்வு தந்திருப்பவர் டாக்டர் ராமமூர்த்தி.

பல முறை வெளிநாடுகளுக்குச் சென்று திரும்பியவர் என்பது மட்டுமல்ல, பல வெளிநாட்டு மருத்துவச் சங்கங்களுடன் தொடர்பு வைத்திருப்பவர். மேலும் நரம்பு சம்பந்தப்பட்ட பல வைத்திய சஞ்சிகைகளுக்கு ஆலோசனைகள் கூறும் ஆசிரியர் குழுவிலும் இடம் பெற்றிருக்கிறார் !

''அதிகமாகப் படிக்கும் மாணவன் மூளைக்கு வேலை அதிகம் கொடுப்பவன் ஆகியோரிடம் சிலர், 'இப்படி ஓயாமல் மூளைக்கு வேலை கொடுத்தால், மூளை குழம்பும்' என்று பயமுறுத்துகிறார்களே, இதற்கு விளக்கம் கூறுங்கள் !''

''மூளைக்கு எவ்வளவு வேலை கொடுத்தாலும் ஒன்றும் ஆகாது. எவ்வளவுக்கெவ்வளவு மூளைக்கு வேலை கொடுக்கிறோமோ அவ்வளவுக்கு நல்லதே தவிர கெடுதல் இல்லை. கத்தி தீட்டத் தீட்டக் கூர்மை ஆகிறதே, அதே போலத்தான் — புத்தியும். காந்தி, நேரு, சர்ச்சில் — இவர்களெல்லாம் ஓயாமல் மூளைக்கு வேலை கொடுத்தவர்கள். ஓயாமல் மூளைக்கு வேலை கொடுத்தால் மூளை குழம்பும் என்பது விஞ்ஞான ரீதியாகச் சரியல்ல. மனக்கவலை மிகுந்தால்தான் மூளையைப் பாதிக்கும், கவலைதான் கூடாது.''

**நரம்பு மண்டலம் நலமாய் இருக்க...**

'' நீங்கள் செய்த ஆபரேஷன்களில் குறிப்பிடத் தக்க ஒன்றைக் கூற முடியுமா?''

''திரு கிருஷ்ண மேனன் பாதுகாப்பு மந்திரியாக இருந்தபோது, புதுடில்லியில் ராணுவ ஜெனரல் ஒருவர் நோய்வாய்ப்பட்டு அவதிப்பட்டார். தீவிர தலைவலிக்குப் பிறகு ஒரு பக்கம் கைகால் பலமற்று நினைவு இழந்தார். சென்னையில் சிகிச்சை பெற வேண்டுமென நேருவிடம் தெரிவித்து, ஜனாதிபதியின் தனி விமானமான 'ராஜ ஹம்சம்' விடியற்காலை ஐந்து மணிக்குச் சென்னைக்கு வந்திறங்கிற்று. அந்த ஜெனரலைப் பரிசோதித்ததில், மூளைக்கு அருகில் ரத்தம் கட்டியிருந்தது கண்டுபிடிக்கப்பட்டு, ஆபரேஷன் நடந்தது. காலை ஒன்பதுக்குள் ஆபரேஷன் முடிந்து, நினைவு திரும்பியது. சிகிச்சைக்குப் பிறகு பதவி உயர்வு பெற்று, ஐந்து வருஷங்களுக்கு முன்பு ஓய்வு பெற்றார் !......

''ஒரு நோயாளி சிகிச்சை பெற்று நல் வாழ்வு பெற்றால், அதற்கு நான்தான் காரணம் என்று சொல்ல முடியாது. நோய் குணமடைந்தால், அந்த வெற்றி என்னுடன் ஒத்துழைக்கும் பல பணியாளர்களுக்கும், மருத்துவத் துறைக்கும்தான் உரியது!....'' எனவும் தெரிவித்தார்.

''மூளை ஆபரேஷன் மூலம் கண் பார்வை இழந்தவருக்குப் பார்வை தரலாம்; கால்கள் முடங்கிப் போனவரை முதுகுத் தண்டு ஆபரேஷனால் நடக்க வைக்க முடியும்!'' என்கிறார் டாக்டர் ராமமூர்த்தி.

ராமமூர்த்தியின் காரியாலய அறையில், சுவரில் தொங்கும் ஓர் அட்டையில் காணப்படும் வாக்கியம்: The man who cannot afford to make a mistake. அவரிடம் மருத்துவம் பயிலும் மாணவர்களுக்குத் தென்படும்படியாக இது மாட்டப்பட்டிருக்கிறது.

''மூளை ஆபரேஷன்போது ஒரு தவறு செய்தாலும் போச்சு; அப்புறம் சரிப்படுத்திவிடலாம் என்கிற பேச்சுக் கிடையாது! இதைத்தான் எச்சரிக்கை செய்வதைப் போல் எழுதி வைத்திருக்கிறேன்'' என்றார்.

''சிரசாசனம் செய்வது பற்றி உங்கள் கருத்து?''

''செய்யலாம். தகுந்த யோகாசன நிபுணர் மூலம் அப்பியாசம் பெற்று, முறையோடு செய்ய வேண்டும்!''

அரை நூறு வயதை அடைய இரண்டு ஆண்டுகள் இருக்கின்றன. அதற்குள் ஏராளமான பட்டங்களையும் பாராட்டுதல்களையும் பெற்றுவிட்டார். வடமொழியில் பாண்டித்தியம் பெற்றிருப்பதால் யோக சாஸ்திர ஆராய்ச்சியையும் மேற்கொண்டிருக்கிறார்.

பேட்டி:
ஏ. சுவாமிநாதன்



# கவிதை பிறந்த கதை

தம் இல்லத்துக்குத் 'தமிழ்க் குடில்' என அழகிய பெயர் சூட்டிய புத்தனேரி சுப்பிரமணியம் 'பாட்டு எப்படிப் பிறந்தது?' என்றால் பாட்டாகவே கும்மாளம் போட்டுப் பதில் சொல்கிறார்:

"பாட்டு வந்தது - முதல்
பாட்டு வந்தது
பண்கலந்து புதிய தாளம்
போட்டு வந்தது!
காட்டு மல்லி பூப்பது போல்
பாட்டு வந்தது."

என்று தொடங்கிக் கவிஞர் மேலும் சொல்கிறார்:

"குயவன் செய்த முதல் குடம்
போல் பாட்டு வந்தது!
குளிர்ந்தகால் முதல் மழை
போல் பாட்டு வந்தது!
கைக்குழவியின் கனிமொழி
போல் பாட்டு வந்தது!
கனிமரத்தின் முதல்கனி
போல் பாட்டு வந்தது!"

என்றெல்லாம் உணர்ச்சி பொங்க வர்ணிக்கிறது இவரது கவியுள்ளம்.

சில ஆண்டுகளுக்கு முன் கடலும் புயலும் வெறி கொண்டு தனுஷ்கோடியைத் தாக்கிச் சீரழித்த செய்தியைக் கேட்ட மாத்திரத்தில் கவிஞரது உள்ளம் புயல் வேகத்தில் குமுறி எழுந்தது: சொல்லடி கொடுத்துக் கடலின் வெறியைச் சாடியது!

"தென்கடலே வன்கடலே
தீய வெறிக் கடலே!
நின்கொடுமை எண்ணுகையில்
நெஞ்சம் கொதிக்கிறதே!"

'நன்னீரோ நீயே!
நலிக்கும் உவர்நீரோ?
விண்ணதிரக் கொந்தளித்து
விசித் தமிழ்மண்ணை
உண்ணும் பசித்தீயை
உன் வயிற்றில் ஏன்
வளர்த்தாய்?"

என்று கேட்டுவிட்டுக் கவிஞர், பழைய சம்பவத்தை அதற்கு நினைவூட்டுகிறார்:

"பண்டுநீ தென்குமரிக்
கண்டமதை உண்டவெறி
மண்டியதால் மீண்டும் இந்த
மண்ணுசை கொண்
டனையோ!"



அப்பாலோ - 11 விண்வெளி வீரர்கள் வெற்றிகரமாகச் சந்திரனில் அடியெடுத்து வைத்த விந்தையின் நேர்முக வர்ணனையை வானொலியில் இடைவிடாது கேட்டுக் கொண்டிருந்தார் கவிஞர். விண்வெளி வீரர்கள் மூவரும் சந்திரனில் அடியெடுத்து வைத்து விட்டார்கள் என்ற செய்தி அறிவிக்கப்பட்டவுடனே துள்ளிக் குதித்தார் கவிஞர். 'நிலவில் மனிதன்' என்ற கவிதையும் துள்ளி வந்தது:

" மனிதன் மிக உயர்ந்தான்
வரலாறு காணாத
தனிவெற்றிச் சின்னமெனச்
சந்திரனைக் கண்டுவிட்டான்!"

என்று எக்காளமிட்டது அவரது கவியுள்ளம்.

" மேல்வானுக் கப்பாலே
மேல்நோக்கி அப்பாலோ
பதினொன்றின் புதுப்பாய்ச்சல்
பகுத்தறிவின் எதிர்நீச்சல்!
உயர்நோக்கில் மனம்
வைத்தார்!
உயிர்ப் பணயம் தினம்
வைத்தார்!
அமரிக்கர் விண்வீரர்
அம்புலியில் கால் வைத்தார்!"

விந்தையடா விந்தை, விஞ்ஞானப் பெருவிந்தை என்று கவிஞர் வியந்து போற்றுகிறார்.

இந்தக் கவிதையை அமெரிக்கத் தூதரகத்தில் மொழி பெயர்த்து, விண்வெளி வீரர்களின் பார்வைக்கு அனுப்பியதுடன் கவிஞருக்குப் பாராட்டுக் கடிதமும் எழுதினார்கள்.

புத்தனேரிக் கவிஞர், டி. கே. எஸ். சகோதரர்களுடன் சிங்கப்பூர் — மலேயாவில் சுற்றுப் பயணம் செய்யும் போது ஒவ்வொரு ஊரிலும் நிகழ்ந்த வரவேற்பு நிகழ்ச்சிகளில் இவர் இயற்றிய 'இடீர்' வெண்பாக்களை அவ்வை டி. கே. சண்முகம் இசையோடு பாடிக் காட்டி மக்களுக்குப் பரவசமூட்டுவார்.

இக் குழுவினருக்கு மலேயாவில் மூவார் என்னும் ஊரில் உள்ள சன்மார்க்க சங்கத்தார் வரவேற்புத் தேநீர் விருந்து வைத்தனர். 'டின்'

## டின் பாலும் இன் பாலே!

பாலில் தேநீரைச் சுவையாகத் தயாரித்திருந்ததானது கவிஞரைக் கவர்ந்தது. உடனே ஒரு வெண்பா பிறந்தது:

" அன்பால் அளிக்கிறபால்
'டின்'பாலும் இன்பாலாந்
தென்புதரும் பண்பால்
தேநீர்ப்பால்! - என்பதனை
மூவாரில் சன்மார்க்க
சங்கத்தின் தேநீரில்
நாவாரக் கண்டறிந்தேன்
நான்!"

இத் திடீர் வெண்பாவை டி. கே. சண்முகம் கவிச்சுவையும் நகைச்சுவையும் ததும்பப் பாடியபோது, கூடியிருந்தோர் அனைவரும் பரவசமடைந்து பாராட்டினர்.

- பேட்டி: பி. வி. ராகி



## எட்டாம் அத்தியாயம்

# அந்தகாரம்

இருட்டறைக்குள் இருந்த மகுடபதிக்கு ஹாலில் நடந்த பேச்சு வார்த்தை யெல்லாம் நன்றாய்க் காதில் விழுந்தன. குரலிலிருந்து, யார் யார் பேசுகிறார்கள் என்பதையும் ஊகித்துக் கொண்டான். செந்திரு கொஞ்சமும் பயப்படாமல் பேசிய தீரம் நிறைந்த மொழிகள் அவனுடைய காதில் விழுந்த போதெல்லாம் அவனுக்கு மயிர்க்கூச் செறிந்தது. அந்தச் சமயம் செந்திரு சாதாரணப் பெண்ணாகவே அவனுக்குத் தோன்றவில்லை. காவியங்களிலும் இதிகாசங்களிலும் வர்ணிக்கப்படும் வீர நாரீமணியாகவே தோன்றினாள். இவளுக்காக ஓர் உயிரை அல்ல, நூறு உயிர் ஒருவனுக்கு இருந்தால் அவ்வளவையும் கொடுக்கலாம் என்று நினைத்தான். ஓடைக் கரைக் காட்சியும், அங்கே அவளுக்குத் தான் கொடுத்த வாக்குறுதியும் ஞாபகம் வந்தன. அந்த வாக்குறுதியை இத்தனை நாட்களும் நிறைவேற்றாம விருந்ததை எண்ணிய போது, வெட்கத்தினால் அவனுடைய உள்ளம் குன்றியது. அதற்கெல்லாம் இப்போது பரிகாரம் செய்து விட வேண்டுமென்றும், இந்த இரக்கமற்ற அரக்கர்களிடமிருந்து அவளை எப்படியாவது காப்பாற்ற வேண்டும் என்றும் உறுதி கொண்டான். இப்பேர்ப்பட்ட ஆபத்தான சமயத்தில், தன்னை அந்த வீட்டில் கொண்டு வந்து சேர்த்த தெய்வச் செயலை எண்ணி அதிசயித்தான் — இப்படியெல்லாம் பலவித எண்ணங்கள் அவனுடைய உள்ளத்தைக் குழப்பினவே தவிர, செந்திருவை எப்படி இவர்கள் கையிலிருந்து தப்புவிப்பது என்பதற்கு மட்டும் ஒரு யோசனையும் புலப்படவில்லை.

இந்த நிலைமையில்தான், தங்கசாமிக் கவுண்டர் பிரம்பினால் செந்திருவை அடிக்க, அவள் வீரிட்ட குரல் மகுடபதியின் காதில் விழுந்தது. பிறகு அவனால் அந்த இருட்டறையில் சும்மா இருக்க முடியவில்லை. கதவைத் திறந்துகொண்டு ஓடி வந்தான்.

அறைக்குள்ளிருந்து ஓடி வந்த மகுடபதியைப் பார்த்ததும், தங்கசாமிக் கவுண்டருக்கு ஏற்பட்ட பிரமிப்பையும் கோபத்தையும் சொல்லத் தரமல்ல. "இதெல்லாம் நிஜமாக நடப்பவை தானா? இந்திர ஜாலக் கனவா?" என்று சந்தேகப்பட்டவர்போல், அவர் கள்ளிப்பட்டிக் கவுண்டரைப் பார்த்தார்.

"தங்கசாமி! நான் சொன்ன போது நீ நம்பவில்லை. இப்போது தெரிந்து கொண்டாயா! சிநேகிதப் பெண்ணைப் பார்க்க வந்தது என்பதெல்லாம் பொய் என்று தெரிகிறதா?.." என்றார் கார்க்கோடக் கவுண்டர்.

தங்கசாமிக் கவுண்டரின் கண்களில் தீப்பொறி பறந்தது. 'பாவி, என்ன காரியம் செய்தாய்? குலத்தைக் கெடுக்

# மகுடபதி

## அமரர் கல்கி

கவா நீ வந்தாய்?'' என்று சொல்லி அவர் மறுபடியும் செந்திருவை நோக்கிப் பிரம்பை ஓங்கினார்.

அப்போது சில நிமிஷ நேரம் அந்த ஹாலில் பெருங் குழப்பம் உண்டாயிற்று.

மகுடபதி ஓடி வந்து, தங்கசாமிக் கவுண்டருடைய கைப் பிரம்பைப் பிடிக்க முயன்றான். பெரியண்ணன் குறுக்கே வந்து, மகுடபதியைப் பிடித்து இழுத்தான். ''பாட்டா! நீ சும்மா இரு. நீ ஒரு பேடி. ஒரு சிறு பெண்ணைப் பிரம்பால் அடிக்கும் போது நீ பார்த்துக் கொண்டு நிற்கிறாய். என்னையும் சும்மா இருக்கச் சொல்கிறாயா?'' என்று மகுடபதி சொல்லிக் கொண்டே, பெரியண்ணனிடமிருந்து திமிற முயன்றான். பெரியண்ணன் அவனை இன்னும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். இரண்டு பேரும் கட்டிக் கொண்டு கீழே விழுந்தார்கள். பெரியண்ணனுடைய தலை அரிக்கன் லாந்தர் மீது படாரென்று மோதிற்று. அரிக்கன் லாந்தர் கவிழ்ந்து அவிந்தது. ஒரு நிமிஷம் அந்த ஹாலில் இருள் சூழ்ந்தது.

செந்திரு, ''ஐயோ! ஐயோ!'' என்று அலறினாள்.

பளிச்சென்று டார்ச் லைட்டின் வெளிச்சம் அடித்தது. கார்க்கோடக் கவுண்டரின் கையிலிருந்துதான் டார்ச் லைட் பிரகாசித்தது. வெளிச்சம் பெரியண்ணன்—மகுடபதியின் மேல் விழுந்தது. பெரியண்ணன் பிரக்ஞையற்றுக் கிடந்தான். மகுடபதி திகைப்புடன் சுற்றுமுற்றும் பார்த்தான்.

கார்க்கோடக் கவுண்டரின் கர்ண கடூரமான குரல், ''தங்கசாமி! அந்தப் பையனைச் சோபா காலோடு சேர்த்துக் கட்டு'' என்று சொல்லியது அவன் காதில் விழுந்தது.

பெரியண்ணன் கீழே பிரக்ஞையற்றுக் கிடப்பதைப் பார்த்துச் செந்திரு அலறிக் கொண்டு அவன் அருகில் வந்து முகத்தை உற்று நோக்கினாள்.

திகைத்துப் போய் உட்கார்ந்திருந்த மகுடபதியைக் கார்க்கோடக் கவுண்டரும் தங்கசாமிக் கவுண்டரும் பிடித்துக் கரகரவென்று இழுத்துக் கொண்டு வந்து சோபாவின் காலோடு சேர்த்துக் கட்டினார்கள். மகுடபதி அவர்களிடமிருந்து தன்னை விடுவித்துக் கொள்வதற்குச் செய்த முயற்சி ஒன்றும் பலிக்கவில்லை.

செந்திரு பெரியண்ணனுடைய மூக்கினருகில் விரலை வைத்துப் பார்த்தாள். மூச்சு வருவது தெரிந்ததும் கொஞ்சம் தைரியம் உண்டாயிற்று. முகத்தில் தெளிக்கத் தண்



ணீர் இருக்கிறதா என்று திரும்பிப் பார்த்தாள். மருடபதி சோபாவின் காலில் கட்டுப்பட்டிருப்பதையும், அவன் பக்கத்தில் இரண்டு கவுண்டர்களும் நிற்பதையும் கண்டாள். கார்க்கோடக் கவுண்டரின் கையிலிருந்த டார்ச், கட்டுப்பட்டிருந்த மருடபதியின் மேல் பிரகாசித்துக் கொண்டிருந்தது. மருடபதியின் அழகிய முகம் அப்போது மிகவும் பயங்கரத் தோற்றமடைந்திருந்தது. அளவில் அடங்காத கோபத்தினுலும் 'ஆத்திரத்தினுலும்' அவன் முகத்தின் நரம்புகள் எல்லாம் புடைத்திருந்தன. நெடிய பெருமூச்சு வந்து கொண்டிருந்தது. கண்கள் தணலைப் போல் சிவந்திருந்தன.

''பேடிகளா! என்னை ஏன் கட்டிப் போடுகிறீர்கள்? ஆண் பிள்ளைகளாயிருந்தால் கட்டை அவிழ்த்து விடுங்கள். இப்படிப்பட்ட அக்கிரமங்களை ஏன் செய்கிறீர்கள்? ஆகா! இந்தப் பாரத தேசத்தில் மகாத்மா காந்தியைப் போன்ற உத்தமரும் பிறந்தார் — உங்களைப் போன்ற பாதகர்களும் பிறந்திருக்கிறார்களே!....'' என்றான் மருடபதி.

''அடே! நிறுத்துடா! உன் அதிகப் பிரசங்கத்தை!'' என்று சீறினுர் கார்க்கோடக் கவுண்டர். மேலும் ஏளனம் செய்யும் குரலில் அவர் கூறினுர்:

''மகாத்மா காந்தியினுடைய அந்த ரங்க சிஷ்யனல்லவா நீ? அதனுல்தான் மைனர்ப் பெண்ணைத் திருட்டுத்தனமாய் அழைத்துக் கொண்டு ஓடப் பார்த்தாயாக்கும்!.... ஆகா! நல்ல காந்தி சிஷ்யன், அப்பா! தங்கசாமி! எங்கே அந்தப் பிரம்பை எடு! இன்றைக்கு இவன் சிநேகிதர்கள் கடைத் தெருவில் சத்தியாக்கிரகம் செய்து அடி வாங்கினுர்கள். இவன் மட்டும் அவர்களுக்குக் குறைந்து போகலாமா? அப்புறம் காந்தி மகாத்மா இவனைப் பற்றிக் குறைவாக எண்ணிக் கொள்ளமாட்டாரா? காங்கிரஸிலிருந்து இவனைத் தள்ளிவிட மாட்டார்களா?.... சேச்சே! எங்கே, அந்தப் பிரம்பை எடு!''

தங்கசாமிக் கவுண்டர் அப்போது பிரம்பை எடுத்துக் கார்க்கோடக் கவுண்டர் கையில் கொடுத்தார்.

இதுவரையில் பேசாமல் பார்த்துக் கொண்டிருந்த செந்திரு, ''சித்தப்பா! அவர் மேல் ஒரு குற்றமும் இல்லை. அவர் என்னை அழைத்து வரவில்லை. சத்தியமாகச் சொல்கிறேன். என் சிநேகிதியைப் பார்க்க நானுகத்தான் வந்தேன். பாட்டன், கடுதாசிகூடக் கொண்டு போய்க் கொடுத்துவிட்டு வந்தான். அவரை விட்டு விடுங்கள். அவரை விட்டு விட்டால், இனி மேல் நீங்கள்



அமெரிக்காவில் முட்டைகளின் மேல் இப்படி வரைந்து விற்கின்றார்கள். இதனால் வியாபாரம் அதிகமாக நடக்கின்றது; வாங்குபவர்களுடைய குணங்களைக்கூட, அவர்கள் எந்த முட்டையை எடுத்தார்களோ அதைக் கொண்டு கண்டுபிடிக்கலாம் என்று கூறுகிறார் கடைக்காரர்.

'என்பு' — 'லைஃப்'

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

சொன்னபடி கேட்கிறேன். அவரை ஏதாவது செய்தீர்களோ, கூச்சல் போட்டு ஊரைக் கூட்டுவேன்'' என்று சொல்லிக் கொண்டு செந்திரு ஜன்னல் பக்கம் போனாள்.

'' தங்கசாமி ! அவளை இழுத்துக் கொண்டு வந்து மேஜைக் காலோடு கட்டு !'' என்றார் கார்க்கோடக் கவுண்டர்.

செந்திரு எவ்வளவோ திமிறியும் பயன்படவில்லை. தங்கசாமிக் கவுண்டர் அவளை இழுத்துக் கொண்டு வந்து மேஜைக் காலோடு சேர்த்துக் கட்டி விட்டார்.

கார்க்கோடக் கவுண்டர் சொன்னார்: ''தங்கசாமி! காலத்தை ஓட்டிக் கொண்டிருக்க இப்போது சமயமில்லை. இரண்டில் ஒன்று உடனே தீர்ந்துவிட வேண்டும். இந்தப் பையன் இரண்டு விஷயத்துக்குச் சம்மதிக்கிறானா என்று கேள். மைனர்ப் பெண்ணைக் கடத்திக்கொண்டு வந்து குற்றம் செய்ததாகவும், மன்னிக்கும்படியும் எழுதிக் கொடுக்க வேண்டும். இனிமேல் கள்ளுக்கடை பக்கம் போவதில்லை, மதுவிலக்குப் பிரசாரம் செய்வதில்லை என்று சத்தியம் செய்ய வேண்டும். மகாத்மா காந்திமேல் ஆணை வைத்துச் சத்தியம் செய்ய வேண்டும். சம்மதிக்கிறானா, கேள்!''

மருடபதியின் காதில் விழுந்ததும், அவன் பொங்கிக் கொண்டு கத்தினான்: ''ஒருநாளும் மாட்டேன். உயிர் போனாலும் மாட்டேன். என்னை என்ன வேணுமானாலும் செய்யுங்கள். அந்தப் பெண்ணை மட்டும் ஒன்றும் செய்யவேண்டாம். ஏதாவது செய்தீர்களோ, நீங்கள் செய்து வரும் அக்கிரமக் காரியங்கள் எல்லாம் எனக்குத் தெரியும். பத்திரிகைகளில் எழுதி, உங்கள் பெயர் சிரிப்பாய்ச் சிரிக்கும்படி அடித்து விடுவேன், ஜாக்கிரதை!'' என்றான்.

கார்க்கோடக் கவுண்டர் மறுபடியும் பயங்கரமாகச் சிரித்தார்.

'' ஓகோகோ ! அப்படியா சேதி ?— இதுதான் கடைசி வார்த்தையா ? கேட்டுவிடு, தங்கசாமி!'' என்றார்.

இடுப்பிலிருந்து ஒரு பெரிய மடக்குக் கத்தியை எடுத்தார். அதன் மடலைப் பிரித்து டார்ச் லைட்டுக்கு நேராகப் பிடித்தார். கத்தியின் மடல் பளபளவென்று மின்னிற்று. அதன் விளிம்பு கூராயிருக்கிறதா என்று கவுண்டர் விரலால் தடவிப் பார்த்தார்.

செந்திருவுக்கு அடிவயிற்றை என்னவோ செய்தது. அவள் என்னவெல்லாமோ பேசவேண்டுமென்று நினைத்தாள். கூச்சல் போட விரும்பினாள். ஆனால், நாக்கு மேலண்ணத்தில் ஒட்டிக் கொண்டது. வாயிலிருந்து பேச்சு வரவில்லை; சத்தம் போடக்கூட முடியவில்லை.

கார்க்கோடக் கவுண்டர் ஒரு கையில் டார்ச் லைட்டுடனும், ஒரு கையில் பிரித்த கத்தியுடனும் மருடபதியை நெருங்கினார். ''அடே! என்னடா சொல்கிறாய்?'' என்று கர்ஜித்துக் கொண்டு கத்தியை ஓங்கினார்.

மருடபதிக்கு அச்சமயம், ''இதெல்லாம் நிஜமல்ல — கனவு கண்டு கொண்டிருக்கிறோம்'' என்ற பிரமை உண்டாயிற்று. அவன் அண்ணாந்து, ஓங்கிய கத்தியை இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தான்.

ஓங்கிய கத்தி கீழே வரத் தொடங்கியது. அந்த விநாடியில் தடதடவென்று காலடிச் சத்தம் கேட்டது. பெரியண்ணன் குறுக்கே ஓடிவந்து விழுந்தான். (சற்று முன்னால் மூர்ச்சை தெளிந்து அவன் இந்தக் கோரமான காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தான்.) கவுண்டரின் கத்தி, பெரியண்ணன் வலது மார்பண்டை ஆழமாய்ப் பதிந்தது. அவன் ''ஆ'' என்று அலறிக் கொண்டு கீழே விழுந்தான். அவனுடைய வாய் ஏதோ முணுமுணுத்தது. கார்க்கோடக் கவுண்டர் கீழே குனிந்து அதைக் கவனித்தார். ''இரகசியம்.... இரகசியம்.... இத்தனை நாட்களாய்....மன்னிக்க வேணும்....'' என்ற வார்த்தைகள் அவருடைய காதில் விழுந்தன. உடனே பெரியண்ணனுடைய தலை சாய்ந்தது ; பேச்சு நின்றது.

கார்க்கோடக் கவுண்டர் டார்ச் லைட்டை நாலு புறமும் சுழற்றினார்.

செந்திரு மூர்ச்சை அடைந்திருப்பதையும், அவனுடைய தலை தொங்குவதையும் கண்டார். பிரமித்து நின்ற தங்கசாமிக் கவுண்டரைப் பார்த்து, ''ஏனப்பா, இப்படி நிற்கிறாய்? அவனுடைய கட்டை அவிழ்த்துத் தூக்கிக்கொண்டு போய்க் காரில் போடு. அவன் மூர்ச்சையானதே நல்லதாய்ப் போயிற்று. இல்லாவிட்டால் ரொம்ப ரகளை செய்திருப்பான்'' என்றார்.

தங்கசாமிக் கவுண்டர் மறுவார்த்தை சொல்லாமல், செந்திருவைத் தூக்கிக்கொண்டு போனார்.

அவர்கள் போனதும், கார்க்கோடக் கவுண்டர் மறுபடியும் டார்ச் லைட்டைக் கட்டுண்ட மருடபதியின் மேலும், குத்தப்பட்டுத் தரையில் கிடந்த பெரியண்ணன் உடல் மீதும் செலுத்தினார். பயங்கரமாக ஒரு சிரிப்புச் சிரித்தார்.

''அடே! 'ஜெயிலுக்குப் போகவும் தூக்குமேடை ஏறவும் தயார்' என்று ஆயிரம் கூட்டங்களில் பேசி வந்தாயல்லவா? இப்போது ஜெயிலுக்குப் போகலாம்; அங்கிருந்து தூக்குமேடைக்கும் போகலாம்'' என்று அவர் சொன்னது கனவில் கேட்பது போல் மருடபதியின் காதில் விழுந்தது.

அடுத்த நிமிஷம் கார்க்கோடக் கவுண்டர் டார்ச் லைட்டுடன் மச்சுப்படி இறங்கிச் சென்றார்.

ஹாலில் அந்தகாரம் சூழ்ந்தது.

(தொடரும்)

## படித்துப் பாருங்கள்

### 'மாக்பெத்'

தொல்காப்பியனார் மொழிபெயர்ப்பின் இலக்கணம் குறித்து ஆலோசித்துக் கொண்டிருந்தார். அச்சமயம் வாய்ப்பாட்டும், அதனுடன் ஒரு சிறிதும் வேறுபாடு தெரியாமல் குழலிசையும் இசைந்து ஓர் இசைக் கடலாகப் பெருகி வருவதை அவர் கேட்க நேர்ந்தது. தொடர்ந்து வீணையில் அப்பாட்டைப் பின்பாட்டுக்காரர் மீட்டி வாசித்தார், குழலையும் மத்தளத்தையும் துணையாகக் கொண்டு. முன் பாட்டைப் பின் பாட்டு ஒத்திருந்தது சிறிதும் முரண்படாமல். இப்படியே முதல் நூலை ஒத்திருக்க வேண்டும் வழிநூலாகிய மொழிபெயர்ப்பு என்று தம் சூத்திரத்தை முடித்துக் கொண்டார் தொல்காப்பியர்.

19ம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் 20ம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் தமிழ் நாட்டிலே இலக்கிய மொழிபெயர்ப்பில் ஈடுபட்டவர்கள் ஷேக்ஸ்பியரின் நாடகக் கதைகளையும் மொழிபெயர்க்கத் தொடங்கினர். 'வெனிஸ் வர்த்தகன்' என்ற நாடகம் சுமார் அறுபது ஆண்டுகளுக்கு முன்பே எஸ். வி. கன்னபிரான் பிள்ளையால் மொழிபெயர்க்கப் பட்டது. 'ஒதெல்லோ' நாடகத்தை நாவலாசிரியரான மாதவையா உரைக் குறிப்புகளுடன் மொழிபெயர்த்தார். அந்த இருவரும் இந்த ஆசிரியரைப் போல் திருநெல்வேலித் தமிழர்களே. அப்பால் 'கலா நிலயம்' என்ற இலக்கியப் பத்திரிகையில் 'ஜூலியஸ் ஸீஸர்' மொழிபெயர்ப்பு வந்தது. அத்தகைய — முன்னோடி — மொழிபெயர்ப்புக்களில் ஷேக்ஸ்பியரின் மாமேதை — மாட்சி மூடுபனி மறைத்த இனிய நதிக் காட்சி போல் மங்கலாகத்தான் தெரிந்தது. உணர்ச்சிக் கொந்தளிப்பும் சொற் கலை ஆட்சியுமான சுழிகளும் சுழல்களும் இனிது புலனாகவில்லை. அவை முன் பாட்டுக்கு ஒத்திராத பின்பாட்டாகவே நின்று விட்டன.

செஞ்சொற் கவிதையோடு பின்னிப் பிணைந்து கிடக்கிறது ஷேக்ஸ்பியரின் நாடக மாமேதை — முன் பாட்டாகிய வாய்ப் பாட்டும் அதோடு முற்றும் இசைந்திருக்கும் குழலிசையும் போல். கவிதைப் பெரு வளத்தில் கம்பனைப் போன்ற மிகச் சிலர் ஷேக்ஸ்பியருக்கு இணையாகலாம்; அல்லது சற்று முற்பட்டும் போகலாம். ஆனால் அறிஞர் மகராஜன் சொல்லுகிறபடி, உள்ளத்தின் திருகு முறுகல்களோடு கூடிய மனித சுபாவத்தைக் கண்ணாடியில் காட்டுவது போல் ஷேக்ஸ்பியரின் சொற்கலை காட்டுகிறதே அந்த மனமாய வித்தை, உலக இலக்கியத்திலே இந்த ஆங்கில நாடக கவிச் சக்கரவர்த்திக்குத்தான் உரியது. இந்த இமாலய மேதா விலாசத்தின் சில அம்சங்களாவது வாசகர்களுக்கு உள்ளபடி தென்படக் கூடிய ஒரு வாய்ப்பைத் தருவதுதான் ஆற்றல் நிறைந்த எத்தகைய தமிழாக்கத்தின் நோக்கமும் என்று பொருள் பட அறிஞர் சீநிவாசராகவன் கூறுவதையும் நான் ஒப்புக் கொள்ளுகிறேன்.

ஷேக்ஸ்பியரின் மாக்பெத்தைப் பன்முறை பயின்றிருக்கும் நான் மீண்டும் ஒரு முறை அம்மூல நாடகத்தைக் கூர்ந்து நோக்கினேன், இத் தமிழாக்கத்தை மதிப்பிடுவதற்காக. இசைக் கச்சேரியில் வாய்ப்பாட்டும் குழலிசையும் முடிந்த பின், பின் பாட்டாக வீணையில் அதை மீட்டிக் காட்டுவது போன்ற உணர்ச்சி — அநுபவம் எனக்கு ஏற்பட்டது. பழகு தமிழை டி. கே. சி. பாணியில் ஜீவநாடி பார்த்துக் கையாளக் கற்றுக் கொண்ட இவர், ஷேக்ஸ்பியரோடு பொங்கும் பரிவுடன் உளம் கலந்து உயிர் கலந்து பழகும் தோழமைக்கு உரிய ஆங்கிலப் புலமையும் பெற்றிருக்கிறார். இது இவர் வெற்றியின் ஒரு மர்மம். இந்த இரு வகைப் புலமையும் ஷேக்ஸ்பியரை மறைத்து விடாமல் ஒதுங்கி வழிபட்டு, வழி விட்டு நிற்கின்றது.

இத்தகைய தமிழாக்க முயற்சிகளால் மறுமலர்ச்சித் தமிழ் புதியதொரு மெருகும் வண்ணமும் பொலிவும் சக்தியும் பெறக்கூடும் என்று நம்புகிறேன்.

—பி. ஸ்ரீ

மாக்பெத் (நாடகம்) தமிழாக்கம்: உயர்நீதி மன்ற நீதிபதி எஸ். மகராஜன், பழனியப்பா பிரதர்ஸ், சென்னை—14, விலை: ரூ. 4.00.

# சந்தோஷ் கோப்பையின் சந்தோஷம்!

**ப**ஞ்சாப் ஜலந்தரில் சந்தோஷ் கோப்பை சென்னைக்குச் செல்ல ரயிலேறியது. ஏறும் போதே அது பஞ்சாப் கோஷ்டி இரு பிளவாகப் பிளந்து சண்டை போடுவதைக் கண்டு துக்கப்பட்டது. சென்ற வருஷ சாம்பியன்கள் இப்படி ஒருவருக்கொருவர் அடித்துக்கொள்வது அதற்குப் பிடிக்கவில்லை!

''நாங்கள்தான் பஞ்சாப் மாநிலத்துக்காக சந்தோஷ் கோப்பைப் பந்தயத்தில் ஆடப் போகிறோம்!'' என்று மார்தட்டினர் இந்தர் சிங் தலைமையில் உள்ள பஞ்சாப் கால் பந்தாட்டக் கோஷ்டியினர்.

''இல்லை. எங்களைத்தான் அகில இந்திய கால்பந்தாட்டக் கழகம் பஞ்சாப் கோஷ்டியாகக் கருதுகிறது. நாங்கள்தான் பஞ்சாப் மாநிலத்துக்காக ஆடப் போகிறோம்'' என்று கச்சை கட்டினார்கள் சரண்ஜித் சிங் தலைமையிலுள்ள ஆட்டக்காரர்கள்.

இந்தர் சிங் தலைமையில் உள்ள பஞ்சாப் கால்பந்தாட்டக் குழுவினர் சென்னை நீதி மன்றத்துக்கு வழக்காடச் சென்றார்கள். சரண்ஜித்சிங் தலைமையில் உள்ள பஞ்சாப் கால் பந்தாட்டக்காரர்கள் கால் பந்தாட்ட மைதானத்தில் இறங்கி ஆடினார்கள். தமிழக ஆட்டக்காரர்களிடம் பஞ்சாப் சரண்ஜித் குழுவினர் தோல்வியுற்று ரயிலேறினார்கள் இந்தர் சிங் கோஷ்டியினர் வழக்கில் தோல்வியுற்று ரயிலேறினார்கள். பஞ்சாப் மாநிலத்தினர் பிரிவினைச் சண்டையில் சந்தோஷ் கோப்பையைக் கோட்டை விட்டனர்.



**உ**லகக் கால்பந்தாட்டத்தில் 'ஃபௌல் மன்னன்' என்ற புகழைப் பெற்றவர் மெர்லெ. 1970–71ம் ஆண்டுகளில் அவர் செய்ததில் தெரிந்த ஃபௌல்களின் எண்ணிக்கை 517! கண்ணில் படாமல் விடப்பட்டவை 713! சென்னை நேரு ஸ்டேடியத்தில் சந்தோஷ் கோப்பைக்கான கால் பந்தாட்டத்தில் 'ஃபௌலிங்'கில் சிகரம் வைத்த மாட்ச் ஆந்திர – மகாராஷ்டிரப் போட்டியாகும்.

இதில் ஃபௌலிங்கை அங்குரார்ப்பணம் செய்து வைத்தவர்கள் ஆந்திர கோஷ்டியினரும், மகாராஷ்டிரக் கோஷ்டியில் சிவதாஸுமாவர். மகாராஷ்டிர கோல்கீப்பர் பந்திலா பந்தைத் தாக்குவதற்குப் பதிலாக ஆந்திர கோஷ்டி அமர்சந்தின் கன்னத்தைப் பதம் பார்த்தார். ரிபரி டட்டா ஃபௌல் ஊதி 'ஸ்பாட் கிக்' கொடுத்தார். உடனே மகாராஷ்டிரக் கால்பந்தாட்டக்காரர்கள், ரிபரியைச் சூழ்ந்து கொண்டு கேள்விமாரிகளைப் பொழிந்தனர். ரிபரியின் அடுத்தடுத்த 'ஃபௌல்' தீர்ப்புகள் ஆட்டத்தைக் களேபரத்தில் முடித்தன. ரசிகர்கள் தங்கள் பங்குக்குக் கல்மாரி பொழிந்து ஆட்டத்தைப் பாதியில் நிறுத்தி வைத்தனர். இப்படி 'ஃபௌலிங்' மன்னர்களான ஆந்திரர்களும் மகாராஷ்டிரர்களும் சந்தோஷ் கோப்பைப் போட்டியில் தோற்றுப் போனார்கள்.

**வ**ங்காள கால் பந்தாட்டக் கோஷ்டிக்கும் கேரள கால் பந்தாட்டக் கோஷ்டிக்கும் நடைபெற்ற ஆட்டம் ரசிகர்களை மெய்மறக்கும்படி செய்தது. சர்வதேச கால் பந்தாட்டப் போட்டிகளில் கலந்து கொண்ட எட்டு ஆட்டக்காரர்களைப் பெற்ற வங்காள கோஷ்டியைக் கடைசிவரையில் 'கோல்' போட விடாமல் கேரள ஆட்டக்காரர்கள் தடுத்தது பெரிய காரியம்.

''என்ன, ஆட்டம் 'டிரா'வாக முடிந்து விடும் போலிருக்கே! சர்வதேச கால்பந்தாட்டப் போட்டிகளில் கலந்து கொண்டவர்கள் வங்காள கோஷ்டியினர் என்கிறார்கள். அந்த 'சர்வதேச ஸ்டாண்டர்ட்' ஆட்டத்தில் காணோமே?'' என்று அங்கலாய்த்தார் ஒரு கால்பந்தாட்ட ரசிகர்.

''ஆட்டம் 'டிரா'தான். எழுந்து போகலாம் வாருங்கள்! கேரளா வங்காள கோஷ்டியைத் தாக்குப்பிடித்து விட்டது!'' என்று எழுந்தார் அவர் நண்பர்.

கடைசி நிமிஷம். இனி ஆட்டம் 'டிரா' என்று எழுந்த கால்பந்தாட்ட ரசிகர்கள் அத்தனை பேரும் மூக்கில் விரல் வைக்கும் படியாக பௌமிக் அடித்த 'ஷாட்' இருக்கிறதே, அதில் அவரது சர்வதேச ஸ்டாண்டர்ட் ஆட்டம் மிளிர்ந்தது. ''அபாரம்!'' ''ஹைகிளாஸ் கோல்!'' ''டைனமிக் கோல்!''



என்று கூறிக் கால்பந்தாட்ட ரசிகர்கள் கரகம்பம் செய்தார்கள். வங்காள கோஷ்டியை குவார்ட்டர் பைனலுக்கு அனுப்பிய வெற்றி கோல் அதுதான்!

**ம**க்கள் உற்சாகம் டானிக் போல. தோல்வி அடையும் போல இருந்த கோவா குழுவுக்கு உற்சாகம் கொடுத்து ஆட்டத்துக்கு விறுவிறுப்பு ஊட்டினர் கால்பந்தாட்ட ரசிகர்கள். ஒரு கோல் போட்டு வெற்றி முகத்தில் முன்னேறிய மைசூர் கோஷ்டிக்கு எதிராக மறு கோல் போட்டு கோவா 'டிரா' வாக்கியதற்கு மக்களின் உற்சாகம் 'டானிக்'காக இருந்தது. கோவா ஆட்டக்காரர் பெர்னுர்ட் ஒரு நல்ல கோல் அடிக்கும் சான்ஸைக் கோட்டை விட்டுத் தம்மைத் தாமே மிகவும் நொந்து கொண்டார். அவரது கோஷ்டியின் ரசிகர்களுடைய தாக்குதலுக்கு உள்ளானுர். ஆனல் கடைசியில் அவரது அபாரமான கோலே ஆட்டத்தை வெற்றி தோல்வி யின்றி முடிக்க வைத்தது. அடுத்த நாள் ஆட்டத்தில் சந்தோஷ் கோப்பையை நான்கு தரம் வென்ற மைசூர் கோஷ்டியை 5—2 கோலில் கோவா வென்றது ரசிகர்களை 'சபாஷ்' போட வைத்தது. பிறகு செமி பைனலில் கோவா கோஷ்டி வங்காள கோஷ்டியோடு முதல் 'லெக்' டிராவாக்கியது பெரிய காரியம். இரண்டாம் 'லெக்' ஆட்டத்தில் வங்காள கோஷ்டி வெற்றி முகத்தில் இருந்த போது கல்மாரி பொழிந்து ரசிகர்கள் ஆட்டத்தைப் பாதியில் நிறுத்தும் கைங்கரியத்தை மேற் கொண்டனர். ஆனல் கடைசியில் வங்காள கோஷ்டியினரே கோவாவை 4—2 கோலில் வென்று இறுதி ஆட்டத்துக்குச் சென்றுர்கள்.

**ர**யில்வே முன்னணி ஆட்டக்காரர்கள் தமிழகக் கால் பந்தாட்டக் கோஷ்டிக்கு எதிராக மூன்று கோல் அடித்து செமி பைனல் முதல் 'லெக்'கில் வெற்றிப் பாதையில் முன்னேறினுர்கள். சர்வதேச கால் பந்தாட்டங்களில் கலந்து கொண்டு புகழ் பெற்ற அருமை நாயகம் அருமையாக ஆடியும் ரயில்வே கோஷ்டி மீது தமிழ் நாடு கோஷ்டி ஒரு கோலே போட முடிந்தது. ரயில்வே கோஷ்டியில் அருண்கோஷும் குண பாண்டியனும் மலைபோல் நின்று தடுத்து 'கோல்' பக்கம் பந்து நிலை காட்டாமல் பார்த்துக் கொண்டார்கள்.

செமி பைனல் இரண்டாம் 'லெக்'கில் ஆட்டம் வெற்றி தோல்வி யின்றி முன்னேறிக் கொண்டிருந்தது. மொய்தீன் குட்டி பந்தோடு கோல் முகத்தில் முன்னேறி இருபது கஜ தூரத்திலிருந்து பந்தை அடித்தார். கோல் கீப்பர் நகர்ந்திருந்ததால் அங்குள்ள ஆட்டக் காரர் ஹபீப் கான் கையாலேயே வேகத்தில்



முதல் பக்கம் : தேசிய கால்பந்தாட்டப் போட்டியில் வெற்றி பெற்ற வங்காள கோஷ்டி.

இந்தப் பக்கம் : 1. கோவா - வங்காள கால்பந்தாட்டப் போட்டியில் ஒரு காட்சி.

2. ரயில்வே - தமிழகப் போட்டியில் ஒரு கட்டம்

வந்த பந்தைத் தடுத்து விட்டார். உடனே ரீபரி 'ஸ்பாட் கிக்' கொடுத்தார். தமிழக காப்டன் அருமைநாயகம் பெருமைசேர அதைக் கோலாக்கினர். தமிழகக் கோஷ்டிக்கு ஒரு கோலில் வெற்றி!

"தமிழ்நாடு முதல் நாள் இன்று ஆடிய மாதிரி உத்வேகத்தோடு ஆடியிருந்தால்..?" என்றார் ரஸிகர்.

"என்ன செய்வது? முதல் 'லெக்'கில் அதிக கோல் ரயில்வே ஆட்டக்காரர்கள் தமிழ் நாடு கோஷ்டியினர் மீது போட்டு இறுதி யாட்டம் ஆடத் தகுதி பெற்றவர்களாகி விட்டார்களே!" என்றார் மற்றொரு ரஸிகர்.

மே பதின்மூன்றும் தேதி நாலு மணிக்கே நேரு ஸ்டேடியம் நிரம்பி வழிகிறது. சங்கும் சேகண்டியும் ஒலிக்கின்றன. மைதானக் கோட்டின் மீதும் ரசிகர்கள் படையெடுக்கிறார்கள். தமிழகத்தில் நான்காவது தடவையாக தேசிய கால்பந்தாட்டப் போட்டியின் இறுதி ஆட்டம் தொடங்குகிறது. முதல் கோலை ரயில்வே ஆட்டக்காரர் பிஸ்வாஸ் போட்டு ஆட்டத்துக்குச் சுருசுருப் பேற்றுகிறார். ஆனால் வங்காள முன்னணி ஆட்டக்காரர்களான கண்ணன்-ஹபீப்-பௌமிக்-தஸ்திதார் தங்கள் முயற்சியைக் கைவிடவில்லை.

ரயில்வே ஆட்டக்காரர்கள் ஒரு கோல் வெற்றி முகத்தில் இடைவேளையைக் கடந்தனர். வங்காள கோஷ்டிக்கு 'ஃபௌல்' கிக் கிடைத்தபோது அதை தஸ்திதார் அழகாக அடித்துக் கோலாக்கினர். அதன் பிறகு ரயில்வே கோஷ்டிமீது கோலுக்குமேல் கோல் விழுந்தன. வங்காள கோஷ்டி ஆட்டக்காரர் கண்ணன் இரண்டு கோலை அடித்துப் புகழேணியில் ஏறினர். வங்காள கோஷ்டி 4–1 கோலில் வெற்றிக் கொடி நாட்டியது.

"வங்காள கோஷ்டியில் 'ஹீரோ' கண்ணன் தான். இவர் மைசூரில் பிறந்தவர். பிலிப்பைன்ஸ், தாய்லாந்து, கொரியா ஆகிய நாடுகளில் சர்வதேசக் கால்பந்தாட்டங்களில் கலந்து கொண்டு புகழ் பெற்றவர். வங்காள மோகன்பாகன் கிளப் செமிபுரொபஷனல் ஆட்டக்காரர்!"

"மோகன்பாகன் கிளப் கண்ணனுக்கு நல்ல சம்பளத்தில் வேலை வாங்கிக் கொடுத்திருக்கிறது. அதோடு வருஷத்துக்கு எட்டாயிரம், பத்தாயிரம் பணம் கொடுக்கிறது."

"வங்காள தேசத்தில் உள்ள பல கால் பந்தாட்டக் கிளப்பினர் இப்படி நல்ல ஆட்டக்காரர்களை யெல்லாம் வளைத்துப் போட்டிருக்கிறார்கள். சந்தோஷ் கோப்பை அவர்களுக்குக் கிடைத்ததில் ஆச்சரியமில்லை!"

"நேரு ஸ்டேடியத்தில் சந்தோஷ் கோப்பை தேசிய பந்தயம் கேஸ், கலாட்டா என்று திசை திரும்பிப் போய் விடாமல் இறுதிவரை செவ்வனே நடந்தது. தமிழகக் கால்பந்தாட்ட நிர்வாகிகளின் திறமையைக் கண்டு எல்லோரும் சந்தோஷப்படுகிறார்கள்!"

"எனக்கும் சந்தோஷம்தான். சிறந்த ஆட்டக்காரர்கள் நிரம்பிய, சர்வதேச ஆட்டங்களில் ஆடித் தேர்ச்சி பெற்றவர்களைக் கொண்ட வங்காள கோஷ்டியோடு செல்லும் பெருமை எனக்குக் கிட்டியிருக்கிறதே!" என்று சந்தோஷ் கோப்பை வங்காள கோஷ்டியோடு மிக்க சந்தோஷத்தோடு ரயிலேறுகிறது!

—குண்டுமணி

# வட்ட மேஜை

★ இக் குறியிட்ட கடிதம் ரூ. 15 பரிசு பெறுகிறது.

தேர்தலுக்கு முன்னர் 'வரலாறு காணாத வகையில் அள்ளித் தந்த' அரசு இன்று அந்தச் செலவைச் சரிக்கட்ட மதுவிலக்கை எடுத்துவிட நினைப்பது வருத்தத்துக்குரிய விஷயம். மத்திய அரசு மதுவிலக்கால் ஏற்படும் நஷ்டத்தை ஈடு கட்டினால் மதுவிலக்கு நீடிக்கும் என அறிவித்திருப்பது பலவீனம். அரசு ஊழியர்களின் வோட்டுக்களைப் பெற ஊதிய உயர்வு அளித்த அரசு, இன்று பெரும்பான்மையான ஏழைகளின் வாழ்வைப் பரிதாபகரமாக்கும் மதுவைக் கொண்டு வருவது அநியாயம்.

அகில இந்திய அளவில் மதுவிலக்கைக் கொண்டு வரவேண்டும் என விரும்புபவர்கள் தாங்களே ஓர் உதாரணமாக இருந்து காட்ட வேண்டும்.

மன்னார்குடி
8–5–71 எஸ். பாலகிருஷ்ணன்

★ ஓராண்டு கால இடைவெளிக்குப் பிறகு மீண்டும் தடுப்புக் காவல் சட்டம் பிறப்பிக்கப் பட்டுள்ளது வலது, இடது கம்யூனிஸ்டுகளுக்குக் குலைநடுக்கத்தை ஏற்படுத்தியிருக்கிறது. பூபேஷ் குப்தாவும், கலியாண சுந்தரமும், "மக்கள் பெருமளவில் இதற்குத்தான் வோட்டுப் போட்டார்களா ?" என்று அங்கலாய்த்திருக்கிறார்கள்.

தடுப்புக் காவல் சட்டம் மக்களின் ஜீவாதார உரிமைகளைப் பறிப்பதாகக் குறைப்பட்டுக் கொள்கிறவர்கள்தான் அரசியல் சாஸனத்தில் உள்ள ஜீவாதார உரிமைகளைப் பற்றிய 19வது ஷரத்தையே ரத்து செய்துவிட வேண்டும் என்று பார்லிமெண்டுக்கு உள்ளேயும் வெளியேயும் பேசியவர்கள், பேசுபவர்கள் என்பதை நாம் மறக்க முடியாது.

திருவண்ணாமலை
7–5–71 கே. வி. ராமதுரை

சமீபத்தில் டெல்லி மாநகராட்சி தேர்தலில் ஜனசங்கத்தினர் பெற்ற வெற்றி என் கண்ணைத் திறக்கச் செய்கிறது. பாராளுமன்ற தேர்தலில் வெற்றிபெற்ற இந்திரா காந்தியின் அபேட்சகர்களுக்குச் சாதாரண மாநகராட்சி தேர்தலில் வெற்றி பெற முடியாததன் காரணம் என்ன? சிந்திக்கவேண்டிய விஷயம். தமிழகத்தில் பஞ்சாயத்துத் தேர்தல் முடிவுகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது எங்கோ எந்த இடத்திலோ உண்மை மறைக்கப்பட்டிருக்கிறது என்பது தெளிவு.

கொழிஞ்சாம்பாறை
10—5—71 அழகுமலை

# இரு இடங்களிலும் சிறப்பாக பணியாற்ற –

# பேருதவி புரிகிறது பிரஸ்டிஜ் Prestige

உங்களைப் போன்ற பெண்கள் அலுவலகம் செல்வதால் வீட்டு வேலைகள் தடைப்படாமலிருக்கவே தயாராகிறது பிரஸ்டிஜ் (ப்ரீத் என்பது இதன் ஏற்றுமதிப் பெயர்). ஆகவே உங்களால் இரு இடங்களிலும் சிரமமின்றி சிறப்பாகப் பணியாற்ற முடிகிறது.

நேரத்தை மிச்சப்படுத்துகிறது பிரஸ்டிஜ் (அல்லது ப்ரீத்), எப்படியெனில் எப்பொழுதையும் விட கால்பங்கு நேரத்திலேயே சமையல் தயார்!...அதுவும் பலவகைப் பதார்த்தங்களுடன்!'

எரிபொருள் சிக்கனத்துடன், சமையல் அறையும் துப்புரவாக இருக்க உதவும், பிரிஸ்டிஜ்/ப்ரீத். ஆகவே திறமையாக செயல்பட வழி செய்கிறது. பிரஸ்டிஜ் அல்லது ப்ரீத் குக்கரில் தயாரான உணவுகளில் ஊட்டச்சத்தும் மிகுந்துள்ளது.

பிரஸ்டிஜ், ப்ரீத் இரண்டுமே வாழ்நாள் பூராவும் உழைக்க உத்தரவாதமுள்ளவை. மேலும் நாடு பூராவிலும் விற்பனைக்குப் பின் பராமரிப்புச் சேவை அளிப்பதும் இது ஒன்றே. உதிரி உறுப்புகள் எங்கும் கிடைக்கின்றன.

TTP-6175

பரிவுடன் பேருதவியளிப்பது—பிரஸ்டிஜ்/ப்ரீத்.

பிரஸ்டிஜ் ஒன்று பெறுங்கள்—வேலைக்குச் செல்லும் பெண்மணியாகவும் வீட்டைப்பேணும் தலைவியாகவும் விளங்குங்கள்.







டி டி. பிரைவேட் லிமிடெட், பெங்களூர் 16

# ராமாயணம்

ராஜாஜி

முதலில் பெருந் தூக்கத்தினின்று எழுந்ததும் இயற்கை வேகத்தில் பேசினான் கும்பகர்ணன். பிறகு பசி ஓரளவு தீர்ந்ததும் சுபாவத்தில் நீதி உணர்ச்சி கொண்டவனானபடியால் ராவணனிடம் விஷயங்களை ஆராய்ந்து ஹிதத்தை எடுத்து உரைத்தான். அதன்பின் ராவணனுடைய தற்கால கஷ்ட நிலைமையைக் கண்டு உருகி, அன்பு மேலிட்டு மற்றதையெல்லாம் மறந்தொழிந்தான்.

“உன்னைப் போன்ற வீரன், உன்னைப் போன்ற தம்பி, ஆபத்தில் உதவும் மித்திரன் வேறு யார், கும்பகர்ணா!” என்று ராவணன் எண்ணினான். செத்துப் பிழைத்த மாதிரி மகிழ்ச்சி அடைந்தான்.

கும்பகர்ணன் சூலத்தை எடுத்துக் கொண்டு ஒருவனாகவே போகப் புறப்பட்டான். அப்போது ராவணன் அவனைத் தடுத்து, “இப்படிச் செய்யலாகாது: சேனையைக் கூட்டிக் கொண்டு போ!” என்று சொல்லி, தம்பியின் பெரிய தேகத்துக்கு ஆபரணங்கள் புனைந்தும் மாலை போட்டும் அலங்கரித்து, ஆசீர்வதித்து, “போ, வீரனே! சத்துருக்களை நிர்மூலம் செய்து விட்டு ஜெயகோஷத்துடன் திரும்பி வா” என்றான்.

கும்பகர்ணனும் திவ்விய ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டுத் திரிவிக்கிரமனைப் போல் ஜொலித்தான்.

அண்ணனை வலம் செய்து வணங்கி, நீண்ட சூலத்தை எடுத்துக் கொண்டு சென்றான். பெருஞ்சேனை அவனைப் பின் தொடர்ந்து சென்றது. கும்பகர்ணன் நடந்து சென்றபோது லங்கையில் உள்ள ராக்ஷசர்கள் அவன் மேல் மலர்கள் தூவினார்கள். எரிமலையைப் போல் ஜொலித்துக் கொண்டு சென்றான்.

அவன் மதில் சுவர்களைக் காலாலே தாண்டிக் காலாந்தக யமனைப் போல் வந்ததைக் கண்ட வானரர்கள் பலர் பயந்து இங்குமங்கும் ஓட ஆரம்பித்தார்கள். வானரத் தலைவர்கள் படைக்குத் தைரியம் சொல்லி மிகக் கஷ்டப்பட்டுச் சேனையைக் காத்து வந்தார்கள்.

## 89. நாராயணன்தானோ?

அங்கதனுடைய தேற்றுதலினால், வானரர்கள் தைரியம் கொண்டு ஒன்று சேர்ந்து கும்பகர்ணனைத் தாக்கினார்கள். பெரிய மரங்களையும் பாறைகளையும் பறித்தெடுத்து அவன் மேல் வீசி எறிந்தும் அடித்தும் நொறுக்கியும் பார்த்தார்கள். அவனோ இவற்றைக் கொஞ்சமும் லட்சியம் செய்யாமல் சிரித்துக் கொண்டே வானரர்களைத் துவம்சம் செய்தான். கும்பகர்ணனுடைய வீராவேசமும் குரூர யுத்தமும் வானரர்களைச் சிதற அடித்தன. கடலிலும் தாங்கள் கட்டின சேதுவிலும் ஆகாயத்திலும் காட்டிலும் ஓடி மறையப் பார்த்தார்கள். மறுபடியும் அங்கதன் வானர வீரர்களுக்கும், வானரப் படைகளுக்கும் தைரியம் சொல்லி, ஒன்று சேர்த்துக் கும்பகர்ணனைத் தாக்கச் செய்தான். துவிவிதன் ஹனுமான், நீலன், விருஷபன், சரபன் முதலிய வீரர்கள் கும்பகர்ணனைப் பலமாகத் தாக்கினார்கள். அவனோ அதையெல்லாம் லட்சியம் செய்யவில்லை. வானரர்களை ஒருவர்பின் ஒருவராக அடித்து நொறுக்கிக் கீழே தள்ளினான். வானர சேனைக்குப் பயங்கர நாசம் விளைவித்தான். அங்கதனே அடிபட்டு நினைவற்றுப் பூமியில் விழுந்தான். சுக்ரீவனும் அடிபட்டுப் பிரக்ஞையற்றுக் கீழே விழுந்தான். நினைவற்றுக் கிடந்த சுக்ரீவனை எடுத்துத் தூக்கிக் கொண்டு கும்பகர்ணன் வெகு மகிழ்ச்சியுடன் லங்கையை நோக்கி ஓடினான். ராக்ஷஸ சேனை பெரு மகிழ்ச்சி யடைந்து ஆரவாரித்தது. அண்ணன் ராவணனிடம் வானர ராஜனைக் கொண்டு போய்த் தான் தந்த பரிசாகக் கொடுக்கக் கும்பகர்ணன் சென்றான்.

* * *

இவ்வண்ணம் பிரக்ஞை இழந்த வானர ராஜனைத் தூக்கிக் கொண்டு லங்கா நகர ராஜ வீதியில் வெற்றிகரமாகச் சென்ற கும்பகர்ணன் மேல் மாடமாளிகையிலிருந்து அரக்கர்களும் அரக்கிகளும் புஷ்பமும் சந்தனக் குழம்பும் ஏராளமாகப் பொழிந்தார்கள். சிறிது நேரம் கழிந்தது. சுக்ரீவன் நினைவு அடைந்தான். ‘என்ன இது? எங்கே இருக்கிறேன்?’ என்று நாற்புறமும் பார்த்து விஷயம் அறிந்து கொண்டான்.



திடீர் என்று அரக்கனுடைய காதுகளையும் மூக்கையும் பல்லால் கடித்தும் நகங்களால் கிழித்தும் ரணமாக்கித் துன்பப்படுத்தினான். அரக்கன் அந்த வேதனையைப் பொறுக்க மாட்டாமல் சுக்ரீவனைக் கீழே போட்டுக் காலால் துவைக்கப் பார்த்தான். உடனே சுக்ரீவன் குதித்தெழுந்து ஆகாய மார்க்கமாக ராமசந்திரன் இருந்த இடத்துக்குப் பாய்ந்து போய்விட்டான்.

இப்படிச் சுக்ரீவன் செய்வான் என்பதை முன்னமே ஹனுமான் உணர்ந்து கொண்டு, கலங்கிப் போன வானர சேனையை வியூகப்படுத்தி அமைதியாகவும், தைரியமாகவும் நிற்கச் செய்து மறுபடியும் யுத்தத்துக்கு ஆயத்தமாக்கினான். காதுகளும் மூக்கும் அறுபட்டு ரத்த வெள்ளமாகக் கும்பகர்ணன் சாயங்கால மேகத்தைப் போலச் செக்கச் சிவந்து, ஏமாற்றமடைந்த பெருங் கோபத்தோடு காலாந்தகனைப் போல் யுத்த களத்துக்கு ஒரு பெரிய இரும்பு உலக்கையைக் கையில் தூக்கிக்கொண்டு மறுபடியும் திரும்பினான்.

* * *

**யா**ராலும் கும்பகர்ணனைத் தடுக்க முடியவில்லை. கொன்றும் தின்றும் வானர சேனையை அழித்துக்கொண்டே வந்தான். அவன்மேல் வானரர்கள் ஏறி மலைபோன்ற அவன் தேகத்தைக் குத்தியும் கிழித்தும் பார்த்தார்கள். அவனோ இதை ஒன்றும் லட்சியம் செய்யவில்லை. ஈயை ஓட்டி உதறுவது போல் உதறித் தள்ளினான். வானரத் தலைவர்கள் யாராலும் அவனை அடக்க முடியவில்லை. லக்ஷ்மணனும் அம்புகள் எய்து பார்த்தான். ஆனால் அரக்கன் அவனை விட்டு விட்டுத் தாண்டிச் சென்று ராமனை எதிர்க்க ஓடினான்.

ராமசந்திரன் அரக்கனோடு நெடு நேரம் போர் செய்தான். ஏழு மரா மரங்களையும் வாலியின் வஜ்ர தேகத்தையும் துளைத்துச் சென்ற அம்பு கும்பகர்ணனுடைய உடலை ஒன்றும் செய்ய முடியவில்லை. கூரிய வேறு பலமான அம்புகளை எய்து, கைகளை வெட்டியும், கால்களை வெட்டியும் தீர்த்தான். ஆயினும் அரக்கன் யுத்தத்தை நிறுத்தவில்லை. முண்டமான கால்களைக் கொண்டே யுத்த களத்தில் நான்கு புறமும் சென்று வானரர்களை வாயால் விழுங்கிக் கொண்டு வந்தான்.

கடைசியாக ராமன் தன் வில்லை வளைத்து, ஓர் அம்பு செலுத்தி, அரக்கனுடைய தலையை அறுத்துத் தள்ளினான். அறுக்கப்பட்ட தலை இராமன் செலுத்திய சரத்தின் வேகத்தில் ஆகாயத்தில் கிளம்பி லங்கா நகரத்தில் ஒரு மலை விழுவது போல் ஜ்வாலையுடன் விழுந்தது.

* * *

"**கா**லாந்தகனைப் போன்ற உமது தம்பி கும்பகர்ணன் உத்தமலோகம் அடைந்து விட்டான். அநேக ஆயிரம் வானரர்களைக் கொன்று தின்று வெகு நேரம் ராம லக்ஷ்மணர்களுடைய வானர சேனையைத் தத்தளிக்கச் செய்தான். பிறகு ராமனுடைய சரத்துக்கு இரையானான். அவனுடைய தேகம், புஜங்களும் கால்களும் அறுபட்டு விகார

சில்லறைக் காசு தட்டுப்பாடு அதிகமாக இருப்பதால் டெல்லியின் சுற்று வட்டாரங்களில் கடைக்காரர்கள் தாங்களே 5, 10, 15, 20 பைசா கூப்பன்களை அச்சடித்து வாடிக்கையாளருக்குச் சில்லறைக்குப் பதில் தருகிறார்கள். ரூபாய்க் கணக்கில் சேர்ந்ததும் அவற்றைக் கொடுத்து விட்டு நோட்டுபெறலாம். அல்லது அக்கடைக்காரரிடமே பொருள்கள் வாங்கலாம். —பாலி



ஆதாரம்:
மதர் இந்தியா

[தமிழகத்திலும் இப்படிச்சில்லறைக்குப் பதில் சீட்டுத் தரும் பழக்கம்வந்து விட்டது எனச் சான்றுடன் எழுதியுள்ளார் கொடுமுடி அன்பர் திரு எஸ். லக்ஷ்மணன். —ஆசிரியர்]

மடைந்து காட்டுத் தீயால் எரிபட்ட ஒரு மகா விருக்ஷத்தைப் போல் கிடக்கிறது. வெட்டுண்ட அவன் தேகத்தின் துண்டுகள் பாதி கடலில் விழுந்தும், பாதி கோட்டை வாசலை ஒரு மலை போல் அடைத்துக் கொண்டு மிருக்கின்றன. தலை அறுபட்டு ஆகாய மார்க்கமாக லங்கையில் விழுந்தது. தங்களுடைய அன்புக்குரிய சகோதரன் வீர சுவர்க்கம் அடைந்து விட்டான்.''

இவ்வாறு ராக்ஷசர்கள் ராவணனிடம் தெரிவித்தபோது தன் உயிரே போய் விட்டதாக எண்ணினான் ராவணன். சோகத்தால் நினைவு இழந்தான்.

பிறகு பிரக்ஞை வந்த பின், ''ஹா வீரனே! எல்லையற்ற பலவானே! என்னைத் தனியாக விட்டு விட்டு யமலோகம் சென்றாயே! என் வலது கை வெட்டுண்டது! எந்தச் சத்துருவும் கிட்ட நெருங்க முடியாதிருந்த நீ ராமனால் கொல்லப் பட்டாயா? வானத்தில் தேவர்கள் சந்தோஷப்படுவதைக் காண்கிறேன். வானரர்கள் ஆனந்தக் கூத்து ஆடுகிறார்கள். இனி இந்த ராஜ்யம் எனக்கு என்னத்துக்கு? என் அருமைத் தம்பி போன பின் என் உயிரை நான் எதற்காக வைத்திருக்க வேண்டும்? தம்பியைக் கொன்ற ராமனை நான் சித்திரவதை செய்ய வேண்டும்'' என்று துக்கமும் ரோஷமும் மேலிட்டுக் கதறினான். மீண்டும், ''ஐயோ! விபீஷணன் வார்த்தையைக் கேளாமல் போனேனே!'' என்று பிரலாபித்தான்.

திரிசிரன் முதலிய மக்கள்மார் இராவணனைத் தேற்றினார்கள். ''பிரலாபிப்பதில் ஒரு பயனுமில்லை. பிரம்மாவிடம் சக்தியும் கவசமும் வில்லும் பாணங்களும் கிடைத்திருக்க ஏன் மனத் தளர்ச்சி யடைகிறீர்?'' என்று சொல்லித் தேற்றினார்கள். திரிசிரன் யுத்தத்துக்குப் புறப்பட்டான். ''நான் முந்தி'' ''நான் முந்தி'' என்று வேறு பலரும் யானை மேலும் ரதங்களில் ஏறியும் திரிசிரனைத் தொடர்ந்து சென்றார்கள்.

* * *

பெரும் யுத்தம் நடந்தது. நராந்தகன் ஒரு குதிரையின் மீது ஏறி ஈட்டி எடுத்துக் கொண்டு வானர சேனையைத் தாக்கித் திணறச் செய்தான். சுக்ரீவனையே நோக்கிச் சென்ற நராந்தகனை அங்கதன் ஆயுதமின்றி எதிர்த்து அவன் குதிரையையும் அவனையும் கொன்று வீழ்த்தினான்.

இப்படியே தேவாந்தகனும் திரிசிரஸும் மாருதியாலும், மகோதரன் நீலனாலும் கொல்லப் பட்டார்கள். அதிகாயன் லக்ஷ்மணனுடைய அஸ்திரத்துக்கு இரையானான்.

இந்த நால்வரும் நான்கு யமன்களைப் போல் கோர யுத்தம் செய்து வானரப் படைக்குப் பெரும் சேதம் இழைத்த பின்னரே மாண்டார்கள்.

அதிகாயனும் மாண்டான் என்று அறிந்ததும் ராவணன் மனம் கலங்கிப் போனான்.

''என்ன ஆச்சரியம்! மலைபோன்ற தேகங்களும் கடலைப் போன்ற கலங்காத தைரியமும் கொண்ட என் வீரர்கள், ஒருவர்பின் ஒருவராக இந்தச் சத்துருக்களால் மாண்டார்கள். இது வரையில் தோல்வி என்பதை அறியாத என் சூரர்கள் எல்லோரும் இப்போது தோல்வி யடைந்து வீழ்த்தப்பட்டனர். என் மகன் ஒப்பற்ற இந்திரஜித்து கட்டிய நாகபாசத்தையும்கூட எப்படியோ தெறித்து விட்டு நிற்கிறார்கள். இந்த ராமனுடைய பராக்கிரமம் எனக்கு விளங்காத ஒரு விந்தையாக இருக்கிறது. இவன் நாராயணனே என்று எண்ணுகிறேன்.''

இவ்வாறு ஆச்சரியப்பட்டும் கவலைப் பட்டும் யோசிக்கலானான். மனமுடைந்தான் என்றே சொல்லலாம்.

கோட்டைக்குள் சத்துருப் படை புகுவதற்கில்லாமல், முக்கியமாக அசோக வனத்துக்குள் சத்துருக்கள் நுழையாமல் இருப்பதற்குத் தீவிர ஏற்பாடுகள் செய்துவிட்டு, அரண்மனைக்குள் தீனனாகப் போய்ச் சேர்ந்தான்! **(தொடரும்)**

# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

முப்பத்தைந்தாம் அத்தியாயம்

## குரங்குப் பிடி!

வந்தியத்தேவன் கவனமாகக் காது கொடுத்துக் கேட்டான். ஒரு நிமிட நேரம் காலடிச் சத்தம் கேட்பது போலிருந்தது. சட்டென்று அது நின்றது. மறுபடியும் கேட்டது. இப்போது அந்தச் சத்தம் பின்னோக்கிச் செல்வது போல் வர வரக் குறைந்தது.

''ஐயா! மேலே போகத்தான் வேண்டுமா? திரும்பி விடுவது நல்லதல்லவா?'' என்றாள் மணிமேகலை.

''இளவரசி! முன் வைத்த காலைப் பின் வைப்பது எனக்கு வழக்கமில்லை!'' என்றான் வல்லவரையன்.

''பிடித்தால், குரங்குப் பிடிதான் என்று சொல்லுங்கள்!''

''முன்னொரு தடவை தங்கள் தோழி சந்திரமதி என்னைக் 'குரங்குமூஞ்சி' என்று வர்ணித்தாள் அல்லவா? முகத்திற்கேற்பத்தான் பிடியும் இருக்கும்?''

இவ்விதம் சொல்லிக் கொண்டே வந்தியத் தேவன், இதுகாறும் மணிமேகலையின் பின்னால் வந்து கொண்டிருந்தவன், அவளைத் தாண்டிக் கொண்டு முன்னால் போக முயன்றான். அதை மணிமேகலை தடுக்கப் பார்த்தாள்.

இருவரும் ஒருவரோடொருவர் மோதிக் கொண்டார்கள்.

மணிமேகலையின் கையிலிருந்த விளக்கு தடால் என்று விழுந்தது. இரண்டு மூன்று படிகள் தடதடவென்று உருண்டு சென்று அணைந்துவிட்டது.

பின்னர் அந்த மேடு பள்ளமான நடை பாதையில் காரிருள் சூழ்ந்தது.

''இளவரசி! இது என்ன இப்படிச் செய்தீர்கள்?'' என்றான் வல்லவரையன்.

''தாங்கள் ஏன் என்னைத் தாண்டிக் கொண்டு முன்னால் போகப் பார்த்தீர்கள்?'' என்றாள் மணிமேகலை.

''அபாயம் நேரும்போது முன்னால் பெண்களை விட்டுக் கொண்டு போகும் வழக்கம் எனக்கு இல்லை!'' என்றான் வந்தியத்தேவன்.

''தங்களுக்கு எது எது வழக்கம், எது எது வழக்கமில்லை என்று ஒருமிக்க எனக்குத் தெரிவித்து விட்டால் நலமாயிருக்கும். அதற்குத் தகுந்தபடி நானும் நடந்து கொள்வேன்.''

''ஆகட்டும், அம்மணி! அவகாசம் கிடைக்கும்போது சொல்கிறேன்.''

''இப்போது அவகாசம் இல்லாமல் என்ன? வாருங்கள், திரும்பி நந்தவனத்துக்குப் போகலாம். அங்கே அவகாசமாக உட்கார்ந்து கொண்டு சொல்லுங்கள்.''

''இருட்டில் வருவதற்குத் தங்களுக்குப் பயமாயிருந்தால் திரும்பிச் செல்லுங்கள்!....''

''தங்களைப் போன்ற வீரர் அருகில் இருக்கும்போது எனக்கு என்ன பயம்?''

''பின்னே வாருங்கள், போகலாம்! வழியில் நிற்பதில் என்ன பயன்?''

இவ்வாறு சொல்லிக் கொண்டே முன்னால் போகப் பார்த்த வந்தியத்தேவன் கால் தடுக்கி விழப் பார்த்தான்.

மணிமேகலை அவன் விழுந்துவிடாமல் தாங்கிப் பிடித்துக் கொண்டாள்.

'' ஐயா! இந்த வழியில் மேடு பள்ளங்கள் அதிகம். படிகள் எங்கே, சம பாதை எங்கே என்று இருட்டில் கண்டு பிடிக்க முடியாது. நான் இந்த வழியில் எத்தனையோ தடவை போயிருக்கிறேன். படிகள், திருப்பங்கள் உள்ள இடமெல்லாம் நன்றாய்த் தெரியும். ஆகையால், தாங்கள் எவ்வளவு சூராதி சூரராக இருந்த போதிலும், என் கையைப் பிடித்துக் கொண்டு பின்னால் வருவது நல்லது. இல்லாவிட்டால் வேட்டை மண்டபம் போய்ச் சேர மாட்டீர்கள். வழியில் கால் ஒடிந்து விழுந்து கிடப்பீர்கள்!'' என்றாள் மணிமேகலை.

'' இளவரசி! தங்கள் கட்டளைப்படியே நடந்து கொள்கிறேன். வந்தனம்!'' என்றான் வந்தியத்தேவன்.

இருட்டில் மணிமேகலை வல்லவரையனுடைய ஒரு கரத்தைப் பற்றிக் கொண்டாள். வந்தியத்தேவனுடைய கரம் சில்லிட்டிருந்ததைத் தெரிந்துகொண்டாள். 'இவர் பகைவர்களுக்கு அஞ்சாதவர்; அதிகாரர்களுக்கும் பயப்படாதவர்; இந்தப் பேதைப் பெண்ணின் கையைப் பிடிப்பதற்கு இவ்விதம் ஏன் பயப்படுகிறார்?' என்று அவள் உள்ளம் எண்ணமிட்டது.

சிறிது தூரம் இருவரும் மௌனமாகச் சென்ருர்கள். வந்தியத் தேவன் அடிக்கடி தடுமாறி விழப் பார்த்தான். ஒவ்வொரு தடவையும் அவன் விழுந்து விடாமலிருக்கும் பொருட்டு மணிமேகலை அவனுடைய கையை இறுக்கிப் பிடித்துக் கொள்ள வேண்டி நேர்ந்தது.

"நரகத்துக்குப் போகும் வழி இப் படித்தான் இருள் அடர்ந்திருக்கும்!" என்று சொன்னன் வந்தியத் தேவன்.

"ஓகோ! தாங்கள் நரகத்துக்குப் போய் விட்டு வந்திருக்கிறீர்களா?" என்று மணிமேகலை கேட்டாள்.

"நான் நரகத்துக்கும் போனதில்லை; சொர்க்கத்துக்கும் போனதில்லை. பெரியோர்கள் சொல்லியிருக்கிருர்கள்!"

"அவர்களுக்கு அவர்களுடைய பெரியோர்கள் சொல்லியிருப்பார்கள்!"

சில காலத்துக்கு முன்பு வரையில் நாலு பேருக்கு முன்னல் வருவதற்குக் கூடக் கூச்சப்பட்டுக் கொண்டிருந்த இந்தப் பெண், இவ்வளவு வாசாலகமுள்ளவள் ஆனது எப்படி என்று வந்தியத் தேவன் சிந்தித்துப் பார்த்தான்.

"நரகத்துக்குப் போகும் வழிதான் இருட்டாயிருக்கும்; சொர்க்கத்துக்குப் போகும் வழி எப்படி இருக்குமாம்?" என்ருள் மணிமேகலை.

"ஒரே ஜோதி மயமாயிருக்குமாம்; கோடி சூரியப் பிரகாசமாயிருக்குமாம்!"

"அப்படியானல் நரகத்துக்குப் போகும் வழிதான் எனக்குப் பிடிக்கும்! ஒரு சூரியனே

கண்ணைக் கூசப் பண்ணுகிறது! கோடி சூரியனுடைய வெளிச்சம் கண்ணைக் குருடாக்கி விடுமே!'' என்றாள் மணிமேகலை.

''நரகத்துக்குப் போகும் வழியாகப் போனால் முடிவில் நரகத்துக்குத்தானே போய்ச் சேரும்படி யிருக்கும்?'' என்றான் வல்லவரையன்.

''தங்களைப் போன்ற வீர புருஷரைத் தொடர்ந்து போனால், நரகப் பாதை வழியாகச் சொர்க்கத்துக்குப் போனாலும் போகலாம்!'' என்றாள் மணிமேகலை.

''தங்களைப் போன்ற இளவரசியின் கையைப் பிடித்துக் கொண்டு போனால், நரகமே சொர்க்கம் ஆகிவிடும்!'' என்றான் வந்தியத்தேவன்.

உடனே உதட்டைக் கடித்துக் கொண்டு, 'இப்படிச் சொல்லிவிட்டோமே? இந்தப் பெண் ஏதாவது தவறாக எண்ணிக் கொள்ளப் போகிறாளோ?' என்று கவலை கொண்டான்.

''தங்களுடைய கரம் ஜில்லிட்டிருப்பதைப் பார்த்தால், தாங்கள் சொர்க்கத்துக்குப் போகிறவராக எண்ண இடமில்லை. கொலைக்களத்துக்குப் போகிறவரைப் போல் தங்கள் உடம்பு நடுங்குகிறது!'' என்றாள் மணிமேகலை.

''இளவரசி! இந்தப் பிரயாணத்தின் முடிவில் எனக்குக் கொலைக்களந்தான் காத்திருக்கிறதோ, என்னமோ?''

''தாங்கள்தானே முன் வைத்த காலைப் பின் வைப்பதில்லை என்று பிடிவாதம் பிடிக்கிறீர்கள்? வேட்டைமண்டபத்தில் எத்தனை கொலைகாரர்கள் இருக்கிறார்களோ, என்னமோ?''

''அவர்கள் எத்தனை பேர் வேண்டுமானாலும் இருக்கட்டும்; அவர்களுக்கு நான் பயப்படவில்லை. தாங்களும் நானும் இப்படிக் கைகோத்துக்கொண்டு இருட்டில் போவதைக் கந்தமாறன் பார்த்துவிட்டால்... அதைப் பற்றித்தான் யோசனை செய்கிறேன்.''

''ஐயா! நான் உயிரோடிருக்கும் வரையில் என் தமையனால் தங்களுக்கு ஒரு கெடுதியும் நேராது. நான் காணும் கனவில் பாதி இப்போது உண்மையாக நடந்திருக்கிறது; இன்னும் பாதியும் ஒருவேளை உண்மையானாலும் ஆகலாம். யார் கண்டது?'' என்றாள் மணிமேகலை.

இந்தச் சமயத்தில் ஏதோ ஒரு கதவு பூட்டப்படும் சத்தத்தைக் கேட்டு இருவரும் திடுக்கிட்டுப் போய் நின்றார்கள்.

''வேட்டை மண்டபத்துக்குச் சமீபத்தில் வந்து விட்டோம்!'' என்று மணிமேகலை மெல்லிய குரலில் கூறினாள்.

இதற்குள் சற்றுத் தூரத்தில் சிறிது வெளிச்சம் தெரிந்தது. வர வர அவ்வெளிச்சம் அதிகமானதுடன் அவர்களை நெருங்கி வந்ததாகத் தோன்றியது. மணிமேகலை வந்தியத் தேவனுடைய கரத்தை விட்டு விட்டுச் சற்று விலகி நின்றாள்.

அடுத்த நிமிஷத்தில், ஒரு கையில் தூக்கிப்பிடித்த விளக்குடனும் இன்னொரு கையில் முறுக்கித் திருகிய வேலைப்பாடு அமைந்த கூரிய கத்தியுடனும் இடும்பன்காரி அவர்களுக்கு எதிரே தோன்றினான்.

இவர்களைப் பார்த்ததும் அவன் அதிசயத்தினால் திகைத்துப் போனவனைப் போல் நின்றான். ஆனால் அவன் அவ்வாறு வேஷம் போடுகிறான் என்பது இருவருக்கும் தெரிந்து போயிற்று.

''அம்மா! ஐயா! இது என்ன? இந்த இருட்டில் இவ்விதம் தனியாகக் கிளம்பினீர்கள்? அடிமையிடம் சொன்னால் விளக்குப் பிடித்துக் கொண்டு வரமாட்டேனா? எங்கே புறப்பட்டீர்கள்?'' என்று கேட்டான்.

''இடும்பன்காரி! மலையமான் படை எடுத்து வருவதாகச் செய்தி வந்திருக்கிறது அல்லவா? ஆகையால் மதிள் வாசல்கள் சுரங்க வாசல்கள் எல்லாம் பத்திரமாகப் பூட்டியிருக்கிறதா என்று பார்ப்பதற்காக வல்லத்து இளவரசரையும் அழைத்துக் கொண்டு புறப்பட்டேன்!'' என்றாள் மணிமேகலை.

''அதிசயமாயிருக்கிறது, தாயே! நானும் அதைத்தான் பார்த்து விட்டு வருகிறேன்!'' என்றான் இடும்பன்காரி.

''அப்படித்தான் நினைத்தேன். நாங்கள் வரும்போது கொண்டு வந்த விளக்கு வழியில் விழுந்து அணைந்துவிட்டது. இங்கே கொஞ்சம் வெளிச்சம் தெரிந்தது. நீயாய்த்தான் இருக்க வேண்டும் என்று எண்ணி மேலே வந்தோம்.''

''சின்ன எஜமான் பார்க்கச் சொன்னார்கள்; அதனால் போய்ப் பார்த்து விட்டு வந்தேன். சுரங்கப் பாதையெல்லாம் சரிவர அடைத்துத் தாளிட்டிருக்கிறது. திரும்பிப் போகலாமா, தாயே!''

''உன் கையில் உள்ள விளக்கைக் கொடுத்துவிட்டு நீ போ! இந்த இளவரசருக்கு வேட்டை மண்டபத்திலிருந்து ஒரு வேலாயுதம் பொறுக்கி எடுத்துக் கொள்ள வேண்டுமாம். இவருடைய வேல் கொள்ளிடத்தில் போய் விட்டதாம். ஒருவேளை யுத்தம் வந்தாலும் வரலாம் அல்லவா...?''

''ஆம், அம்மணி! யுத்தம் வந்தாலும் வரலாம். ஆகையால் வேற்று மனிதர்களை வேட்டை மண்டபத்துக்குள் அழைத்துப் போகாமலிருப்பதே நல்லது.

தங்களுக்குத் தெரியாததற்கு நான் ஒன்றும் சொல்லத் தேவையில்லை.''

''அது உண்மைதான், காரி! ஆனால் இவர் வேற்று மனிதர் அல்ல. சின்ன எஜமானுக்கு உயிருக்கு உயிரான சிநேகிதர் ஆயிற்றே! இன்னும் ஏதேனும் புதிய உறவு ஏற்பட்டாலும் ஏற்படும். நீ விளக்கைக் கொடுத்துவிட்டுப் போ!'' என்றாள் மணிமேகலை

இடும்பன்காரி வேண்டாவெறுப்பாக விளக்கை இளவரசியிடம் கொடுத்து விட்டுப் போனான்.

வந்தியத் தேவனும் மணிமேகலையும் மேலே நடந்து வேட்டை மண்டபத்தை அணுகிச் சென்றார்கள்.

எங்கிருந்தோ ஓர் ஆந்தையின் குரல் கேட்டது.

''இது என்ன? அரண்மனைக்குள்ளே ஆந்தை எப்படி வந்தது?'' என்று மணிமேகலை வியப்புடன் கூறினாள்.

''ஒரு வேளை வேட்டை மண்டபத்துக்குள் இருக்கும் செத்த ஆந்தைக்கு உயிர் வந்து விட்டதோ, என்னமோ? முன்னொரு சமயம் இளவரசியைப் பார்த்ததும் செத்த குரங்கு உயிர் பெறவில்லையா?'' என்றான் வந்தியத் தேவன்.

வேட்டை மண்டபத்தின் கதவு வெளிப் பக்கம் பூட்டப்பட்டிருந்தது.

மணிமேகலை தான் கொண்டு வந்திருந்த சாவியைப் போட்டுப் பூட்டைத் திறந்தாள். பிறகு, கதவையும் இலேசாகத் திறந்தாள்.

இருவரும் உள்ளே பிரவேசித்தார்கள்.

முதலில் சிறிது நேரம் அவர்களைச் சுற்றிலும் செத்த யானைகள், கரடிகள், புலிகள், மான்கள், முதலைகள், பருந்துகள், ஆந்தைகள் — இவற்றின் பயங்கரமான உருவங்கள்தாம் தெரிந்தன.

விளக்கைத் தூக்கிப் பிடித்து நன்றாக உற்றுப் பார்த்தபோது, அந்தப் பிராணிகளுக்குப் பின்னால் பாதி மறைந்தும் பாதி மறையாமலும் சில மனித உருவங்கள் உட்கார்ந்திருப்பது தெரிந்தது.

அப்போது அவர்கள் திறந்துகொண்டு வந்த வேட்டை மண்டபத்தின் கதவு படாரென்று சாத்தப்பட்டு விட்டது.

யார் அவ்வளவு பலமாகக் கதவைச் சாத்துகிறார்கள் என்று தெரிந்து கொள்ள வந்தியத்தேவன் திரும்பிப் பார்த்தான்.

அதேக்ஷணத்தில் அவன் பின்னாலிருந்து பலமாகப் பிடித்துத் தள்ளப்பட்டான். முன்னொரு சமயம் அவன் எந்த வாலில்லாக் குரங்கின் பின்னால் ஒளிந்து கொண்டிருந்தானோ, அந்தக் குரங்கின் முன்புறத்தில் போய் மோதிக் கொண்டான்.

## கழுத்திலிருப்பது நிஜப் பாம்பு!

செல்வி ராஜலக்ஷ்மிக்குச் சின்ன வயதிலேயே அபிநயக் கலையில் நல்ல திறமை இருக்கிறது. 8-5-71 அன்று மியூசியம் தியேட்டரில் நடந்த அவளது பரத நாட்டிய நிகழ்ச்சியில் பாவமும் லயமும் அற்புதமாக இணைந்து வெளிப்பட்டன. அலாரிப்பு, ஜதிஸ்வரம், சப்தம், வர்ணம், தில்லானா முதலிய நடனக் கலை நுணுக்க அம்சங்களில் அச்சிறுமி காட்டிய சோர்வில்லாத, சுறுசுறுப்பு பாராட்டும்படி இருந்தது. அவளோடு அவள் சகோதரிகள் ராதா லக்ஷ்மி, ஸ்ரீதா லக்ஷ்மி இருவரும் பங்கெடுத்துக் கொண்டு நிகழ்ச்சிக்கு மெருகேற்றினர்.

இச் சிறுமியின் நிகழ்ச்சியோடு மேலும் சுவை கூட்டும் நோக்கத்தோடு கண்ணன், மகேசுவரி இருவரின் பாம்பாட்டி நடனம், கிராமிய நடனம் ஆகியவற்றைச் சேர்த்திருந்தார்கள்.

குறத்தி நடனக் காட்சியில் ராஜலக்ஷ்மியின் உடைப் பொருத்தம் நன்றாயிருந்தது. கடைசி நிகழ்ச்சியான ''நடனமாடினார்'' என்ற பாடலுக்குச் செல்வி ராஜலக்ஷ்மி உண்மைப் பாம்பையே கழுத்தில் போட்டுக்கொண்டு ஆடி, சபையோரின் உற்சாகமான கையொலியைப் பெற்றாள். இவள் ஏ. ஜீ. காரியாலய சூபரின்டெண்டும் தற்போது தர்மபுரி சின்னறு புலிஷன் மாஜிஸ்ட்ரேட்டுமான திரு. ஆர். கிருஷ்ணமூர்த்தியின் புதல்வி. கலையுலகில் மேன்மேலும் இவள் வெற்றி பெற வாழ்த்துகிறோம்.

---

இரண்டு கரங்கள் அவனைப் பலமாகப் பற்றிக் கொண்டன. ''குரங்குப் பிடி'' எவ்வளவு வலிவுள்ளது என்பதை அப்போதுதான் அவன் நன்றாக, அநுபவ பூர்வமாகத் தெரிந்து கொண்டான்.

அவனுடைய அரையிலிருந்த கத்தியை எடுக்கச் செய்த முயற்சி சிறிதும் பலிக்க

வில்லை. அப்பால் இப்பால் அவனால் திரும்பவே முடியவில்லை.

குரங்கின் கைகள்,—அல்லது குரங்கின் கைகளோடு சேர்ந்து வந்த இரண்டு மனிதக் கைகள், — அவனை அவ்வளவு பலமாகப் பிடித்துக் கொண்டன.

இன்னும் இரண்டு கைகள் அவனுடைய அரையிலேயிருந்த கத்தியை அவிழ்த்து எடுத்துக் கொண்டன.

"ஐயோ!" என்று பயங்கரமாக அலறிக் கொண்டு அவனருகில் ஓடி வந்த மணிமேகலையின் மார்பை நோக்கி அந்தக் கத்தி நீட்டப்பட்டது.

"சத்தம் போட வேண்டாம். சிறிது நேரம் சும்மா இருந்தால் — நாங்கள் சொல்கிறபடி கேட்டால்,—உங்கள் இருவருடைய உயிருக்கும் அபாயம் இல்லை. சத்தம் போட்டீர்களானால் இருவரும் உயிர் இழக்க நேரிடும். முதலில், இந்த அதிகப் பிரசங்கி இளைஞன் இறந்து விழுவான்!" என்றது ஒரு குரல்.

அது ரவிதாஸனுடைய குரல் என்று வந்தியத்தேவன் தெரிந்துகொண்டான்.

"இளவரசி! சற்றுச் சும்மா இருங்கள்! இவர்கள் எதற்காக வந்திருக்கிறார்கள், என்னதான் சொல்லுகிறார்கள் என்று கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்!" என்று சொன்னான் வந்தியத்தேவன்.

## அத்தியாயம் முப்பத்தாறு

# பாண்டிமாதேவி

**வ**ந்தியத்தேவனை வாலில்லாக் குரங்கோடு சேர்த்துக் கட்டியவர்கள், அவனுக்கு அருகில் சுவரில் மாட்டியிருந்த கலைமானின் கொம்புகளோடு மணிமேகலையைச் சேர்த்துக் கட்டினார்கள்.

"மந்திரவாதி! நான்தான் உங்கள் எதிரி! கடம்பூர் இளவரசியை ஏன் கட்டுகிறீர்கள்? விட்டு விடுங்கள்!" என்றான் வந்தியத் தேவன்.

ரவிதாஸன் அவனைப் பார்த்து, "பொறு, தம்பி, பொறு! பல தடவை நீ எங்கள் காரியத்தில் குறுக்கிட்டிருக்கிறாய்! ஒவ்வொரு தடவையும் உன்னை நாங்கள் உயிரோடு விட்டு வந்தோம். ஆனாலும் நீ எங்களைப் பின்தொடர்ந்து வருவதை நிறுத்தவில்லை!" என்றான்.

வந்தியத்தேவன் சிரித்தான்.

"என்னப்பா, சிரிக்கிறாய்? வாலில்லாக் குரங்கின் ஆலிங்கனம் அவ்வளவு குதூகலமாயிருக்கிறதா!" என்று கேட்டான் ரவிதாஸன்.

"இல்லை! நீ சொன்னதை எண்ணிப் பார்த்துத்தான் சிரித்தேன்!" என்றான் வல்லவரையன்.

"நான் சொன்னவற்றில் எதைக் குறித்து இப்படிச் சிரிக்கிறாய்?"

"உங்களை நான் தொடர்ந்து வருவதாகச் சொன்னாயே? நீங்கள் என்னை விடாமல் தொடர்ந்து வருவதாகவும் சொல்லலாம் அல்லவா? என் காரியத்தில் நீங்கள் குறுக்கிடுவதாகவும் சொல்லலாம் அல்லவா? இப்போது பார்! நான் கடம்பூர் இராஜகுமாரியை அழைத்துக் கொண்டு ஒரு முக்கியமான காரிய நிமித்தமாகப் புறப்பட்டேன். நீ குறுக்கிட்டு என்னை இந்தக் குரங்கோடு சேர்த்துக் கட்டிப் போட்டிருக்கிறாய்!"

"ஓகோ! அப்படியா சமாசாரம்? உன் காரியத்தில் நாங்கள் குறுக்கிடுவதாகவே வைத்துக் கொள். ஆனால் அவ்விதம் நேர்வது இதுதான் கடைசி முறை. இன்று நீ உயிரோடு பிழைத்து விட்டாயானால், பிறகு எங்களைக் காணவே மாட்டாய்!"

"அப்படியானால், நான் உயிரோடிருக்கப் பிரயத்தனப்பட வேண்டியதுதான்! மந்திரவாதி! நான் உயிரோடு தப்புவதற்கு நீயே ஒரு தந்திரம் சொல்லிக் கொடு!" என்றான் வந்தியத்தேவன்.

"பேஷாகச் சொல்லித் தருகிறேன். இந்த மண்டபத்திலும் இதற்கு அடுத்த அறையிலும் என்ன நடந்தாலும் நீ அதைப் பார்த்துக் கொண்டு சும்மா இரு! பதற்றமாக ஒன்றும் செய்யாதே! உன் உயிருக்கு ஆபத்து நேராது."

"ஏன் என் பேரில் உங்களுக்கு அவ்வளவு அபிமானம்? ஏன் என்னைக் கொல்லாமல் விடுகிறீர்கள்?"

"அப்படிக் கேள்! அது பெரிய முட்டாள்தனந்தான்! ஆனால் எங்கள் தேவியின் கட்டளை!"

"யார் உங்கள் தேவி?"

"இன்னுமா உனக்குத் தெரியவில்லை? பாண்டிமாதேவிதான்! பெரிய பழுவேட்டரையரின் வீட்டில் வந்திருக்கும் வீர பாண்டிய சக்கரவர்த்தியின் வீரபத்தினி நந்தினி தேவிதான்!"

"நல்ல வீரபத்தினி!...."

"சீ! துஷ்டச் சிறுவனே! எங்கள் தேவியைப் பற்றி ஏதேனும் சொன்னால் உயிரை இழப்பாய்! ஜாக்கிரதை!"

"நீங்கள் அல்லவா பழுவூர் ராணியின் மீது அவதூறு சொல்கிறீர்கள்? இன்னொரு புருஷன் வீட்டில் வந்திருப்பவளை

Who cares if your hair is different?

# Sunsilk cares—
## with 3 special shampoos

**Pick the one that's perfect for you**

**Sunsilk Lemon Shampoo**
**For Greasy Hair:** Gently washes out excess grease... gives you days of clean, bouncing, silken hair.

**Sunsilk Tonic Shampoo**
**For Dry Hair:** Contains Allantoin to nourish your hair... revives that silken lustre, leaves hair softly glowing.

**Sunsilk Beauty Shampoo**
**For Normal Hair:** Perfectly balanced to keep your hair in beautiful condition, weaving silk into every strand.




**Sunsilk** - more than a shampoo, a cosmetic for your hair

*Quality Products by HINDUSTAN LEVER*

LINTAS-SS. 11-140



## விநோத சம்பிரதாயம்

**ப**ர்மியச் சிறுவனுக்கு நாலு வயதாகும் போது சொத்து சுகங்களின் அநித்தியத்தை நினைவூட்ட, பிரார்த்தனையின் சிறப்பைக் காட்ட, ஒரு விழா எடுக்கிறார்கள். அதைக் கோலாகல மாகக் கொண்டாடுகிறார்கள். கல்யாணத்துக் காகும் செலவைவிட இந்த விசேஷத்துக்கு அதிக மாகச் செலவழிப்பார்கள். கௌதம புத்தரின் அரச வாழ்க்கையை நினைவூட்டும் ராஜ உடையை அந்த நாலு வயதுச் சிறுவனுக்கு அணிவித்து மகிழ்வார்கள். பிறகு அவற்றைப் பர்மியப் பைய னின் தந்தை அகற்றி விடுவார். சிறுவனுக்குத் தலையை மொட்டையடித்து, காவியுடை அணி வித்து, கையில் பிக்ஷைப் பாத்திரம் கொடுப் பார்கள். ஒரு நாள் இரவு முழுதும் பக்கத்தில் உள்ள பௌத்த மடத்தில் தங்கியிருப்பான் அந்த இளம் பர்மியச் சிறுவன். இளம் வயதி லேயே எளிமையின் உயர்வையும் இறை உணர்ச்சி தரும் அமைதியையும் அவன் அறி கிறான். அதன் பிறகு இருபதாவது வயதிலும் அந்தப் பையன் மூன்று மாத காலம் பௌத்த விஹாரத்தில் கழிக்க வேண்டியிருக்கும். 'புத்தம் சரணம் கச்சாமி, தர்மம் சரணம் கச்சாமி, சங்கம் சரணம் கச்சாமி' என்பது இள வயதிலே ஊட்டப்படும் தாரக மந்திரம்.

—பி. எஸ். எம்.

வீரபாண்டியனுடைய தேவி என்று சொல்கிறீர்களே?''

''அதனால் என்ன? இராமனுடைய பத்தினி சீதை, இராவணனுடைய வீட்டில் சில காலம் இருக்கவில்லையா?''

''இராமர் போய்ச் சீதா தேவியை அழைத்துக்கொண்டு வந்துவிட்டாரே?''

''நாங்களும் எங்கள் பாண்டிமா தேவியை அழைத்துக் கொண்டு போகத்தான் வந்திருக்கிறோம். அவர் பழுவூர் அரண்மனையில் தாமாகவே எந்தக் காரியத்துக்காகச் சிறைப்பட்டிருந்தாரோ, அது இன்றைக்கு முடியப் போகிறது..''

''ஆகா! அது என்ன காரியம்?''

''சற்று நேரம் பொறுமையாயிரு! நீயே தெரிந்து கொள்வாய்! உன் துஷ்டத்தனத்தைக் காட்டினாயானால், நீ மட்டுமல்ல, — இந்தப் பெண்ணும் தூக்கிலுக்கு உள்ளாக நேரிட்டுவிடும்!''

**இ**வ்விதம் கூறிவிட்டு ரவிதாஸன் எதிர்ப்பக்கத்துச் சுவரண்டைப் போவதற்கு யத்தனித்தான்.

''மந்திரவாதி! இன்னும் ஒரே ஒரு விஷயம் சொல்லி விட்டுப் போ!'' என்றான் வந்தியத்தேவன்.

ரவிதாஸன் திரும்பிப் பார்த்து, ''தம்பி, என்னை 'மந்திரவாதி'யென்று இனி அழையாதே!'' என்றான்.

''பின்னே, தங்களை என்னவென்று அழைக்க வேண்டும்?''

''முதன் மந்திரி என்று மரியாதையுடன் அழைக்க வேண்டும்!''

''ஐயா! தாங்கள் எந்த மகாராஜ்யத்தின் முதன் மந்திரியோ?''

''தெரியவில்லையா, உனக்கு? பாண்டிய மகா சாம்ராஜ்யத்தின் முதன் மந்திரி! பள்ளிப்படைக்கு அருகில் நடந்த பட்டாபிஷேக வைபவத்தை நீ பார்த்துக் கொண்டிருந்தாயே?''

''பார்த்துக் கொண்டிருந்தேன். ஆனால் அது ஏதோ என் மனப் பிரமை என்று நினைத்தேன்....''

''அதனாலேதான் அதைப் பற்றி யாரிடமும் சொல்லவில்லையாக்கும்!''

''இரண்டொருவரிடம் சொன்னேன். அவர்கள் என்னைப் பைத்தியக்காரன் என்றார்கள்; நான் ஏதோ துர்ச் சொப்பனம் கண்டிருக்க வேண்டும் என்றும் சொன்னார்கள்....''

''ஆகா! அவர்கள் அப்படியே நினைத்துக் கொண்டிருக்கட்டும். நீ வெளியில் சொன்னால் யாரும் நம்பமாட்டார்கள் என்று நம்பித்தான் உன்னை நாங்களும் உயிரோடு விட்டோம்!....''

''மந்திரவாதி! நீங்கள் என்னை உயிரோடு விட்டதற்கு அது ஒன்று மட்டும் தான் காரணமா?''

''வேறு என்ன?''

''உங்கள் ராணி எனக்காகச் சிபாரிசு செய்யவில்லையா?''

''அதனால் என்ன?''

''இப்போதும் அவருடைய சிபாரிசு எனக்குக் கிடைக்கும்.''

''கிடைக்கும்வரையில் பொறுத்திரு.''

''மந்திரவாதி! உங்கள் ராணி என்னை அவசரமாக அழைத்து வரும்படி இந்தக் கடம்பூர் இளவரசியை அனுப்பி வைத்தார். அதனாலேதான் நாங்கள் இருவரும் ஒன்றாக வந்தோம்....''

''அப்படியா! இராணியின் அறைக்கு வருவதற்கு வேறு வழி இருக்கிறதே? இந்த வழியில் வருவானேன்?''

''அதைப் பற்றி உன்னிடம் நான் சொல்ல வேண்டியதில்லை. ராணி கேட்டால் சொல்லிக் கொள்கிறேன்....''

''ராணி வந்து கேட்கும் வரையில் பொறுத்துக் கொண்டிரு!''

''மந்திரவாதி! என்னையும் சம்புவரையர் குமாரியையும் உடனே கட்டவிழ்த்து விடச் சொல்! இல்லாவிட்டால்....?''

''என்ன செய்வாய்?''

''இந்த மண்டபம் அதிரும்படி கூச்சல் போடுவேன்!''

"நீ அப்படிக் கூச்சல் போட்ட உடனே உன்மேல் மூன்று வேல்கள் ஒரே சமயத்தில் பாயும், ஜாக்கிரதை!"

வந்தியத்தேவன் ஒரு முறை சுற்றுமுற்றும் கூர்ந்து பார்த்தான்.

ஆம்; மூன்று சதிகாரர்கள் கையில் வேலுடன் தயாராகக் காத்திருந்தார்கள்.

"தம்பி! நீ ரொம்பக் கெட்டிக்காரப் பிள்ளை. உன்னை எங்களுடன் சேர்த்துக் கொள்ளலாம் என்ற ஆசைகூட எனக்கு ஒரு சமயம் இருந்தது. ஆனால் அந்தப் பழையாறை மோகினியின் பாசவலையில் நீ விழுந்து விட்டாய். அது போனால் போகட்டும். இப்போது புத்திசாலித்தனமாகப் பிழை! சத்தம் மட்டும் போட்டால் நீ சாவது நிச்சயம்!"

இவ்வாறு ரவிதாஸன் எச்சரித்துவிட்டு எதிர்ப் பக்கத்துச் சுவரில் பொருத்தியிருந்த யானை முகத்தை நோக்கிப் போனான். சிறிது நேரம் சுவரண்டைக் காது கொடுத்துக் கேட்டான். பின்னர், அந்த யானையின் நீண்ட தந்தங்களைப் பிடித்துத் திருகினான்.

அங்கே ஒரு சிறிய துவாரம் ஏற்பட்டது. உள் அறையில் பிரகாசமாக ஜொலித்துக் கொண்டிருந்த தீபங்களின் ஒளி வட்ட வடிவமான பூரண சந்திரனுடைய வெள்ளிக் கிரணங்களைப்போல் வேட்டை மண்டபத்துக்குள்ளும் வந்து சிறிது பிரகாசப்படுத்தியது.

வந்தியத்தேவன் பக்கவாட்டில் திரும்பிப் பார்த்தான். இளவரசி மணிமேகலை தன் இடுப்பில் செருகியிருந்த சிறு கத்தியை எடுத்து அவனைக் கட்டியிருந்த கட்டுக்களை அறுத்து விட்டதைத் தெரிந்து கொண்டான்.

மணிமேகலை இடும்பன்காரியிடமிருந்து வாங்கிக் கொண்டு வந்த சிறிய விளக்கு, வேட்டை மண்டபத்தின் ஒரு மூலையில் 'முணுக்கு' 'முணுக்கு' என்று எரிந்து கொண்டிருந்தது. அதன் வெளிச்சம் மணிமேகலையின் மீது படவே இல்லை.

## முன்னேற்றப் பாதையில்!

ஆசிரியர்: நீ விடியற்காலே நாலு மணிக்கே எழுந்து விடுகிறாயா? பேஷ், பேஷ்! முன்னுக்கு வர்ற பையன்னு இப்படித்தான் இருக்கணும். நீ எழுந்ததும் என்ன செய்வே?

மாணவன்: 'பெட் காபி' குடிச்சுட்டு மறுபடியும் படுத்துத் தூங்குவேன் சார்!



மேலும் சதிகாரர்கள் வந்தியத்தேவனையே கவனித்துக் கொண்டிருந்தபடியால், கடம்பூர் இளவரசி மணிமேகலையைக் கவனிக்கவும் இல்லை.

மணிமேகலை கட்டை அவிழ்த்து விடுதலை அடைந்து விட்டதை வந்தியத்தேவன் கவனித்துக் கொண்டான்.

உடனே வாயைக் குவித்துக் கொண்டு ஆந்தை கத்துவதுபோல் கத்தினான்.

முதலில் சதிகாரர்கள் மூவரும் சிறிது பிரமித்து நின்றார்கள். திறந்த துவாரத்தின் வழியாக உள்ளே எட்டிப் பார்த்துக் கொண்டிருந்த ரவிதாஸனும் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான்.

"ஆகா! உன் வேலையா?" என்று சொல்லிக் கொண்டு வந்தியத்தேவனை நோக்கி விரைந்து வந்தான்.

அவன் யானைத் தந்தங்களிலிருந்து கையை எடுத்ததும், சுவரிலிருந்து துவாரம் மறைந்தது. மறுபடியும் வேட்டை மண்டபத்தில் இருள் சூழ்ந்தது.

சதிகாரர்கள் மூவரும் கையில் வேல்களுடன் வந்தியத் தேவனை நோக்கி விரைந்து ஓடி வந்தார்கள்.

அவர்களில் ஒருவனை முறுக்கிய நீண்ட கொம்புகளை உடைய மான் தாக்கியது. இன்னொருவன் மீது பிரம்மாண்டமான கரடி ஒன்று விழுந்து அவனைக் கீழே தள்ளியது. மற்றொருவன் மீது திறந்த வாயையும் பயங்கரமான பற்களையும் உடைய முதலை பாய்ந்தது. ரவிதாஸன் தலை மீது ஒரு பெரிய ராட்சத வௌவால் தடாலென்று விழுந்தது.

இவ்விதம் திடீரென்று ஏற்பட்ட தாக்குதல்களினால் அவர்கள் ஒரு நிமிடம் செயலற்று நின்ற போது, மணிமேகலை வந்தியத்தேவனை அணுகி அவனுடைய கட்டுக்களை அறுத்து விட்டாள்.

வந்தியத்தேவன் இதுகாறும் தன்னைப் பிடித்துக் கொண்டிருந்த வாலில்லாக் குரங்கைத் தூக்கி அந்தச் சதிகாரர்கள்மேல் வீசி எறிந்தான்.

நால்வரும் தங்கள்மீது விழுந்த செத்த விலங்குகளின் உடல்களைத் தள்ளிவிட்டு மெதுவாகச் சமாளித்து எழுந்தார்கள். இதற்குள் வந்தியத்தேவன் கையில் வேல் ஒன்றை எடுத்துக் கொண்

டிருந்தான். தாக்க வருகிறவர்களைத் திருப்பித் தாக்கத் தயாராயிருந்தான்.

அச்சமயம் நந்தினி தேவியின் படுக்கை அறைக் கதவு நன்றாகத் திறந்தது.

வேட்டை மண்டபத்துக்குள் வெளிச்சம் புகுந்து பிரகாசப்படுத்தியது.

மறுகணம் நந்தினிதேவியும் வேட்டை மண்டபத்துக்குள்ளே பிரவேசித்தாள்.

''மந்திரவாதி! இது என்ன மூடத்தனம்? இங்கே என்ன தடபுடல் செய்கிறீர்கள்?'' என்று கேட்டுக் கொண்டே மேலே வந்தாள். (தொடரும்)

# அமரர் கு. அழகிரிசாமி குடும்ப நல நிதி

அமரர் கு. அழகிரிசாமி அவர்களின் மறைவால் தமிழகம் ஓர் அருமையான எழுத்தாளரை, அறிஞரை இழந்துவிட்டது.

தமிழ் இலக்கிய உலகில் பண்டைய இலக்கியங்கள் தொட்டு, இன்றைய இலக்கியங்கள் வரையில் கற்றறிந்து பாண்டித்தியம் பெற்றவர்கள் சிலரே. இத்தகைய சிலரில் ஒருவராகத் திகழ்ந்தவர் அழகிரிசாமி. அதே போல் சிறுகதை, நாடகம், நாவல், இலக்கிய ஆராய்ச்சி, மொழிபெயர்ப்பு முதலிய பற்பல இலக்கியத் துறைகளிலும் பணியாற்றி வெற்றி கண்டவர்களும் மிகச் சிலரே. இத்தகைய சிலரிலும் திரு அழகிரிசாமி ஒருவர்.

அழகிரிசாமி நூற்றுக்கணக்கான சிறுகதைகளையும், சில நாவல்களையும், நாடகங்களையும் எழுதியுள்ளார். 'அன்பளிப்பு', 'சிரிக்கவில்லை' முதலிய அவரது ஒன்பது சிறுகதைத் தொகுதிகள் அழியா வரம் பெற்ற அற்புதமான கதைகள் பலவற்றைக் கொண்டவை. 'தீராத விளையாட்டு' என்ற அவரது நாவல் கல்கியில் தொடர்கதையாக வெளிவந்து பல்லாயிரக்கணக்கான வாசகர்களை மகிழ்வித்தது. அவரது 'கவிச்சக்கரவர்த்தி கம்பன்' என்ற நாடகம் சென்னை சேவா ஸ்டேஜ் மூலம் அரங்கேறிப் புகழ் ஈட்டியது மட்டுமல்லாமல், நாடகப் படைப்புக்கு ஒரு நல்லணியாகவும் திகழ்ந்து வருகின்றது.

பெரிதும் கதாசிரியராகவே இருந்து வந்த திரு அழகிரிசாமி தமது அறிவையும், திறமையையும், கதைத் துறையோடு மட்டும் நிறுத்திக் கொண்டுவிடவில்லை. கம்பராமாயணத்தில் ஆழ்ந்த பயிற்சியும், பற்றும் கொண்டிருந்த அவர், அம்மாகாவியத்தைத் தக்க முறையில் பெயர்த்து எழுதித் தலைசிறந்த பதிப்பொன்றையும் வெளியிட்டுள்ளார். அதேபோல் அண்ணாமலை ரெட்டியாரின் காவடிச் சிந்தையும் ஆராய்ச்சிக் குறிப்புக்களோடு பதிப்பித்து, அதற்கு ஓர் அருமையான முன்னுரையையும் எழுதி வெளியிட்டார். இலக்கிய உலகிற்கு அவராற்றிய ஈடிணையில்லாத பணியாக இப்பதிப்பு திகழ்ந்து வருகின்றது.



யாம்பெற்ற இன்பம் இவ்வையகம் பெறுக என்று பெருநோக்கோடு தாம் கற்று மகிழ்ந்த தமிழ்ச் செல்வங்கள் பற்றிப் பல இலக்கியக் கட்டுரைகள் எழுதி, அவற்றைப் பல நூல்களாக அளித்துள்ளார். 'இலக்கியச் சுவை', 'இலக்கியத்தேன்' முதலிய கட்டுரைத் தொகுதிகள் இலக்கிய ரசிகர்களுக்குத் தெவிட்டா விருந்தளிப்பவை. அவர் வெளிநாட்டின் தலைசிறந்த இலக்கியப் படைப்புக்கள் பலவற்றையும் மொழிபெயர்த்துத் தந்திருக்கிறார். உலகில் தோன்றுதொட்டு வழங்கிவரும் பற்பல நாட்டுக் குட்டிக் கதைகளைத் தொகுத்தளிக்க அவர் மேற்கொண்ட முயற்சியும் வெற்றியும் வியக்கத் தக்கவை.

திரு அழகிரிசாமி இளம் வயதில் எதிர்பாராத விதத்தில் திடீரென்று காலமாக நேர்ந்தது நமது துர்ப்பாக்கியம். அழகிரிசாமியின் மறைவால் தமிழ் இலக்கிய உலகுக்கு நேர்ந்த துர்ப்பாக்கியத்தைக் காட்டிலும் அவரது மனைவி மக்களுக்கு நேர்ந்துள்ள துர்ப்பாக்கியம் மிகப் பெரியதாகும். தமிழ் இலக்கிய உலகுக்கு அரிய பல இலக்கியச் செல்வங்களை ஆக்கித் தந்த திரு அழகிரிசாமி அவர்கள் தமது மனைவிக்கும் சின்னஞ்சிறுவர்களான தமது நான்கு குழந்தைகளுக்கும் வருங்காலத்துக்கு உதவும் வகையில் எவ்வித வசதியும் தேடி வைக்காத நிலையிலே மறைய நேர்ந்து விட்டது.

எனவே அத்தகைய இலக்கியச் செல்வருடைய குழந்தைகளின் படிப்புக்கும், இதர எதிர்காலச் செலவுகளுக்கும் தக்க ஏற்பாடு ஒன்றைச் செய்யும்பொருட்டு அவரது குடும்பத்தாருக்குக் கணிசமான நிதி ஒன்றை விரைவில் திரட்டிக் கொடுப்பது தமிழர்களாகிய நமது நன்றிக் கடனாகும்.

இந்த நன்றிக் கடனைச் செலுத்த திரு ந. மகாலிங்கம் அவர்கள் தலைமையில் நிதிக் குழு ஒன்று அமைக்கப்பட்டுள்ளது. திருவாளர்கள் எல். வி. சகஸ்ரநாமம், கண. முத்தையா, அழ. வள்ளியப்பா ஆகியோர் செயலாளராகவும், திரு இ. ராஜேந்திரன் பொருளாளராகவும் இக்குழுவில் பணியாற்றுகின்றனர். தமிழன்பர்கள் அனைவரும் இப்பணியில் பங்கு கொண்டு, அமரர் அழகிரிசாமி குடும்ப நல நிதிக்குத் தாராளமாக நிதி உதவி செய்ய வேண்டுமெனக் கோருகிறோம்.

★ நிதி அனுப்ப வேண்டிய முகவரி: திரு இ. ராஜேந்திரன், கல்கி காரியாலயம், சென்னை-31

# இவள் சரோஜா

## அம்மாவின் கண்மணி • விளையாட்டிலும், படிப்பிலும் மணி

# தரமானது எதுவோ அதுவே அவளுக்கு வேண்டும்

விளையாட்டில் ஆர்வமும், புத்திசாலித்தனமும் உள்ள பெண்ணாக வளர்ந்துவிடத் துடிக்கிறாள் சரோஜா.

அவள் வளர்ச்சியில் அக்கறை கொண்ட அவள் தாய் தினந்தோறும் அவளுக்கு 'ஹார்லிக்ஸ்' கொடுக்கிறாள். 'ஹார்லிக்ஸ்'-தரமானது அதுவே. குழந்தைகளின் வளர்ச்சிக்குத் தேவையான அதிக சக்திக்கும், உடலுறுப்புகளின் வளர்ச்சிக்கு இன்றியமையாத புரதச் சத்துக்களுக்கும் 'ஹார்லிக்ஸ்' மிகச் சிறந்தது.

ஏனெனில், தூய்மையான முழு ஆடைப்பால், செழுமையான கோதுமை மற்றும் இதர இயற்கை உணவுச்சத்துக்கள் நிறைந்தது 'ஹார்லிக்ஸ்'.

தாய்மார்கள் 'ஹார்லிக்ஸை' நம்புகிறார்கள். 60 ஆண்டுகளுக்கும் மேலாகவே, டாக்டர்களும் 'ஹார்லிக்ஸை'யே சிபாரிசு செய்கின்றனர்.

நீங்களும், உங்கள் குடும்பத்தினரும் உடல்நலம் பேணி, உற்சாகமாய்த் திகழ, உன்னதமான ஊட்டமும் உபரியான சக்தியும் பெற தினமும் அருந்துங்கள் 'ஹார்லிக்ஸ்'




## 'ஹார்லிக்ஸ்'—தரமானது அதுவே

HL.1846 2nd R.

இன்ஸ்பெக்டர் ஏகாம்பரம் முல்லை வாசல் பண்ணை பங்களாவின் ஹாலில் உட்கார்ந்திருந்தார். அங்கே கோகிலா வும் இருந்தாள். சேகரை எதிர்பார்த் துக்கொண்டிருந்தார் போலீஸ் அதிகாரி. செய்தி அறிந்ததும் சேகரும் மஞ்சுளா வும் வரவேற்பறையை நோக்கி வேக மாக வந்தார்கள். சேகரைக் கண்ட தும், இன்ஸ்பெக்டர் புன்சிரிப்புடன் வரவேற்றார். ''என்னுடன் சி. ஐ. டி.

# சுழிக்காற்று

## அத்தியாயம் பதினொன்று

துரைசாமியையும் இரண்டு ஜவான்களையும் அழைத்து வந்திருக்கிறேன்'' என்று தாம் செய்துள்ள ஏற்பாடுகளைப் பற்றி விளக்கலா னார். ''அவர்களை வழியிலேயே இறக்கிவிட்டு வந்தேன். பண்ணையாள் வேலப்பனும் உங்கள் நண்பர் கோபாலும் டார்ச் விளக்குடன் மதில் சுவர் ஓரமாகச் சோதனையிட்டுக் கொண்டிருப் பதைப் பார்த்தோம். துரைசாமி தாம் அங்கே இறங்கிக் கொள்வதாகக் கூறினார். அவர்கள் அந்தப் பிராந்தியம் முழுதும் சோதனையிட்டு விடுவார்கள். நடந்ததை நீங்கள் விளக்கமாகக் கூறுங்கள், மிஸ்டர் சேகர்'' என்ற இன்ஸ்பெக்டர் அமைதியாக அதைக் கேட்பதற்குத் தயாரானார்.

சேகர் பேச ஆரம்பிக்குமுன், மாடிப்படியின் உச்சியில் மோகனா தோன்றி, ''அம்மா, உங்கள் கணவர் உங்களைக் காண வேண்டு மென்கிறார். உங்களை அழைத்து வரும்படி கூறினார்'' என்றாள்.

கோகிலா உடனே பரபரப்புடன் எழுந்தாள். ''இன்ஸ்பெக்டர் சார், போய்ப் பார்த்து விட்டு உடனே வந்துவிடுகிறேன்'' என்று கூறி விட்டுக் கிளம்பினாள். அப்போது மஞ்சுளா தன் சித்தியின் கையைத் தொட்டாள். கோகி லாவின் பார்வை மஞ்சுளாவிடம் திரும்பியது.

''சித்தி, அப்பாவை நான் பார்க்க வேண்டுமே!''

''உன் அப்பாவை நீ பார்ப் பதற்கு நான் கட்டுப்பாடு பண்ணு வதாக நீ நினைக்கக் கூடாது மஞ் சுளா. அவர் உடல் கோளாறு அப் படி. டாக்டரின் உத்தரவும் அப்படி

**கௌசிகன்**



இருப்பதனுல்தான் இந்தக் கட்டுக் காவல்களெல்லாம். அவர் நிலையில் கொஞ்சம் அபிவிருத்தி இருக்குமானுல் நான் உடனே உன்னை அவரிடம் அழைத்துப் போகிறேன்'' என்று கூறிவிட்டு மாடிப் படிகளில் ஏறினுள் கோகிலா.

இன்ஸ்பெக்டர் ஏகாம்பரம் கேட்டார். ''நர்ஸ் நிர்மலா தன்னிடம் தேவைக்கதிகமான பணத்தை வைத்திருந்தாளா? உங்களுக்குத் தெரியுமா?''

''ஆமாம். பல நூறு ரூபாய்களுக்குக் கத்தையாக நோட்டுக்கள் நிர்மலாவிடம் இருந்தன'' என்ருன் சேகர். வேப்பமரத்துப் பங்களாவுக்கு நிர்மலா வந்தபோது தன் கைப் பையைத் திறந்து நோட்டுக் கத்தைகளை எடுத்துக் காட்டியது அவன் நினைவிலே காட்சியாக வந்து நின்றது.

அன்று மாலையிலிருந்து அதுவரை நிர்மலா சம்பந்தப்பட்ட விஷயங்களைச் சேகரும் மஞ்களாவும் இன்ஸ்பெக்டரிடம் கோவையாகக் கூறி



ஞர்கள். ''நிர்மலாவைக் கொல்லுவதற்காகவே அவளை இப்படித் தாக்கி யிருக்கிறார்கள் இன்ஸ்பெக்டர். ஏனென்றால் யாரோ ஒரு மனிதன்—அவன் யாரென்று தெரியவில்லை — யாரோ ஒரு பெண்ணை — அவளும் யாரென்று தெரியவில்லை — மானபங்கப்படுத்திக் கொண்டிருப்பதை இவள் பார்த்துவிட்டாள்'' என்று விவரித்து வந்த சேகர் தன் காதலியின் பக்கம் திரும்பி, ''மஞ்சுளா இந்த வேளையில்—இன்றிரவு — இந்தப் பங்களாவில்...?'' என்று வினவை முடிக்காமல் பொருள் பொதியப் பார்த்தான் சேகர்.

''இந்தப் பங்களாவில் ஐந்து பெண்கள் இருக்கிறார்கள் சேகர். சித்தி கோகிலா, நம்முடன் உணவருந்திக் கொண்டிருந்தாள். நான் இரண்டு, மூன்றாவது காவேரி, நமக்குப் பரிமாறிக் கொண்டிருந்தாள். சித்தியின் தங்கை லலிதாவும், நர்ஸ் மோகனாவும் மாடியில் அவர்கள் அறையில் இருக்கிறார்கள். இவர்களைத் தவிர ஆறாவதாக ஒரு பெண் இந்தப் பங்களாவில் இருப்பதானால் இதுவரை நம் கண்ணில் அவள் படவில்லை'' என்றாள் மஞ்சுளா. இவர்கள் இப்படிப் பேசிக்கொண்டிருந்தபோதே கோகிலா மாடியிலிருந்து இறங்கி வந்தாள். வந்தவள் மஞ்சுளாவின் அருகில் சென்று ''மஞ்சுளா, நீ உன் அப்பாவைப் போய்ப் பார்க்கலாம். உன்னைப் பார்க்க அவரும் ஆவலுடன் இருக்கிறார். இரண்டு மூன்று நிமிடங்களுக்கு மேல் நீ அவருடன் தங்க வேண்டாம். அதிகம் பேசினாலோ, உணர்ச்சி வசப்பட்டாலோ அது அவர் உடல் நலத்தைப் பாதிக்கும் என்று அண்ணா சொல்லியிருக்கிறார்'' என்றாள்.

இரவு நேரத்தில் அதற்கு மேலும் அங்கு இருப்பது நாகரிகமில்லை என்று கருதிய இன்ஸ்பெக்டர் ஏகாம்பரம் தாம் விடைபெற்றுக் கொள்வதற்காக எழுந்திருந்தார். அவர் வந்த வேலையும் ஒரு மாதிரி முடிந்து விட்டதே. ''நான் வரட்டுமா?'' என்று சேகரிடம் கையை நீட்டினார் இன்ஸ்பெக்டர். சேகரும் ஏகாம்பரத்தின் கரத்தைப் பற்றிக் குலுக்கி விடை கொடுத்தான். அந்த நிசப்தமான சூழலில் அவருடைய கனமான பூட்ஸ்கள் தாள கதியோடு ஒலித்தன; ஒலி குறைந்து தேய்ந்தது. மஞ்சுளா சித்தியைத் தொடர்ந்து மாடிப் படிகளில் ஏறிக் கொண்டிருக்கும்போது ஜீப்பின் உறுமலையும் கேட்டாள். ஏகாம்பரம் கிளம்பி விட்டார். சேகரின் கைத்தடி மாடிப் படியின் ஒவ்வொரு படியிலும் பதியும் மெல்லிய ஓசையைத் தவிர அந்தப் பங்களாவில் அப்போது வேறு அரவமே இல்லை. மஞ்சுளாவைத் தொடர்ந்து சேகரும் மாடி ஏறிக் கொண்டிருந்தான்.

**மா**டியில் தருமலிங்கத்தின் அறையைக் கடந்து அவர்கள் போய்க்கொண்டிருந்தார்கள். மாடியின் நீண்ட வராந்தா ஓர் இடத்தில் திரும்பி மறுபடியும் தொடர்ந்தது. மறு கோடியிலுள்ள ஓர் அறையை நோக்கி மூவரும் மௌனமாக நடந்து கொண்டிருந்தார்கள். வராந்தாவின் கோடிக்குச் சென்றதும் ஓர் அறையின் முன் நின்றாள் கோகிலா. மிகுந்த எச்சரிக்கையுடன், மூடியிருந்த அதன் கதவைத் திறந்தாள். சத்தமோ பதற்றமோ கூடாது என்பதை அவளது செயல் கூட வந்தவர்களுக்குச் சுட்டிக் காட்டுவதாக இருந்தது. அறையினுள் மஞ்சுளா மெதுவாக நுழைந்தாள். சேகர் தயங்கியபடியே அருகிலேயே நின்றான். அந்த நிசப்தமும் குறைந்த வெளிச்சமுள்ள அந்த அறையின் சூழலும் அவனுக்கு வெறுப்பை அளித்தன. உள்ளே சென்ற கோகிலா எங்கோ திரைச் சீலையை ஒதுக்கி விலக்கும் ஓசை கேட்டது. அதன் பிறகு அந்த அறையில் கண்ணுக்குப் புலனாகும் வகையில் புகை போன்றதோர் ஒளி பரவியது. தூரத்தில் கட்டில் தெரிந்தது. அதன் கால்மாட்டின் அருகே கரும் பச்சை வர்ணத்தை உடைய 'ஷேடோடு' கூடிய மேஜை விளக்கொன்று. அந்த அறையில் அதன் வெளிச்சம்தான் புகையாகக் குமைந்து கொண்டிருந்தது. படுக்கையில் மல்லாந்து படுத்திருந்த மனிதனின் மெலிந்த முகத்தை அந்த வெளிச்சத்தில் பூரணமாகப் பார்க்க இயலவில்லை. ஆனாலும் அந்த வெளிச்சம் அந்த மனிதனின் தீர்க்கமான சாயல்களில் பட்டுப் பளபளக்க வைத்துக் கொண்டிருந்தது. கிழவர் தருமலிங்கத்தின் சாயல் கொஞ்சம்தான் அந்த முகத்தில் இருந்தது. ஆனால் அதைப் போன்றதொரு முகத்தையும் அவன் சற்று முன் பார்த்தது நினைவில் நிழலாடியது. புருவங்களை நெருக்கியபோது பளிச்சென்று அந்தக் காட்சி நினைவில் வந்து நின்றது. அன்று மாலை சாமுண்டிக் கோட்டை ரயில்வே ஸ்டேஷனில் வண்டி கிளம்பும்போது ஓடிவந்த ஒரு மனிதரை மஞ்சுளா தன் சித்தப்பா என்று அறிமுகப்படுத்தினாளே அந்த முகம்-அதன் சாயலைத்தான் அநேகமாக ஏன், அதிகமாகவே படுத்திருக்கும் இந்த மனிதரிடமும் சேகர் கண்டான். என்ன இருந்தாலும் சகோதரர்கள் இல்லையா என்று எண்ணமிட்டது மனம். அவள் சித்தப்பாவின் கெட்டியான அலை போன்ற நெளிந்த தலைமுடி இவருக்கு இல்லை. மெல்லிய கேசம் நரையின் மிகு

# வயிற்றுக் கோளாறு?

## வாயுவா? அமில உபாதையா? நெஞ்செரிச்சலா? அஜீரணமா?





# 2 ரென்னி

## மாத்திரைகளை மெல்லுங்கள்... விரைவிலேயே நிவாரணம் பெற.

**ரென்னி துரிதமாக செயல் புரிகிறது என்று ஆராய்ச்சியின் மூலம் நிரூபிக்கப்பட்டுள்ளது.**

விரைவில் செயல் புரிந்து நிச்சயமான நிவாரணமளிப்பதில் இதர ஜீரண மாத்திரைகளுக்கும், ரென்னிக்கும் உள்ள வேறுபாட்டை நிலை நாட்ட ஒரு புதிய மின் இயல் ஆராய்ச்சி செய்யப்பட்டது.

காப்ஸூல் வடிவில் உள்ள டிரான்ஸ்மிட்டர்களை குறிப்பிட்ட சிலர் விழுங்கச் செய்யப்பட்டனர். வயிற்றில் உண்டாகும் அமிலத்தின் அளவை பதிவு செய்து வெளியிட இந்த டிரான்ஸ்மிட்டர்கள் உதவின. மேலே குறிப்பிட்டவர்கள் ரென்னி உட்பட 4 வெவ்வேறு ஜீரண மாத்திரைகளை விழுங்கினார்கள்.

உபரி அமிலத்தைச் சரிசெய்ய, ஒவ்வொன்றுக்கும் ஆகும் நேரம் கணக்கிடப்பட்டது. ரென்னி மிக விரைவாக செயல் புரிவது காணப்பட்டது. இதர-ஜீரண மாத்திரைகள் செயல் புரிய 4½ நிமிடங்கள் தேவைப் பட்ட போது ரென்னி செயல் புரிய 2½ நிமிடங்களே ஆயிற்று. அதாவது ரென்னி இரட்டிப்பு விரைவில் செயல் புரிந்தது.

**வயிற்றுக் கோளாறுக்கு ரென்னி ஏன் சிபாரிசு செய்யப்படுகிறது என்றால் ஒரு நல்ல ஜீரண மாத்திரை செய்ய வேண்டிய ஆறுவிதமான செயல்களையும் ரென்னி செய்கிறது.**

1. ரென்னி நிச்சயமான நிவாரணத்தை நிமிடங்களில் அளிக்கிறது.
2. ரென்னி வாயு உருவாதலை கவனிக்கிறது.
3. ரென்னி வயிற்றில் சமமான அமில நிலையை நிர்வகிக்கிறது.
4. ரென்னி சரியாக உள்ள ஜீரணப் பாதையில் குறுக்கிடுவதில்லை.
5. ரென்னி வயிற்று ஜவ்வுகளுக்கு பாதுகாப்பான பூச்சு அளிக்கிறது.
6. ரென்னி அடிக்கடி உட்கொண்டபோதும் வயிற்றுப் போக்கோ அல்லது மலச்சிக்கலோ உண்டாக்குவதில்லை.

## 2 ரென்னி மாத்திரைகள் உங்கள் வயிற்றை சரி செய்கின்றன.

mcm/nl/2 tm



பங்களா தேஷ் போரில் மேற்குப் பாகிஸ்தானுக்கு ஆகும் செலவு--நாள் ஒன்றுக்கு ஒரு கோடி ரூபாய்.

''கரண்ட்'' -- பாலி

தியால் கருமை மங்கிக் கிடந்தது. திராணியற்ற உடல் மெலிந்து இருக்க வேண்டும். ஆனால் அந்த உடல் கனத்த போர்வைக்குள் இருந்தது. கழுத்தின் பின்னால் மருந்து நனைந்த பெரிய 'காஸ்' துணியை வைத்து 'அட்ஹஸிவ்' நாடாவினால் சிலுவைக் குறியிட்டிருந்தார்கள். கறுப்பு ஃபிரேமிட்ட கண்ணாடி அணிந்திருந்தார். அதன் மூலம் பாசமோ பரபரப்போ இல்லாமல் மஞ்சுளாவைப் பார்த்தார் அவர்.

''அப்பா...!'' என்றபோது மஞ்சுளாவின் தொண்டை அடைத்துக் கொண்டது.

''வாம்மா, கண்ணே மஞ்சுளா!..... எப்போ வந்தாய்?'' என்று கேட்ட அவருடைய குரல் கிணற்றினுள்ளிருந்து ஒலிப்பது போல அத்தனை பலவீனமாக இருந்தது. மஞ்சுளா கட்டிலின் அருகே சென்று படுத்திருக்கும் அந்த உருவத்தின்மீது குனிந்து நெற்றியை வருடினள். பிறகு சற்றுத் தள்ளித் தயக்கத்துடன் நின்றிருந்த சேகரின் கையைப் பற்றி அருகே இழுத்து. ''அப்பா, இவர் ...இவர்தான் நான் எழுதியிருந்தேனே சேகர் என்று, அவர்'' என்று முகம் சிவக்க அறிமுகப்படுத்தினள்.

அவர் மெல்லத் தம் தலையைச் சேகர் பக்கம் திருப்பினர். அவரது காய்ந்த இதழ்களில் உலர்ந்த சிரிப்பொன்று பரவியது. ''உன்னை மணம் செய்துகொள்ளப்போகும் அதிர்ஷ்டக்கார வாலிபன் தானே!'' என்றவர் ஒரு விநாடி தம் பார்வையைச் சேகர் மீது பதித்துவிட்டு ''உன் வருங்காலக் கணவர் நன்றாகத்தான் இருக்கிறர். உனக்கு ஏற்றவர் தான் குழந்தே!'' என்று கூறிவிட்டுச் சேகருக்குக் கண்களிலேயே வணக்கம் தெரிவித்தார். ''என் மகள் கல்யாணத்தை எப்படி யெல்லாமோ நடத்த வேண்டுமென்று மனக் கோட்டை கட்டி இருந்தேன்.... ம்... மாப்பிள்ளையை எழுந்து வரவேற்கக் கூட முடியாதபடி இப்படி முடக்கி விட்டது விதி. உன்னை எனக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது. நீங்கள் இருவரும் சந்தோஷமாக நெடுங்காலம் வாழ வேண்டும்'' என்று வாழ்த்தினர்.

''உங்கள் ஆசி பெறவே வந்தேன். மிக்க வந்தனம்'' என்று கரம் குவித்து வணக்கம் தெரிவித்தான் சேகர்.

இதற்குள் இவ்வளவு பேசியதனால் அவருக்கு மூச்சு இரைக்கவாரம்பித்து விட்டது. ஆனால் அவர் பேச்சை நிறுத்தவில்லை. தம் ஒரே மகளோடு பேசுவதில் அவர் தம் உடல் உபாதையையும் மறந்து விட்டார்.

''அம்மா, மஞ்சுளா! நீ இப்ப ரொம்ப அழகா இருக்கே. என் கண்ணே பட்டுவிடப் போகிறது. இப்படி படுத்த படுக்கையாக நான் ஆயிட்டேனம்மா'' என்றதும் அவர் குரல் கம்மிக் கண்களில் நீர் வழிந்தது. சில விநாடிகள் அவரால் பேச முடியவில்லை. மஞ்சுளாவினலும் பேச முடியவில்லை. கைக்குட்டையால் வாயைப் பொத்திக் கொண்டு விம்மினள் அவள். தகப்பனரின் கண்ணீரையும் துடைத்தாள். பிறகு அவரே தம்மைச் சமாளித்துக் கொண்டு பேசினர். ''உன் அப்பாவும் தாத்தாவும் இப்படிப் படுக்கைப் பிறவிகளாக இருக்கும் இந்த வீட்டுக்கு வர உனக்கு வேதனையாகத்தானம்மா இருக்கும். அதனல்தான் நான் உன்னை இங்கு வரும்படி வற்புறுத்தவில்லை. வர வர என் நிலை ரொம்ப மோசமாகிக் கொண்டு வருகிறது'' என்றார். விரக்தி வழிந்தது அந்தக் குரலில்.

''அப்பா, உங்களைப் பார்க்க நான் இன்னும் முன்னலேயே வந்திருக்க வேண்டும். உங்கள் உடல்நிலை இத்தனை தூரத்துக்குக் கேவலமாகி இருக்கும் என்று நான் நினைக்கவில்லை. உங்களிடமிருந்து கடிதம் வருவது நின்றுவிட்டது. சித்திதான் சமீப காலம் வரை எழுதிக் கொண்டிருந்தாள். ஆனால் அதில்கூட உங்கள் நிலை இத்தனை மோசம் என்பதைத் தெரிவிக்கவில்லை.'' மஞ்சுளா தன் பேச்சை ஒரு நிமிஷம் நிறுத்தித் தன் மூக்கடைப்பைப் போக்கிக் கொண்டாள். பிறகு தொடர்ந்து, ''நீங்கள் விரைவிலேயே குணமடைந்து விடுவீர்களப்பா. டாக்டர் ரகுநாத்தையும் புது நர்ஸ் மோகனவையும் உங்களுக்குப் பிடித்திருக்கிறதாப்பா?'' என்று கேட்டாள்.

''ரொம்பப் பிடித்திருக்கிறதம்மா'' என்றவர் பெருமூச்சுடன் ''ம்...எனக்கு இத்தனை பெரிய வியாதி வந்தால் யாரால் தான் என்ன செய்ய முடியும்?'' என்று கேட்டார்.

''நம்ம பழைய நர்ஸ் நிர்மலாவை அவள் இங்கிருந்து போனபிறகு நீங்கள் சந்தித்தீர்களா அப்பா?''

''அவள் என்னைப் பார்க்க மறுபடியும் இங்கே வரவே யில்லையேம்மா. நான்

கூட அவளைப் பார்க்கணும். அவள் கலியாணம் செய்து கொள்ளப் போவதாகக் கூடக் கேள்விப்பட்டேன். நம்ம கிட்டக் காரியதரிசியா இருந்தானே ராமு, அவன்தான் அவளை மணந்து கொள்ளப்போறதாகச் சொன்னார்கள்.''

''ஆமாப்பா... அவர்கள் திருமணம் விரைவிலேயே நடக்கும்'' என்றாள் மஞ்சுளா நிதானமாக.

''ராமு போனது எனக்கு ஒரு கை ஒடிஞ்ச மாதிரி. அதுவும் இந்த வேளையிலே அவனுடைய உதவி ரொம்பத் தேவை. ஆனால் வாலிப வயசு அவனுக்கு. ராணுவத்திலே போய்ச் சேர்ந்து நாலு இடத்தைப் பார்க்கணும்னு ஆசைப்படறது நியாயம்தான். ஆனால் ராமு ராணுவத்திலே போய்ச் சேருவதற்கு முன்னாலே என்கிட்ட ஒரு வார்த்தை வந்து சொல்லிட்டு விடை பெற்றுக் கொண்டு போயிருக்கலாம்.''

அப்பாவின் பேச்சிலிருந்து ராமுவின் மறைவுக்குச் சித்தி தன் அப்பாவிடம் எத்தகைய காரணத்தைச் சொல்லியிருக்கிறாள் என்பதைப் புரிந்து கொண்டாள் மஞ்சுளா. ''அப்பா, நீங்கள் ராமுவைக் கடைசியாக எப்போது பார்த்தீர்கள்?'' என்று கேட்டாள்.

''ம்..... எனக்கு அதையெல்லாம் நினைவு வைத்துக்கொள்ள முடிகிறதில்லையம்மா. ஒவ்வொரு நாளுமே இந்தப் படுக்கையிலே எனக்கு ஒரு யுகமாகத்தான் இருக்கு. ஆமா...அந்தப் புயல் அடிச்சதே... அதுக்கு முன்னாலேதான் நான் அவனைப் பார்த்தேன்.''

இத்தனை நேரமும் தந்தையையும் மகளையும் பேசிக் கொள்ள விட்டு ஒதுங்கி நின்று கொண்டிருந்த கோகிலா, ''ரொம்ப நேரமாகி விட்டது. நீங்கள் ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள். ரொம்பவும் பேசிவிட்டீர்கள். இது உடம்புக்கு ஆகாது'' என்று தன் கணவனைப் பார்த்துக் கூறி விட்டுச் சற்றே கலைந்திருந்த அவரது போர்வையை நேர் செய்தாள். சித்தியின் குறிப்பறிந்து கொண்ட மஞ்சுளா எழுந்திருந்து விட்டாள்.

''நான் போய் வரேன் அப்பா!'' என்று கூறிப் போர்வைக்குள்ளிருந்த அவரது கையை மெதுவாக அழுத்தினாள். அவர் பேசவில்லை. பேசும் நிலையில் இல்லை அவர். பெருமூச்சுக்களும் இளைப்புமாகத் திணறியது அவரது இதயம். மஞ்சுளாவின் தோளைப் பற்றி அவளை அங்கிருந்து அழைத்துக் கொண்டே. ''பார்த்தாயா மஞ்சுளா? இந்த உடம்பை எப்படிக் காக்க வேண்டியிருக்கிறது பார். தாத்தாவை விட மோசமான நிலையில் இருக்கிறார் உன் அப்பா. அதனால்தான் அன்றைக்கு கண்




ஐந்து அல்லது ஆறு வயதான ஐம்பது சிறுவர்கள் ஷிமோகா (மைசூர்) நகர முனிசிபல் சேர்மனிடம் ஒரு மனு கொடுத்தார்கள். ஊருக்குப் போதிய தண்ணீர் விநியோகத்துக்கு அந்த மனு. இதைக் கவனிக்காவிட்டால் உண்ணாவிரதம் மேற்கொள்ளப் போவதாக அந்தச் சிறுவர்கள் சொன்னார்கள்.

—பாபு

-- டெக்கான் ஹெரால்ட்

---

டிப்பாக உத்தரவிட்டிருக்கிறார், என்னையும் நர்ஸ் மோகனாவையும் தவிர வேறு யாரும் அவரைப் பார்க்கக் கூடாது என்று. ஆனால் உன் விஷயத்தில் விதிவிலக்கு உண்டு. இருந்தாலும் இன்று போல அதிகம் பேசாதே. அடிக்கடியும் அவரைப் போய்ச் சந்தித்துப் பேச வைக்காதே'' என்றாள்.

மஞ்சுளா பதிலேதும் சொல்லவில்லை. அந்த அறையை விட்டு வெளியே வந்ததும் சித்தியிடமிருந்து பிரிந்து சேகரின் அருகே ஓட்டினாற்போல் நடக்கலானாள்.

''சேகர், என் அப்பாவையும் தாத்தாவையும் நீங்கள் ஐந்து வருஷங்களுக்கு முன்னால் பார்த்திருக்க வேண்டும். இருவரும் எப்படிப்பட்ட உழைப்பாளிகள் தெரியுமா? என் தாத்தா ஏர் பிடித்துத் தாமே உழுவார். சால் பிடித்து ஏற்றம் இறைப்பார். தென்னை மரத்திலேறிப் பாளை சீவுவார். பண்ணையார் என்று உட்கார்ந்து அதிகாரம் செய்து கொண்டிருக்கமாட்டார். வேலைக்காரர்களோடு சேர்ந்து தாங்களும் உழைப்பதை என் தாத்தாவும் அப்பாவும் மிக மிக விரும்பினார்கள். டிராக்டர் வந்த புதிது. தாத்தா தம் வயதை மீறிய காரியங்களில் ஈடுபட்டார். டிராக்டர் ஓட்டும்போது ஒரு விபத்து. அதுவே சாக்காகப் படுத்த படுக்கையானார். தாத்தாவுக்குப் பிறகு அப்பாதான் எல்லாப் பொறுப்பையும் கவனித்து வந்தார். பழைய அப்பாவை—ஓடியாடி உழைத்த அந்த உருவத்தை—மறுபடியும் பார்க்கப் போகிறோமா என்றிருக்கிறது.'' மஞ்சுளாவின் குரல் கரகரத்தது.

மாடி ஹாலைக் கடந்து படிகளில் இறங்கிக் கொண்டிருந்தார்கள்.

''உடல் நிலை இத்தனை மோசமாகியுள்ள இந்த நிலையிலும் உன் திருமண விஷயத்தை உன் அப்பாவும் தாத்தாவும் மறந்துவிடவில்லை மஞ்சுளா. நீயும் மாப்பிள்ளையும் உங்களுக்கு இஷ்டமான துணிமணி நகை நட்டுக்களை நீங்களே வாங்கிக் கொள்ள வேண்டும் என்பது

அவர்கள் ஏற்பாடு. அதற்காக ஒரு செக்கை உன்னிடம் கொடுக்கும்படி சொல்லியிருக்கிறார் உன் அப்பா. இரு, வருகிறேன்'' என்று மாடிப்படியை அடுத்த ஓர் அறைக்குள் நுழைந்தாள் கோகிலா. உள்ளே பழங்காலத்து இரும்புப் பெட்டியைத் திறக்கும் கரகரப்பான ஒலி கேட்டது. பின் கோகிலா வெளி வந்தாள். அவள் கையில் மடிக்கப்படாத ஒரு வர்ணக் காகிதம் இருந்தது. ''கலியாணத்தை விமரிசையாக நடத்தும்படி சொல்லியிருக்கிறார். அதற்கு முன்பாக இது எங்கள் எல்லோருடைய பரிசு மஞ்சுளா!'' கோகிலாவின் முகத்தில் மகிழ்ச்சி அப்பிக் கிடந்தது.

மஞ்சுளா அந்தச் செக்கை வாங்கிப் பார்த்தாள். அவள் விழிகள் விசாலமாயின. ''ரொம்ப நன்றி சித்தி...'' என்று சொல்லிக் கொண்டே அதைச் சேகரிடம் நீட்டினாள் மஞ்சுளா.

''பத்தாயிரம் ரூபாய்...! அடேயப்பா, புடவைக் கடையையே வாங்கி விடுவாய் மஞ்சு நீ'' என்றான் சேகர்.

''அவளுக்குப் பிடித்தமான நகைகளையும் வாங்கிக்கொள்ளட்டும். பணம் போதாவிட்டால் இன்னமும் அவள் தாத்தா கொடுப்பார்'' என்றாள் கோகிலா.

அப்போது வாசல் கதவு படீரென்று திறந்தது. கோபால் நின்று கொண்டிருந்தான். அவனது சலவை உடுப்புக்கள் அழுக்காகியிருந்தன. முகத்தில் வியர்வை. செடிகளின் மீது படிந்திருந்த பனித் துளிகள் இஸ்திரி போடப்பட்ட அவனது மடிப்புக் கலையாத புஷ் ஷர்ட்டிலும் பாண்டிலும் படிந்து பரவி இருந்தன. அவனது தாழ்ந்த தோள்களும் தொங்கிய தலையுமே தோல்வியைச் சொல்லிக் கொண்டிருந்தன. அவனுக்குப் பின்னால் வேலப்பனும் இதே நிலையில்தான் நின்று கொண்டிருந்தான்.

''நிர்மலா எங்கும் கிடைக்கவில்லை சேகர்'' என்றான் கோபால் தொய்ந்த குரலில்.

கோகிலா மௌனமாகப் படியேறிப் போனாள். வேலப்பன் இருமிக் கொண்டே தள்ளாடியபடி தன் இருப்பிடத்துக்குப் போகத் திரும்பினான். உடை மாற்றிக் கொண்டு ஓய்வெடுத்துக்கொள்ள வேண்டிய நிலையில் கோபால் இருந்தான். அந்த நிலையில் வேப்ப மரத்துப் பங்களாவுக்குப் போக விரும்பாத கோபால் அங்கேயே குளியலை முடித்துக்கொண்டு வருவதாகச் சேகரிடம் கூறவே சேகரும் மஞ்சுளாவும் அந்த அரண்மனை வீட்டின் கோட்டைக் கதவு போன்ற பெரிய மரக் கதவைச் சாத்திவிட்டுத் தாங்கள் தங்கியிருந்த வேப்ப மரத்துப் பங்களாவை நோக்கிப் போனார்கள். இருவரும் அந்தப் பங்களாவின் ஹாலில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கும்போது ஒரு விநோதமான ஒலியைக் கேட்டுச் சேகர் தன் காதைத் தீட்டிக் கொண்டான். கிரீச் ஒலி... எங்கோ, ஆனால் வெகு தொலைவில் இல்லை.

அது ஒரு சன்னமான ஆனால் தொடர்ந்து கேட்கும் ஒலி. உயிர்ப் பிராணியால் எழுப்பப்பட்ட சத்தமல்ல அது. ஏதோ ஒரு யந்திரத்தின் ஒலி. அதற்கு எண்ணெய் போடாததினால் உண்டாகும் கிரீச்சொலி அது என்று சேகர் முடிவு கட்டினான். சட்டென்று அது நின்றது. மறுபடியும் தொடர்ந்தது. மெள்ள மெள்ள அதன் ஒலி குறைந்து கொண்டு வந்தது. இருளில் எங்கோ அது நகர்ந்து செல்கிறது போலும்.

இத்தனை நேரமும் அந்த ஒலியின் தேய்வைக் கேட்பதில் சிலையாகியிருந்த சேகரும் மஞ்சுளாவும்; அந்த நிசப்தத்தையும் அமைதியையும் கிழித்துக் கொண்டு காலடி ஓசையும், தொடர்ந்து கதவு தட்டப்படும் ஒலியும் கேட்டதும் திடுக்கிட்டுப்போனார்கள். சேகர் எழுந்து சென்று கதவைத் திறந்தபோது மஞ்சுளாவின் உடல் நடுங்கியபடி அவனோடு ஒட்டிக் கொண்டிருந்தது.

திறந்த கதவின் வாசலில் கோபால் நின்று கொண்டிருந்தான். குளித்துத் துவட்டப்பட்ட தலையுடன் உடலில் ஒரு பெரிய தேங்காய்ப்பூத் துவாலையைச் சுற்றிக் கொண்டபடி விநோதமாக நின்று கொண்டிருந்தான்.

''நிர்மலாவைப் பற்றி ஏதாவது..?'' மஞ்சுளா படபடத்தாள்.

கோபால் மெள்ளத் தலையை அசைத்தான். ''அவளைப் பற்றி எந்தத் தகவலும் கிடைக்கவில்லை மஞ்சுளா. ஆனால் மஞ்சுளா, நான் உனக்கு வேறு ஒரு துயரச் செய்தியைக் கொண்டுவந்திருக்கிறேன். உன் சித்தி கோகிலா, அதை உன்னிடம் சொல்லும்படி என்னை அனுப்பினாள். அதன் அதிர்ச்சியால் உன் சித்தி நிலைகுலைந்து போய் உட்கார்ந்திருக்கிறாள்.''

மஞ்சுளாவுக்கு ஒரு நிமிஷம் மூச்சே விடமுடியவில்லை. ''அப்பா..'' என்று அவள் உதடுகள் துடித்தன.

மறுபடியும் கோபால் தன் தலையை அசைத்தான். துவாலையால் காதுக்குள் குடைந்து கொண்டே, ''இறந்தது உன் அப்பா இல்லை. மஞ்சுளா. உன் தாத்தா தர்மலிங்கம்'' என்றான். மஞ்சுளாவுக்கு அந்த அறையே சுழல்வது போலிருந்தது. (தொடரும்)

நாவல்

# விக்கிரமாதித்தனின் வாள்



**பல** ஆண்டுகள் ஓடிவிட்டன. ஒரு நாள் பெஷாவரைச் சேர்ந்த மாதர் நகர் என்னும் கிராமப் பகுதியில் இயற்கையின் வியப்புமிகு விந்தைச் செயல் ஒன்று நிகழ்ந்தது. இருள் சூழ்ந்த இரவு நேரம். கிராமத்திலிருந்து சிறிது தொலைவில் ஆலமரத்தினடியில் தீச்சுடர் ஒன்று தெரிந்தது. பளிச்சிடும் குத்துவிளக்கு போன்றதொரு காட்சி உருவாகியது. இச் செய்தி கிராமம் முழுவதிலும் வெகு விரைவில் காட்டுத் தீயெனப் பரவியது. கிராமவாசிகள் இந்த விந்தைக் காட்சியைக் காண அங்கங்கே கூடிவிட்டனர். வீடுகளில் சமையல் வேலையில் ஈடுபட்டிருந்த பெண்கள்கூடக் கையில் ரொட்டிக்குப் பிசைந்த மாவோடு வெளியே வந்து விட்டனர். கிழவர்கள் குழந்தைகளைத் தோளில் தூக்கிக் கொண்டு வந்த இருமலை அடக்க முடியாமல் 'லொக் லொக்' என்று இருமியவாறே வந்து நின்றனர். புதுமணப் பெண்கள் மட்டும் வெட்கம் காரணமாக வெளியே வர முடியாமல் தவித்தனர். ஆயினும் கதவுகளின் இடுக்கு வழியாக எட்டி எட்டிப் பார்த்து அலைபாயும் தங்கள் உள்ளங்களுக்கு ஆறுதல் அளிக்க முயன்றனர். கோபுரமாக உயர்ந்து குடையாகப் பரந்து விரிந்து நின்ற மரத்தின் அடியில், ஆழ் கடலாகக் குமுறிக் கொண்டிருந்த இருளில் இலேசான ஒளி சுடர்விட்டுப் பிரகாசித்தது. அது, பாவம் என்னும் மேகங்களால் சூழப் பட்ட ஆன்மாவின் உருவத்தைப் படம்பிடித் துக் காட்டுவது போன்ற உணர்வை உண் டாக்கியது.

டேக்சிங் பெண்களைப் போலத் தலையசைத்துக் கூறினான்: ''அது என்னவென்று எனக்கு விளங்கி விட்டது. அங்கே பேய்களின் கூட்டம் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது!''

பண்டித் சேத்ராம் அறிவு சார்ந்த நம்பிக்கையோடு கூறினார்: ''உனக்கு என்ன தெரியும்? என் ஆழ்ந்த அநுபவத்தில் கூறுகி



றேன். நாகப் பாம்பு தன் நாகரத்தினத்தைக் கீழே விட்டு விட்டு மேயப் போயிருக்கிறது. இதில் யாருக்காவது ஐயம் இருக்குமானால் போய்ப் பார்த்து வாருங்கள்!''

முன்ஷி குலாப் சந்த் ஒரு படி மேலே போனார்: ''இப்பொழுது அங்கே போய் யாராவது அந்த ரத்தினத்தை எடுத்துவந்து விட்டால், அவன் மன்னன் ஆவது சர்வ நிச்சயம். இதில் யாதொரு ஐயப்பாட்டுக்கும் இடம் இல்லை. ஆனால் உயிருக்குத்தான் ஆபத்து!''

பிரேம்சிங், ஜாட் இனத்தைச் சேர்ந்த ஒரு வயோதிகன். அப்பொழுது அவன் இந்தப் பெரியவர்களின் பேச்சை வெகு கவனமாகச் செவிமடுத்துக் கேட்டுக் கொண்டிருந்தான்.

**2**

**பி**ரேம் சிங் உலகத்தில் ஒன்றிக் கட்டை. அவன் வாழ் நாள் முழுவதும் போரிலும், போர்க்களத்திலுமே தீர்ந்திருந்தது. ஆனால் வாழ்வின் அஸ்தமன



## சரியான பதில்!




ஒரு முறை நான் ஹைதராபாத்திலிருந்து தில்லிக்குப் பஸ்ஸில் போய்க் கொண்டிருந்தேன். நடுவில் பஸ் ஓர் ஊரில் நின்றபோது பலர் காப்பி சாப்பிடுவதற்காகக் கீழே இறங்கிப் போனார்கள். அந்தச் சமயத்தில் புதியவர் ஒருவர் வந்து இறங்கிப் போயிருந்த ஒருவரின் இடத்தில் உட்கார்ந்துவிட்டார். காப்பி குடித்துவிட்டு வந்தவர் அந்தப் புதியவரிடம் சாந்தமாக, "இது என்னுடைய இடமாயிற்றே" என்று கூறினார். அதற்குப் புதியவர், "நான் எழுந்திருக்க முடியாது. இது உங்கள் இடமானால் நீங்கள் அடையாளத்துக்கு இங்கு ஏதாவது ஒரு சாமானை வைத்துவிட்டுப் போயிருக்க வேண்டும்" என்று திமிராகப் பதில் கூறினார். இதைக் கேட்ட இன்னொரு குறும்புக்காரர், "அவர் வருவதற்குள் இடமே பறி போய்விட்டது; அங்கு ஏதாவது சாமானை வைத்திருந்தால் அதுவுமல்லவா போயிருக்கும்!" என்றார். புதியவர் அதைக் கேட்டதும் பதிலே பேசாமல் அவமானத்தால் தொங்கிய முகத்தோடு வேறோர் இடத்தில் போய் உட்கார்ந்து விட்டார்!

ஆதாரம்: பெமிரு கடிதம்
தகவல்: சரோஜா ராமச்சந்திரன்

---

வேளையிலே, உதய வாழ்வை எதிர்நோக்குபவன் போலத் தனது உளுத்து மடித்துப் போன குடிசைக்கு மீண்டும் வந்து சேர்ந்திருந்தான். அந்த நேரம் பார்த்து அவன் மனத்திலே ஒரு விசித்திர ஆசையும் தோன்றியது. 'அந்தோ! உலகில் எனக்கென்று யாருமே இல்லையே! எனக்கும் ஒரு குழந்தை இருந்திருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்!' இப்படி எண்ணியது அவனது கிழட்டு மனம். எந்த ஆசை மாலை வேளைகளிலே பறவைகளைக் கூடுகளை நாடி வரச் செய்கின்றதோ, எந்த ஆசையின் வசப்பட்டு ஆடு மாடுகள் மாலை நேரங்களில் தாமாகவே தங்கள் தொழுவத்துக்கு வந்து சேர்கின்றனவோ, அந்த ஆசை பிரேம்சிங்கின் மனத்திலும் அலையாய்த் தொடங்கியது. காலை எழுந்ததும், 'தாத்தா' என்று கூறியவாறு அவன் கழுத்தைக் கட்டிக் கொள்ள யாரும் இல்லை. உணவருந்தும்வேளையிலே, ஒவ்வொரு பிடியாக எடுத்துக் கொடுத்து ஊட்டி மகிழ ஒரு குழந்தை இல்லை. இரவு நேரங்களில் தாலாட்டுப் பாடித் தூங்க வைக்கவும் யாரும் இல்லை. இது போன்ற ஆசைகள் பிரேம்சிங்கின் மனத்தில் இதற்கு முன்பெல்லாம் எழுந்ததில்லை. ஆனால் இப்பொழுது...? அந்த ஆசைகள் மலையாக வளர்ந்து அழுத்தலாயின. பகல், பகல் பொழுதின் தனிமைகூட அவனை அவ்வளவாக வருத்தவில்லை; மாலைப் பொழுதுதான் குதறி எடுத்து உள்ளத்தைப் புண்படுத்தி வந்தது.

ஒரு நாள் பிரேம் சிங் கடைத் தெருவுக்குப் போயிருந்தான். வரும் பொழுது வழியில் ஒரு வீட்டில் தீப்பற்றி எரிவதைக் கண்டான். ஓங்கி வளர்ந்த பயங்கர ஜ்வாலை காற்றில் தன் செந்நாக்கை நீட்டி நீட்டிக் கொடிபோலப் பறந்து கொண்டிருந்தது. வாசலில் ஒரு பெண் நின்று தலையில் அடித்துக் கொண்டு அழுது புலம்பிக் கொண்டிருந்தாள். பாவம், அவள் ஓர் எளிய விதவை. அவள் குழந்தை வீட்டுக்குள் தூங்கிக் கொண்டிருந்த நேரம், தீப்பற்றிக் கொண்டு விட்டது. நெருப்பை அணைக்கக் கிராமத்தார்களைக் கூப்பிடுவதற்காக அவள் ஓடினாள். திரும்பி வருவதற்குள் தீ சொக்கப்பனையாக வளர்ந்து விட்டது. ஆறாக ஓடிப் பெருகிய தீக்கங்குகள் அவளையும் அவள் உயிருக்குயிரான குழந்தையையும் தனியாகப் பிரித்துவிட்டன. அப்பெண்ணின் துயரப் பெருமூச்சு பிரேம் சிங்கின் மனத்தில் முள்ளாகத் தைத்தது. அவன் அச்சத்தை உதறி எறிந்துவிட்டுத் தீக்குள் நுழைந்துவிட்டான், அபிமன்யு சக்கர வியூகத்தில் நுழைந்தது போல. அதோடு தூங்கும் குழந்தையைக் கைகளில் ஏந்திக் கனஜாக்கிரதையாக வெளியிலும் வந்து விட்டான். விதவைப் பெண் குழந்தையை வாங்கி மடியில் போட்டுக் கொண்டு, அதன் மென்மையான கன்னங்களில் முத்தங்களைப் பொழிந்தாள். கண்களில் நீர் மல்கப் பிரேம்சிங்கைப் பார்த்து, "பெரியவரே! தாங்கள் யாராக இருந்தாலும் எனது இந்த அன்புக் குழந்தையைத் தங்களுக்கே காணிக்கையாக அர்ப்பணிக்கிறேன். தங்களுக்கு ஆண்டவன் எத்தனையோ குழந்தைகளைக் கொடுத்திருக்கலாம். அவர்களோடு இந்த அநாதைக் குழந்தையையும் கவனித்துக் கொள்ளுங்கள். தங்கள் உள்ளத்தில் தயையும் தாட்சிண்யமும் அன்பும் — இரக்கமும் நிறைந்திருக்கின்றன. என்னுடையது என்றிருந்த கொஞ்ச நஞ்சத்தையும் இன்று அக்கினி தேவன் எடுத்துக் கொண்டு விட்டான். என் உடலை மறைத்திருக்கும் இந்த ஓர் ஆடையைத் தவிர என்னிடம் வேறு எதுவும் இல்லை. நான் எங்கேயாவது கூலி வேலை செய்து என் வயிற்றைக் கழுவிக் கொள்ள முயல்கிறேன். இனி இந்தச் செல்வம் தங்களுடையதுதான்!" என்றாள்.

பிரேம் சிங்கின் விழிகளில் நீர் தேங்கியது. "மகளே! இப்படியெல்லாம் பேசாதே! என் வீட்டுக்கு வா. ஆண்டவன் எனக்குக் கொடுத்திருப்பதைப் பகிர்ந்து சாப்பிடுவோம். இந்த உலகில் நானும் தனிக் கட்டைதான். எனக்குத் தாகத்துக்குத் தண்ணீர் தரக்கூட யாரும் கிடையாது. அதற்காகத்தான் ஆண்டவன் இப்படி ஒரு சாக்கை வைத்துக் கொண்டு நம்மைச் சேர்த்திருக்கிறானோ, என்னவோ?" என்றான்.

மாலை வீடு திரும்பும் போது பிரேம் சிங்கின் தோளில் மலர் போன்றதொரு குழந்தை, முகம் மலரக் காட்சி அளித்தது. அவனுக்குப் பின்னால் துயரமே உருவாக வெளிறிய முகத்துடன் ஒரு பெண்ணும் இருந்தாள். அன்று பிரேம் சிங்கின் வீட்டில் ஒரு குட்டி உலகம் உருவாகியது. அதற்குப்பின் யாருமே ஆற்றங்கரையில் மாலை நேரங்களில் அவன் மௌனமே உருவாக உட்கார்ந்திருப்பதைக் காணவில்லை.

அந்தக் குழந்தைக்காக நாகரத்தினத்தை எப்பாடு பட்டாவது கொண்டு வருவது என்ற முடிவுடன் பிரேம்சிங் அந்த நள்ளிரவு

# வெப்பத்தை வென்றிட பஜாஜ் மின்விசிறிகள்.





நீங்கள் தேர்ந்தெடுக்க அற்புதமான பற்பல
பஜாஜ் வகைகள்

**சூப்பர் டீலக்ஸ் சீலிங் மின்விசிறி:**
ஓசைப்படாத சுகமான இயக்கம்,
ஆண்டாண்டு சேவை.

**ப்ரீஸ்மாஸ்டர் டேபிள் மின்விசிறி;**
ஊருக்கான நல்லின்ப வசதி, தங்குதடையற்ற
இயக்கம். தவிர, விசேஷ நோக்கங்களுக்குரிய
மின்விசிறிகளின் அணி வரிசை:
பெடஸ்ட்டல், ஏர் ஸர்க்குலேட்டர்கள், கேபின்,
இதையும் தவிர

**பஜாஜ் அழகு மின்விசிறிகள்:**
அழகான மூன்று மாடல்கள்: 225 மி.மீ;
400 மி.மீ; 500 மி.மீ. வீச்சு.









**பஜாஜ் எலெக்ட்ரிகல்ஸ் லிமிடெட்**
45-47, வீர் நரிமான் ரோடு, பம்பாய்-1.
இந்தியாவெங்கும் கிளைகள்

heros'BE-78TAM

நேரத்தில் இடுப்பில் வாள் தொங்கப் புறப்பட்டான். ஊனி ஊனிக் கால் வைத்தவாறு கன ஜாக்கிரதையாக ஆலமரத்தை நோக்கி நடந்தான்.

மரத்தின் அடிக்குப் போன பொழுது ரத்தினத்தின் ஒளி இன்னும் நன்றாகப் பளிச்சென்று தெரிந்தது. ஆனால் பாம்பைத்தான் அக்கம்பக்கத்தில் எங்கும் காணோம். பிரேம் சிங்குக்கு ஒரே மகிழ்ச்சி. பாம்பு எங்கேயோ தொலைவுக்கு மேயப் போயிருக்கிறது என்று எண்ணினான். எனவே தைரியமாக ரத்தினத்தை எடுக்கக் கையை நீட்டினான். ஆனால் துல்லியமான மண் நிலத்தைத் தவிர வேறு எதுவுமே அவன் கைக்குத் தட்டுப்படவில்லை.

ஆனால் அடுத்த கணம் ஜாட் கிழவனின் இதயம் படபடவென்று அடித்துக் கொண்டது; உடல் உரோமம் முழுவதும் குத்திட்டு நின்றது. ஆம், திடுதிப்பென்று அவனுக்குத் தன் எதிரே ஏதோ ஒன்று தொங்குவது போலத் தெரிந்தது. சட்டென்று பிரேம்சிங் தனது வாளை உருவிக் கொண்டு அதை நோக்கிப் பாய்ந்தான். ஆனால் அருகில் சென்றதும், அது பாம்பு அல்ல; ஆலம் விழுது என்பது உறுதியாகியது. பிரேம்சிங்கின் அச்சம் அனைத்தும் இருந்த இடம் தெரியாமல் ஓடி ஒளிந்தது. அப்புறம் அவன் தைரியமாக ஒளி வந்த இடத்து மண்ணைத் தன் வாளின் முனை கொண்டு தோண்டலானான். ஓர் அங்குல ஆழம் அவன் மண்ணைப் பறித்திருப்பான். அவன் வாளோடு ஏதோ ஒரு கடினமான பொருள் மோதுவது போலத் தோன்றியது. அந்த மோதலில் ஓர் ஒளிப் பொறியும் பறந்தது. தைரியமாக மோதிய பொருளைத் தோண்டி எடுத்தான் அவன். அது ஒரு சின்னஞ் சிறு குத்து வாள். ஆனால் பிரேம் சிங்கின் கைக்கு வந்ததும் முத்து விளக்குப் போன்ற அதன் சுடரொளி மறைந்துவிட்டது.



## 3

ஆம், அது சின்னஞ் சிறு குத்துவாள் தான். என்றாலும் என்ன கருக்கு! என்ன மேனி! என்ன ஒளி! அதன் பிடியில் விலை உயர்ந்த மணி — மாணிக்கங்கள் பதிக்கப் பட்டிருந்தன. பிடியின் மேலே விக்கிரமாதித்தன் என்ற பெயரும் பொறிக்கப்பட்டிருந்தது. விக்கிரமாதித்த மன்னர் பாரதத்தின் சூரியனாக ஒளி வீசிப் பிரகாசித்தவர் ஆயிற்றே! இன்றுங்கூட அவரது அருங் குணங்கள் வீடு வீடாகப் பாடப்படுகின்றனவே! இந்தக் குத்துவாள் பாரதத்தின் அமர மகாகவி காளிதாஸனின் கண்ணியம் மிகு தொடர்பையும் கண்டிருக்கிறது. விக்கிரமாதித்த மன்னர் இரவு வேளைகளில் மாறு வேடம் பூண்டு மக்களின் இன்ப துன்பங்களை நேரில் கேட்டுத் தெளியவும், பலாத்கார வன்முறைச் செயல்களைத் தமது ஈரங் கசிந்த கண்களால் கண்டு விளங்கிக் கொள்ளவும் போகும் போதெல்லாம், மெருகு மாறாத இந்தக் குத்துவாள் அவருடைய உடைவாளாகப் பொலிந்து வந்தது. எந்த இரக்க உணர்வும் நியாய உணர்வும் விக்கிரமாதித்த மன்னரின் புகழை இன்றளவும் நிலைநாட்டி வருகின்றனவோ, அந்தப் புகழில் இந்தக் குத்துவாளுக்கும் பெரும் பங்கு உண்டு. இதன் துணை கொண்டேதான் அவர் புகழ் ஓங்கியது. அவர் அரியாசனத்தில் அமரும் போது அவரோடு இணைந்து அமர இதற்கு உரிமை இருந்தது. சொல்லப் போனால் அந்த அரியாசனத்தில் அமர போஜ மன்னனுக்குக் கூட வாய்ப்புக் கிட்டியதில்லை.

இந்தக் குத்துவாளுக்கு விந்தைமிகு அந்த ஒளி எங்கிருந்து வந்தது? நீண்ட நெடுங் காலம் தரையிலேயே புதைந்திருந்தும்கூட இதில் துருப்பிடிக்கவில்லையே! இருள் சூழ்ந்த வீடுகளுக்கு இது ஒளிகூட்டி வந்தது. இரவு முழுவதும் சுடர் விட்டு ஒளிரும் நட்சத்திர மென இது பிரகாசித்தது. சந்திரன் மேகத் திரைக்குள் மறைந்தாலும், அதன் இடையே ஒளி எப்படி வடிகட்டி வருமோ, அதுபோல இந்த உடைவாள் உறைக்குள்ளிருந்தாலும் இதன் கூரிய ஒளி வெளியே விரிந்து பரவவே செய்தது.

ஆனால் யாராவது இதைக் கையில் எடுத்தால் இதன் ஒளி மங்கி மறைந்து வந்தது. இதன் இந்தச் சிறப்பியல்பைக் கண்டு மக்கள் வியந்து நின்றனர்.

இந்தியாவில் அந்த நாட்களில் பாஞ்சாலச் சிங்கத்தின் அறைகூவல்தான் எங்கு நோக்கினும் எதிரொலித்து வந்தது. ரஞ்ஜீத் சிங் கொடை வீரம், போர் வீரம் மட்டுமின்றி, இரக்க உணர்விலும் நியாய நெறியிலும்கூடத் தமது காலத்தில் விக்கிரமாதித்த மன்னராகத் திகழ்ந்து வந்தார். பல நூற்றாண்டுகளாக இந்தியாவைத் தலைதூக்கவொட்டாமல் அடித்து வந்த காபூலின் ஆணவத்தை அடக்கி ஒடுக்கி மண்ணோடு மண்ணாக்கி விட்டு அவர் லாகூர் திரும்பிக்கொண்டிருந்தார். மாலு நகரின் அழகிய மண்வெளியையும் கண்களுக்குக் குளிர்ச்சியான மரத் தோப்புக்களையும் கண்டு அங்கேயே தண்டிறங்கி விட்டார். அடுத்துச் சிறு பொழுதில் அங்கு கடைத் தெருக்கள் உருவாக்கப்பட்டன. கூடாரங்களும் ஷாமியானாக்களும் நிறுவப்பட்டன. இருட்டியதும் இருபதினாயிரம் அடுப்புக்களின் கரும் புகை மைதானத்திலும் தோப்பிலும் சூழ்ந்து விட்டது. அந்தப் புகை வானில் அடுப்புக்களின் நெருப்பொளி, மெழுகுவர்த்திகள், தீவர்த்திகள் ஆகியவை உமிழ்ந்த ஒளி, இருள் சூழ் இரவில் கருநீல வண்ணங்

## இல்லாத உள்ளங்காலில் அரிப்பு !

புற்றுநோயினாலோ அல்லது விபத்து காரணமாகவோ சிலருக்கு ஒரு காலை அறுத்து எடுத்து விடுவார்கள். சஸ்திர சிகிச்சை செய்து.

சஸ்திர சிகிச்சை முடிந்து ரணம் ஆறும்போது அரிக்கும். இதில் ஒரு விநோதம் என்னவென்றால், தொடைக்குக் கீழ் காலே இல்லை என்றாலும் உள்ளங்காலே அரிப்பது போன்ற பிரமையே பதித்திருக்கும் நோயாளிக்கு ஏற்படும் !

("ஃபைனல் டயோக்னோஸிஸ்" என்ற நாவலில் ஆர்தர் ஹெய்லி தரும் ஒரு தகவல்.)

காட்டிய வானத்தில் விண் மீன்களின் தோற்ற மயக்கத்தை உண்டுபண்ணியது.

## 4

அரச அவை அமைக்கப்பட்ட இடத்திலிருந்து பாட்டும் இசையும் உற்சாகம் புரள ஒலித்துக் கொண்டிருந்தன. சீக்கிய சர்தார்கள் எல்லைப்புறப் பகுதிகளிலிருந்து நூற்றுக்கணக்கான ஆப்கானிய மங்கையர்களைச் சிறைப்படுத்தி வந்திருந்தார்கள். இந்த நாட்களில் போர் என்றால் இது போன்ற நிகழ்ச்சிகள் சர்வ சகஜம். அந்த மங்கையர்கள்தான் அந்த நேரத்தில் நிழல் தரும் மரங்களுக்கு அடியில் இயற்கை விரித்த விரிப்பில் அமர்ந்து ஒன்றுக்கொன்று சுருதி சேராமல் தங்கள் போக்கில் பாடல்களை இசைத்துக் கொண்டிருந்தனர். அங்கே கூடியிருந்த ரசிக மக்களுக்கு வம்புப் பேச்சுகளில் கிட்டிய இன்பம் இசையைச் சுவைப்பதில் கிட்டவில்லை. எனவே, சிரித்துப் பேசி மகிழ்வதில் மூழ்ந்தனர். எங்கு பார்த்தாலும் கலகலவென்று சிரிப்பொலிதான். சிற்சில இடங்களில் போர்வீரர்கள் தங்கள் மனம் போன போக்குப்படி வேஷம் புனைந்து கூத்தாடினர். அதோடு சில நிவர்த்திகளையும் நூற்றுக் கணக்கான வேடிக்கை பார்ப்பவர்களையும் கூட்டமாக அழைத்துக் கொண்டு இங்கும் அங்கும் சுற்றி மகிழ்ந்துகொண்டிருந்தனர். போர்வீரர்கள் அனைவரின் மனத்திலும் வெற்றிக் கன்னி புகுந்து தன் எழிலைக் காட்டிக் கொட்டமடித்துக்கொண்டிருந்தாள்.

இரவு ஒன்பது மணி இருக்கும். ஓர் ஆள் கறுப்புக் கம்பளியைப் போர்த்திக்கொண்டு கையில் தடியொன்றைக் கையில் எடுத்துக் கொண்டு மன்னர் கூடாரத்திலிருந்து வெளியே புறப்பட்டான். அருகிலிருந்த கிராமத்தை நோக்கி மெதுவாக நடக்கலானான். அன்று மாலும் நகர்கூட மகிழ்ச்சியில் மூழ்கியிருந்தது. வாசல் திண்ணைகளில் பல முகங்கள் கொண்ட கொத்து விளக்குகள் சுடர் விட்டு ஒளி வீசிக் கொண்டிருந்தன. அன்றாடம் சுழித்துப் பெருக்கும் வாயில்களும் துப்புரவாக்கப்பட்டு நீர் தெளிக்கப்பட்டிருந்தன. இரண்டொரு இடங்களில் மங்கள இசை முழங்கிக் கொண்டிருந்தது. சில இடங்களில் மக்கள் பஜனைப் பாடல்கள் பாடிக் கொண்டிருந்தனர். கறுப்புக் கம்பளியைப் போர்த்தியிருந்த ஆள் இங்கும் அங்கும் பார்த்தவாறே கிராமத்துப் பொது மண்டபத்தை அடைந்தான். மண்டபம் நன்கு அலங்கரிக்கப்பட்டிருந்தது. கிராமத்துப் பிரமுகர்கள் கூடி அமர்ந்து மன்னர் ரன்ஜீத் சிங்கைக் காண என்ன காணிக்கை எடுத்துச் செல்வது என்பது பற்றிப் பேசிக் கொண்டிருந்தனர். இன்று மன்னர் நம் கிராமத்துக்கு விஜயம் செய்து தமது பாத தூளியினால் நமக்குப் பெருமை அளித்திருக்கிறார். கிராமத்தைச் சேர்ந்த நாம் அவரது அடிகளை வணங்கி நம் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொள்ள வேண்டாமா? இதுபோன்ற நல்வாய்ப்புக்கள் அடிக்கடி கிட்டக்கூடியவையா? எல்லோரும் இது பற்றியே தலைகுனிந்து ஒருமுகமாகச் சிந்தித்துக்கொண்டிருந்தனர். ஆனால் யாருக்கும் சரியாக மூளை வேலை செய்யவில்லை. அவர்களிடம் விலை மதிக்கவியலாத ரத்தினக் குவியல்களா இருந்தன, மன்னருக்குக் காணிக்கை கொண்டு செல்ல? ஒரு மணி நேரம் யாருமே தலை தூக்கி ஆலோசனை கூறவில்லை. திடீரென்று பிராயம் முதிர்ந்த பிரேம் சிங் எழுந்து நின்றான். "நீங்கள் விரும்பிச் சம்மதம் தெரிவித்தால் நான் மன்னருக்கு விக்கிரமாதித்தரின் வாளைக் காணிக்கையாகத் தரச் சித்தமாயிருக்கிறேன்!" என்றான்.

இதைக் கேட்டதும் எல்லோரும் மகிழ்ச்சியின் எக்களிப்பில் மிதந்தனர். அங்கு ஓர் ஆரவாரம் உருவாகியது. அந்த நேரத்தில் தான் கறுப்புக் கம்பளி அணிந்த பயணி மண்டபத்துக்குள் நுழைந்தான். எல்லாரையும் கண்டு கைதூக்கி வணங்கி, "சகோதரர்களே! வாஹே குருவுக்கு வெற்றி கிட்டுவதாக!" என்றான்.

"நீ யார்?" என்று கேட்டார் சேத்ராம்.

"ஒரு வழிப்போக்கன். பெஷாவர் போய்க் கொண்டிருக்கிறேன். இருட்டி வெகு நேரம் ஆகிவிட்டது. அதனால் இங்கே படுத்து இரவைப் போக்கி விட்டுப் பயணம் தொடர நினைக்கிறேன்!" என்றான் வழிப்போக்கன்.

"தாராளமாகக் களைப்பாறிச் செல்லுங்கள். கட்டில் தேவை யென்றாலும் இப்போதே வரவழைக்கிறேன்!" என்றான் டேக் சிங்.

"வேண்டாம். உங்களுக்கு வீண் சிரமம் வேண்டாம். நான் இதோ இந்த ஓட்டுத் திண்ணையில் படுத்துக் கொள்ளுகிறேன். ஆமாம், இப்பொழுது நீங்கள் ஏதோ விக்கிரமாதித்தரின் வாளைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தீர்களே! அதைக் கேட்டுத்தான் உள்ளே வந்தேன். இல்லாவிட்டால் வெளியிலேயே கூடப் படுத்திருப்பேன். — ஆமாம், இங்கே யாரிடமாவது விக்கிரமாதித்தரின் வாள் இருக்கிறதா, என்ன?" என்று கேட்டான் பயணி.

பிரயாணியின் பேச்சு முறையிலிருந்து அவன் கண்ணியம் மிகுந்தவன் என்பது தெளிவாகத் தெரிந்தது. அவன் குரலிலேயே ஒரு கவர்ச்சி இருந்தது. செவிமடுப்போரின்




# இதோ, புதிய ரெக்ஸோனா

உங்கள் சருமத்தைப்
பாதுகாத்து
ஊட்டமளிக்கிறது

காரணம், அதிலுள்ள

கேடில் ப்ளஸ் - சருமத்திற்கான 5 டானிக்குகளின் கலவை

லின்டாஸ்-RX. 43-140 TM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு




# 8-வது ஆண்டு ஆரம்பம்!




**மயிலை**யில், பட்டுச் சேலைகளுக்கு என்றே அமைக்கப்பெற்ற இந்த ஷோ-ரூமுக்கு 7 ஆண்டுகள் பூர்த்தியாகி 8-வது ஆண்டு 17-5-71 துவங்கியுள்ள இத்தருணத்தில்,

● வாடிக்கையாளர்களுக்கும், பெரிதும் ஒத்துழைப்பு அளித்த வியாபாரிகளுக்கும், எமது ஸ்தாபனத்தின் ஊழியர்கள் அனைவருக்கும் எமது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

● வழக்கம்போல் சென்ற ஆண்டும் தீபாவளிக்கென **அருணா, புவனா, ஜெயஸ்ரீ** மற்றும் **சங்கரி** ஆகிய 4 புதிய படைப்புகளை அறிமுகம் செய்து, பட்டுச்சேலை தயாரிப்பில் மீண்டும் ஓர் புதிய திருப்பத்தை உருவாக்கியதற்கு, தங்களது பேராதரவு தான் தூண்டுகோலாக விளங்கியது.

● சேலைகளைத் தேர்ந்தெடுத்தபின் எங்கள் கார் வசதியை வாடிக்கையாளர்கள் தங்கள் வீட்டுக்குச் செல்ல பயன்படுத்திக் கொள்ளலாம்.

● சென்னை வரும் வெளியூர் அன்பர்கள் குறிப்பாக பம்பாய், கல்கத்தா, டில்லி நேயர்கள், சேலைகளைத் தேர்ந்தெடுத்தால் வி. பி. பி. மூலம் அனுப்பி வைக்கிறோம். இந்த விலையில் இவ்வுயர்ரகம் அங்கு கிடைக்காது. சிறிதளவே தபால் கட்டணம் கூடுதலாகும். உள்ளூர் வாடிக்கையாளர்களும் வெளியூர் நண்பர்களுக்கு சேலைகளைத் தேர்ந்தெடுத்தால் தபால் பார்சல் மூலம் நாங்களே அனுப்பிக் கொடுக்கிறோம்.

● அயல் நாடுகளில் உள்ளவர்களுக்கு நீங்கள் தேர்ந்தெடுக்கும் பட்டு சேலைகளை **பரிசுப் பார்சல்**களாக நாங்கள் அனுப்பிக் கொடுக்கிறோம்.

● வெளியூர்களில் உள்ளவர்களின் சௌகரியத்தை முன்னிட்டு எங்கள் தயாரிப்புகளின் முழு விபரங்களுடன் கூடிய **'ஷேட் கார்டு'**கள் தயாரித்துக் கொடுத்ததன் மூலம் என்னற்றவர்களின் தேவைகளைப் பூர்த்தி செய்வதில் பெரும் வெற்றி கண்டோம்.

● சென்னை நகரவாசிகளுக்கு மட்டும் நல்லி பட்டு சேலை **சேமிப்பு அனுகூல திட்டம்** ஆரம்பித்ததன் மூலம் நடுத்தர வகுப்பினரும் சுலபமாக பட்டுச் சேலைகளை வாங்க ஓர் நல்வாய்ப்பினை அளித்துள்ளோம். தற்போது இத்திட்டம் வெளியூர்வாசிகளுக்கும் விஸ்தரிக்கப்பட்டுள்ளதால் M. O.மூலம் சந்தா செலுத்தி அங்கத்தினராகச்சேரலாம்.

● **உபரி ஸ்டாக்குகள்** — தள்ளுபடி விற்பனையில் மிக உயர்ந்த சேலைகளை வாங்க முடியாத நிலையிலுள்ளோரும் மிகக் குறைந்த விலையில் இவைகளைப்பெற முடிந்தது. இவ்வரிய சந்தர்ப்பத்தை ஆண்டுக்கொருமுறை மீண்டும் பயன்படுத்திக் கொள்ளலாம்.

● எமது துணை விற்பனை நிலையமான **நல்லி சில்க்ஸ் பனாரஸ் ஹாலில்** ஏராளமான **பனாரஸ்** சேலைகள் மற்றும் கலாக்ஷேத்ரா, காஞ்சிபுரம் நூல் சேலைகள், பிரிண்டட் சில்க் சேலைகள், மதுரை சுங்கடி சேலைகளும் எல்லா சேலைகளுக்கும் ஏற்ற 'மாட்சிங்' சோளிகளும் கிடைக்கும்.

● தரமான எல்லா ரக பட்டு சேலைகளும் ஒரே இடத்தில் கிடைக்கச் செய்ய, மைசூர் கவர்ன்மெண்ட் சில்க்கிற்கு அங்கீகாரம் பெற்ற டீலர்களாகியுள்ளோம். பல புது ரக கிரேப் சேலைகளும், **பின்னி** மென் - பட்டு வேஷ்டிகள், அங்கவஸ்திரங்கள், சேலைகளும் கிடைக்கும்.

● எமது சொந்தத் தறிகளில் தரமான பட்டில், உயர்ந்த ஜரிகையுடன், எமது மேற்பார்வையில் **அசல் பட்டுப் புடவைகளைத்** தயாரித்து **உற்பத்தியாளர்**களின் விலைக்கே வழங்குகிறோம்.

## ஈடு இணையற்ற பட்டு சேலைகளுக்கு மட்டுமே ப்ரத்யேகமான ஷோரூம்

# நல்லி சில்க்ஸ்

## பட்டு சேலைகள்

82, ராயப்பேட்டை ஹைரோடு, லஸ், மயிலாப்பூர், சென்னை-4 (போன் : **74862**)

**எங்கள் வியாபார நோக்கு - தரமான பட்டுச் சேலைகள், நியாயமான விலை மற்றும் வாடிக்கையாளர்களின் திருப்தி**

கவனத்தைத் தன்பால் இழுத்தது அவனது பேசும் முறை. கூடியிருந்தவர்களது கண்கள் அவனையே நோக்கலாயின. பண்டித் சேத்ராம் கூறினார்: "ஆம், சில தினங்களுக்கு முன்னால் விக்கிரமாதித்தரின் வாள் பூமிக்குள்ளிருந்து கிடைத்தது."

"அவருடைய வாள்தான் என்பதற்கு என்ன அத்தாட்சி?" — பிரயாணி ஐயம் எழுப்பினான்.

"வாளின் கைப்பிடியில் அவர் பெயர் பொறிக்கப்பட்டிருக்கிறது!" என்றார் சேத்ராம்.

"அவர் வாள் என்றும் மிகப் பெரிதாக இருக்குமே!" பிரயாணி வினா எழுப்பினான்.



"கங்கராஜு—லேஷுன்! உனக்கு டைப்பிஸ்ட் பக்கத்திலேயே ஸீட் ஒதுக்கிட்டோம்!"

"இல்லை. ஒரு சிறிய குத்துவாள்தான்!"

"அப்படியானால் அதில் ஏதாவது விசேஷ இயல்பு இருக்க வேண்டுமே!"

"ஆமாம், மதிப்பிடமுடியாத அருங்குணம் ஒன்று அதற்கு இருக்கிறது. பார்த்து அறிவு பிரமிக்கிறதே ஒழியக் காரணம் கண்டுபிடிக்க முடியாமல் திணறுகிறது. வாளை ஓரிடத்தில் வைத்துவிட்டால் எரிகின்ற விளக்குப் போல் ஒளி விட்டுப் பிரகாசிக்கிறது!"

"அப்படியா? விந்தையாக இருக்கிறதே!"

"ஆனால் மனிதன் அதைக் கையில் எடுத்துவிட்டால் அதன் ஒளி இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிடுகிறது" என்றார் சேத்ராம்.

இந்த விந்தைச் செய்தியைக் கேட்டுப் பிரயாணி அற்புதக் கதைகளைக் கேட்டு வியக்கும் சிறார்களின் நிலையை அடைந்தான். அவன் விழிகளிலும் பேச்சிலும் ஒரு பொறுமையின்மை தோன்றியது. ஆவேச உணர்வில், "விக்கிரமாதித்தரே! நின் புகழ் ஓங்குக!" என்று உரக்கக் கூவிவிட்டான்.

பிறகு சிறிது நேரம் கழித்து, "அந்த விலை மதிப்பற்ற பொருள் இங்குள்ள எந்தப் பெரியவரிடம் இருக்கிறதோ?" என்று ஆர்வம் தொனிக்கக் கேட்டான்.

பிரேம் சிங் கர்வம் தொனிக்கக் கூறினான்: "என்னிடம்!"

"நான் அதைப் பார்க்கலாமா?" ஆசையை அடக்கமாட்டாமல் கேட்டான் பிரயாணி.

பிரேம் சிங், "தாராளமாக. காலையில் காட்டுகிறேன். இல்லை, இல்லை; இப்பொழுதே காட்டிவிடுகிறேன். ஏனென்றால் காலையில் அதை மன்னர் ரஞ்ஜித் சிங்குக்குக் காணிக்கையாகச் செலுத்த இருக்கிறோம். விரும்பினால் இப்பொழுதே வந்து பார்த்துவிடுங்கள்!" என்றான்.

இருவரும் கிராமத்துப் பொது மண்டபத்தை விட்டு வெளியேறினர். பிரேம் சிங் பிரயாணியைத் தன் வீட்டுக்கு அழைத்துச் சென்று வாளுக்கு எதிராக நிறுத்தினான். அந்த அறையில் விளக்கு எதுவும் இல்லை. ஆனால் அறை முழுவதும் ஒளி மிதந்துகொண்டிருந்தது. அதைக் கண்ட பிரயாணி முன்னைக் காட்டிலும் ஆவேச உணர்வோடு, "விக்கிரமாதித்தரே! நின் புகழுக்கு இணை இல்லை! இத்தனை ஆண்டுகள் கழிந்த பின்னரும் உமது வாளின் ஒளியும் கருக்கும் கடுகளவும் குறையவில்லையே! என்னே விந்தை!" என்று அகமகிழ்ந்து முக மகிழ்ந்து போனான்.

இதைச் சொன்னகையோடு, ஆவலை அடக்க மாட்டாமல் அந்த வாளைப் பற்றிவிட்டான். அவன் கை பட்டதுதான் தாமதம், வாளின் ஒளி இருந்த இடம் தெரியாமல் ஒளிந்து விட்டது. அறை முழுவதும் இருள் சூழ்ந்துவிட்டது.

பிரயாணி சட்டென்று வாளைப் பலகையின் மீது வைத்தான். அவன் முகம் ஒரேயடியாக ஒளியிழந்து வாடிவிட்டது. அவன் பிரேம் சிங்கைப் பார்த்து, "நீங்கள் இந்த வாளை ரஞ்ஜித் சிங்குக்குக் காணிக்கையாகத் தரப்போகிறீர்களா? அவர் இதைக் கையால் தொடக்கூட அருகதையற்றவர்!" என்றான்.

இதைக் கூறிய மறுகணமே அவன் அங்கிருந்து வேகமாக வெளியேறி விட்டான். அப்பொழுது விருந்தா வாசலில் நின்று கொண்டிருந்தாள். பிரயாணி ஒருமுறை அவள் முகத்தை உன்னிப்பாக நோக்கினான். ஆனால் ஒன்றும் பேசவில்லை.

நள்ளிரவு நேரம் கடந்தும்கூடப் படை தண்டு இறங்கி யிருந்த இடத்திலே வழக்கப்படி கூத்தும் கொம்மாளமுமாக இருந்தன. மகிழ்ச்சி ஆரவாரம் தூக்கத்தைப் படை வீரர்களின் கண்களருகிலேயே அண்ட விடவில்லை. யாராவது சோம்பல் முறித்தாலும், அல்லது தூங்கி வழிந்தாலும் அவையில் உள்ளவர்கள் அவர்களை எழுப்பி ஒற்றைக் காலில் நிற்கவைத்துத் தூக்கத்தைக் கலைக்கும் பணியைப் புரிந்தனர்.

திடீரென்று அரச உத்தரவு பிறந்தது. மன்னர் இப்பொழுதே பயணம் தொடங்கப் போகிறார் என்று! இந்த நட்ட நடுநிசியில் மன்னர் ஏன் பயணத்தைத் தொடங்கத் தீர்மானித்துள்ளார் என்று எல்லோருமே வியப்பில் ஆழ்ந்தனர். படையும் இப்பொழுதே புறப்பட வேண்டும் என்று உத்தரவு பிறந்தால் என்ன செய்வது என்ற அச்சத்தில் நாற்புறமும் பரபரப்பும் சலசலப்பும் ஏற்பட்டன. ஆனால் மன்னர் ஒருசில பொறுக்கி யெடுக்கப்பட்ட படைத் தலைவர்களை மட்டுமே அழைத்துக்கொண்டு புறப்பட்டுவிட்டார். இந்தச் செய்தி தெரியவந்தாலும் இதற்கான காரணம் மட்டும் யாருக்கும் விளங்கவில்லை.

ஆயினும் அணை உடைந்துவிட்டால் ஏரி நீர் கட்டுக்கடங்காமல் வெள்ளமாகப் பாய்ந்து எப்படி அட்டகாசம் புரியுமோ, அப்படி மன்னர் சென்றதும் படைத் தலைவர்களும்

## கல்யாணம் வேண்டும்!

அன்டன் ருபின்ஸ்டன் என்னும் பிரபல பியானோ வித்வான் மிகுந்த வற்புறுத்தலின் பேரில் ஓர் இள



மங்கை பியானோ வாசிப்பதைக் கேட்டுக் கருத்துத் தெரிவிக்க இசைந்தார். கொஞ்ச நேரம் அவள் பியானோ வாசித்து விட்டு அவசரமாக அவர் இருந்த பக்கம் திரும்பி 'என் எதிர்காலத்தைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?' என்று கேட்டாள். பியானோ வித்வான் மிகச் சுருக்கமாக "திருமணம் செய்து கொள்" என்று கூறிவிட்டார்!

## கல்யாணம் வேண்டாம்!



என்னுடைய நெருங்கிய நண்பர் இன்னமும் திருமணம் செய்துகொள்ளவில்லை. இதற்கு அவர் கூறும் காரணம்:

"சமைக்கத் தெரிந்த பெண்களுக்குச் சம்பாதிக்கத் தெரியவில்லை; சம்பாதிக்கத் தெரிந்த பெண்களுக்குச் சமைக்கத் தெரியவில்லை; இரண்டும் தெரிந்த பெண்களைக் கண்டால் எனக்கும் பிடிப்பதில்லை!"

ஆதாரம்: பேஜண்ட் - கன்னிசா

---

வீரர்களும் தான்தோன்றித்தனமான செயல்களில் ஈடுபட்டு விட்டனர்.

### 5

விருந்தா கைம்மை எய்தி மூன்று ஆண்டுகள் ஓடிவிட்டன. அவள் கணவன் ஒரு கவலையற்ற மனிதன்; ஆடம்பர வாழ்வில் ஊறித் திளைத்தவன். இசையிலே ஆர்வம் மிக்கவன். பாட்டு என்றால் அவனுக்கு உயிர். வீட்டில் தனக்கு என்றிருந்த சொத்து சுதந்திரங்களையெல்லாம் அவன் கலைவாணிக்கும் கலைவாணியை உபாசிப்பவர்களுக்கும் அள்ளி வாரி வழங்கிவிட்டான். மூன்று லட்சம் பெறுமானமுள்ள சொத்து மூன்று ஆண்டுகளுக்குக் கூடப் பற்றவில்லை. ஆனால் அவனுடைய விருப்பம் நிறைவேறிவிட்டது. கலைவாணி அவனுக்கு ஆசி பகர்ந்தாள். இசைக் கலையில் அவன் வித்தைகள் பல புரிந்தான். அதன் பலனாகப் பெரிய பெரிய இசை வல்லுநர்கள் கூட அவன் எதிரே வாய் திறக்க அஞ்சினர். இசையின்பால் எத்தனை ஆர்வம் கொண்டிருந்தானோ, அதற்கு எள்ளளவும் குறையாமல் அவன் விருந்தாவிடமும் அன்பு பூண்டிருந்தான். அவன் உயிர்பாட்டில் வாழ்ந்தது: மனம் விருந்தாவின் அன்பில் மிதந்தது. தொடக்கத்தில் வேடிக்கையாகவும், அப்புறம் மனமகிழ்ச்சிக்காகவும் அவன் விருந்தாவுக்கும் பாட்டுச் சொல்லி வைத்தான். அதன் பலனாக விருந்தாவும் இசை அமுதத்தைச் சுவைத்துப் பருகக் கற்றாள். அவள் கணவன் மரித்து மூன்று ஆண்டுகள் ஆகிவிட்டபோதிலும் உலகத்து இன்பங்களை அவள் உதறித் தள்ளிவிட்ட பொழுதிலும் இசை அமுதத்தின் சுவையை மட்டும் அவளால் வேண்டாமென்று உதறி விட முடியவில்லை. கணவன் மரித்த பின்னர் அவளது ரோஜா இதழ்களிலே புன்னகை ஒடி ஒளி விட்டதை யாருமே கண்டதில்லைதான். இருந்தாலும் இசையில் அவள் மனம் லயிக்கவே செய்தது. கடந்த கால நினைவில் மூழ்கி அவள் மனம் துயருறும் பொழுதெல்லாம் ஏதாவது பண் இசைத்து அவள் மன நிறைவு பெற விரும்புவாள். ஆனால் அந்த இசை அவள் மனத்துக்கு எதிர்பார்த்த நிறைவைத் தருவதில்லை. இருந்தாலும் அவள் தன் மனத்துக்குப் பிடித்த ராகத்தை ஆலாபனம் செய்யும்பொழுது அவளுடைய மனக் கற்பனையிலே அவள் கணவன் தோன்றி மகிழ்வோடு முறுவலித்து நிற்பதைக் கண்டு மெய் மறந்திருக்கிறாள். கணவனின் அந்தக் கனவு உருவம் அவளை அபாரமாகப் பாராட்டியிருக்கிறது. அப்பொழுது இசை பயின்ற பயனைப் பெற்று விட்டதாக அவளுக்குத் தோன்றும். அமர உலகை அடைந்துவிட்ட கணவனின் நினைவு அவள் மனத்திலே புது மெருகு பெற்றுத் திகழும். இசை அவளைப் பொறுத்தவரையில் கற்பின் அறவொழுக்கத்தைப் பாதுகாக்கும் பெருந்தனமாக விளங்கியது.

இரவு மூன்றாவது யாமம் கழிந்துவிட்டது. வானத்தில் சந்திரனின் ஒளி மங்கத் தொடங்கிவிட்டது. நாற்புறமும் எங்கு பார்த்தாலும் ஆழ்ந்த அமைதி நிலவியிருந்தது. கற்பனை விரிக்கும் அந்த அமைதிச் சூழலில் விருந்தா தரையில் உட்கார்ந்து மத்திமக் குரலில் ஏதோ பாட்டை முணுமுணுக்கலானாள்:

"அன்பு நகரத்துக்கு யாரே வழிகாட்டுவீர்?"

விருந்தாவின் குரலில் குழைவும் இருந்தது; கனமும் இருந்தது. வருந்தும் உள்ளத்துக்கு ஆறுதல் அளிக்கும் சக்தியும் இருந்தது. உறங்கும் உணர்வுகளைத் தட்டி எழுப்பும் திறனும் இருந்தது. அவளுடைய ராக பாவம் செவியைத் துளைத்துக் கொண்டு உள்ளத்தில் போய்ப் பாய்வதாக இருந்தது.

"அன்பு நகரத்துக்கு யாரே வழிகாட்டுவீர்?
அடிக்கொருமுறை அலைபாயுது நெஞ்சம்
பிச்சி; எனக்கு எதுவுமே விளங்கவில்லை
அன்பு நகரத்துக்கு யாரே வழிகாட்டுவீர்?"

திடீரென்று யாரோ வாசற் கதவைத் தட்டினார்கள். அதைத் தொடர்ந்து பல குரல்கள் எழும்பின, "யார் வீடு இது? கதவைத் திற!" வென்று!

விருந்தா மௌனமானாள். பிரேம் சிங் எழுந்து கதவைத் திறந்தான். வாசல் முற்றத்தில் படை வீரர்களின் ஒரு சிறு படையே திரண்டு வந்திருந்தது. கதவு திறந்ததும் சில படை வீரர்கள் இரேழியில் நுழைந்து வந்தார்கள். "உன் வீட்டில் யாராவது பாடகி இருக்கிறாளா? நாங்கள் அவள் பாட்டைக் கேட்க விரும்புகிறோம்!" என்றார்கள்.

பிரேம் சிங், "எங்கள் வீட்டில் பாடகி—கிடகி யாரும் இல்லை!" என்று கூறினான்.

அவன் பேச்சை நம்பாத பல படை வீரர்கள் "உன் வீட்டுக்குள்ளிருந்துதான்




உங்களைச் சுற்றிலும்
சந்தனத்தின்
நறுமணம் கமழட்டும்

**மலாய் சந்தன சோப்பும்**
**டால்கம் பவுடரும்**
**நாள் எல்லாம்**
**உங்களை எழிலுடனும்**
**நறுமணத்துடனும்**
**திகழச் செய்ய**
**மிகப் பொருத்தமான**
**ஒரு ஜோடி**

இந்த சந்தன சோப்பு - குளிர்ச்சியானது, மிருதுவானது, சுகமானது. உங்களது சருமத்துக்கு எழிலூட்டுவது. இந்த சந்தனப் பவுடர் - மிருதுவானது. புத்துணர்ச்சியூட்டுவது. இந்த சோப்பையும் பவுடரையும் உபயோகித்தால் வியர்வை கொட்டும் ஒரு வெப்பமான நாளிலுங்கூட நீங்கள் சந்தனத்தின் தன்னிகரில்லாத நறுமணம்கமழ எழிலுடனும் தூய்மை உணர்ச்சியுடனும் இருப்பீர்கள்.

கல்கத்தா கெமிகல் கம்பெனி லிமிடெடின் தயாரிப்புகள்

பாட்டுக் குரல் வந்தது. ஏன் ஒளித்து மறைக்க முயல்கிறாய்?'' என்று கேட்டார்கள்.

''சொல்லடா! யார் பாடியது?'' ஒரு படை வீரன் மிடுக்கோடு கேட்டான்.

''என் மகள் பாடிக் கொண்டிருந்தாள். ஆனால் அவள் பாடகியல்ல!'' என்றான் பிரேம் சிங்.

''யாரா யிருந்தாலும் பரவாயில்லை. இன்று நாங்கள் அவளுடைய பாட்டைக் கேட்க விரும்புகிறோம்!'' என்றான் ஒரு படை வீரன்.




கோபத்தில் பிரேம் சிங்கின் உடல் நடுங்கியது. உதடுகளைக் கடித்துக் கொண்டு, ''தோழர்களே! நானும் என் வாழ்வை ராணுவத்தில்தான் கழித்திருக்கிறேன். ஆனால் ஒரு பொழுதும் இதுபோல...'' என்றான்.

கூட்டத்தின் இரைச்சலில் பிரேம் சிங்கின் பேச்சு யார் காதிலும் விழவில்லை. போதை வெறியில் கண் சிவந்திருந்த ஒரு ஜாட் இளைஞன், ''இந்தக் கிழவனின் மீசையைப் பிடுங்கி யெறி!'' என்று பொங்கினான்.

விருந்தா முற்றத்தில் கல்லாகச் சமைந்து இந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தாள். இரு படை வீரர்கள் அந்த இளைஞன் கூறியது போலவே பிரேம் சிங்கின் மீசையைப் பிடுங்கத் தொடங்கவே, அவளால் பார்த்துக் கொண்டிருக்க முடியவில்லை. அவள் அச்சத்தை விட்டொழித்துப் படை வீரர்களுக்கு இடையே புகுந்து வந்தாள். உரத்த குரலில், ''என் பாட்டைக் கேட்க விரும்புவது யார், யார்?'' என்று கேட்டாள்.

வீரர்கள் அவளைப் பார்த்ததும், பிரேம் சிங்கை விட்டு விட்டார்கள். ''நாங்கள் எல்லோருமே உன் பாட்டைக் கேட்க விரும்புகிறோம்!'' என்றார்கள்.

''சரி, உட்காருங்கள், பாடுகிறேன்!'' என்றாள் விருந்தா.

ஆனால் பல படைவீரர்கள் அடம் பிடித்தனர். ''இவளை முகாமுக்கு இட்டுச் செல்வோம். அங்கே போய்க் கேட்டால்தான் களை கட்டும்!''' என்று!

விருந்தா வீரர்களுடன் முகாமை நோக்கிப் புறப்பட்டாள். அதைக் கண்ட பிரேம் சிங் கொதித்து எழுந்தான். ''விருந்தா! இவர்களோடு போவதானால் மீண்டும் இந்த வீட்டில் நீ காலடி வைக்காதே!'' என்று கடிந்தான்.

விருந்தா படை இறங்கியிருந்த இடத்தை அடைந்தாள். அங்கே கொடுங்கோன்மை கடும் புயலென உருவெடுத்துக்கொண்டிருந்தது. வெற்றித் திரு பகைவர்களைப் பூண்டோடு நசுக்கியது மட்டுமின்றி வெற்றி கொண்டவர்களின் மனிதத் தன்மையையும் கண்ணியத்தையும் கூடக் காலடியில் போட்டு நசுக்கிப் போட்டிருந்தது. மிருகத் தன்மை என்னும் பயங்கரக் கொடுஞ் சிங்கம், பகைவர்களின் இரத்தத்தோடு திருப்தியுறாமல், மனிதத் தன்மை, மனித உணர்வு ஆகியவற்றின் இரத்தத்தையும் உறிஞ்சிக் கொண்டிருந்தது.

விருந்தாவைப் படைவீரர்கள் அலங்கரிக்கப்பட்ட கூடாரம் ஒன்றுக்கு இட்டுச் சென்றனர். அங்கே கண்ணாடிக் கிளை விளக்குகள் ஒளி பரப்பிக் கொண்டிருந்தன. மதுபானம் உச்ச கட்டத்தை அடைந்து கொண்டிருந்தது. விருந்தா பயங்கர இரத்த வெறி பிடித்த மிருகங்களுக்கிடையே சிக்கிவிட்ட முயற்குட்டியைப் போல் ஒரு மூலையில் பயந்து நடுங்கியவாறு ஒடுங்கி நின்றாள். தன்னலப் பேய் அந்த நேரத்தில் அவர்களுடைய மனங்களில் ஆட்டம் போட்டுக் கொண்டிருந்தது. தீய சிந்தனைகள் படையாகக் குவிந்திருந்தன. விழி என்னும் வில்லை வளைத்து மானம் போக்கும் அம்பை எய்வான் ஒருவன். வாயை வில்லாக்கி உயிர் குடிக்கும் சொல்லம்புகளை மாரியாகப் பொழிவான் மற்றவன்! நஞ்சு தோய்ந்த மதுவில் மூக்குளித்த அந்த அம்புகள் விருந்தாவின் மென்மையான கற்பே உருவான உள்ளத்தைத் துளைத்துக் கொண்டு அப்பால் எகிறிவிடும். அப்பொழுது அவள் எண்ணுவாள்: 'திரௌபதியின் மானத்தைக் காத்த கண்ணபிரானே! அறத் தளையில் கட்டுண்டு கிடந்தாலும் பாண்டவர்கள் திரௌபதியின் மானத்தைக் காக்கக் கடமைப் பட்டிருந்தார்கள். அவர்கள் செயலற்று அருகில் நிற்க நீ திரௌபதியின் மானத்தைக் காத்தாய்! அவளுக்கு உதவ பாண்டவர்கள் இருந்ததுபோல் எனக்கு யாரும் கிடையாது. நான் இவ்வுலகில் யாரும் அற்ற அநாதை. என் மானத்தைக் காத்தருள மாட்டாயா?'

இப்படி எண்ணிய விருந்தா, 'சீதைக்கு ரகுராமனைப் போன்று நம்பிக்கை அளிப்பவனே!' என்னும் பொருள்படத் தொடங்கும் மீராவின் புகழ் தோய்ந்த பஜன் ஒன்றைப் பாடினாள்.

உள்ளம் உருகும் வகையிலே பண் இசைத்தாள் விருந்தா. அவளுடைய இனிய குரலில்

மேல மாம்பலம்
சனீசுவர ஆலயம்

1971 ஜூன் மாதம் 3ந் தேதி வியாழக்கிழமையன்று மேல மாம்பலம் வெங்கடாசல அய்யர் தெருவிலிருக்கும் வட திருநள்ளார் சனீசுவர பகவான் ஆலயத்தில் விசேஷ பூஜைகளும் அர்ச்சனை, ஆராதனைகளும் நடைபெறும். பகவானுக்கு 'அன்னப் பாவாடை' சாத்தப்படும்.

மீராவே தோன்றாமற் தோன்றிப் பாடுவது போல் இருந்தது. வெளியுலகத்தின் பார்வைக்கு வேண்டுமானால் அவள் குடிகாரப் படை வீரர்களுக்கு எதிரே பாடிக் கொண்டிருந்தாள். ஆனால் கருத்து மோதும் உள்ளுலகில் அவள் குழல் ஊதும் கண்ணனுக்கெதிரே கைகட்டி நின்று வேண்டிக் கொண்டிருந்தாள்.

சிறிது நேரம் அந்தக் கும்மாளம் நிறைந்த மண்டபத்தில் அமைதி நிலவியது. மனிதனின் மனத்தில் அமர்ந்து ஆதிக்கம் செலுத்திக் கொண்டிருந்த மிருக வெறி மீது, உள்ளத்தைப் பிழியும் அன்பின் குரல் மந்திரம் போட்டாற் போன்றதொரு நிலையை உண்டு பண்ணியது. இனிமையான இசை மதம் பிடித்த யானையைக்கூடக் கட்டிப் போடும் ஆற்றல் படைத்ததாயிற்றே! ஏறக்குறைய ஒரு மணி நேரம் விருந்தாவும் தனது இன்னிசையினால் மதம் பிடித்த படை வீரர்களைச் செயலிழக்கச் செய்து விட்டாள். திடீரென்று மணி ஐந்து அடித்தது. படை வீரர்களும் தலைவர்களும் துணுக்குற்றனர். அவர்களுடைய போதை வெறி அனைத்தும் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டது. நாற்பது மைல் தொலைவை அவர்கள் கடந்தாக வேண்டும். எனவே, வெகு விரைவாகப் பயண ஏற்பாடுகள் நடக்கலாயின. கூடாரங்கள் பிரிக்கப்பட்டன. குதிரை வீரர்கள் தங்கள் குதிரைகளுக்குத் தீனி வைத்தனர். ஓட்டமும் நடையுமாக எல்லா நிகழ்ச்சிகளும் நிகழலாயின.

காலைக் கதிரவன் கண் திறந்து எழவும், படை புறப்படுவதற்கான 'நகாரா' ஒலிப்பதற்கும் சரியாயிருந்தது. முதல் நாள் மாலை அந்த மைதானத்தில் ஓர் அடி இடம்கூட விடாமல் படை வீரர்கள் மொய்த்திருந்தனர். காலையெழுந்து பார்த்தால் அங்கு ஈ காக்கை இல்லை. இங்கும் அங்கும் உடைந்த அடுப்புகளும் அதன் சாம்பல்களும் காட்சி தந்தன. கூடாரம் அடிக்க உபயோகப்படுத்தப்பட்ட கொம்புகள் — இல்லை, அந்தக் கொம்புகள் பிடுங்கப்பட்ட குழி அடையாளங்கள் — மட்டுமே எஞ்சியிருந்தன.

அவையில் கூடியிருந்த அத்தனை பேரும் பயணத்துக்கு ஆயத்தமானதைக் கண்ட விருந்தா, கூடாரத்திலிருந்து வெளியே வந்தாள். அவளைத் தடுத்து நிறுத்துவார் யாரும் காணோம். ஆயினும் அவள் இதயம் அடித்துக் கொண்டது, யாராவது மீண்டும் வந்து பிடித்து விட்டால் என்ன செய்வது என்று! அவள் அடர்ந்த மரங்களுக்கு இடை வழியாக வெளியில் வந்தாள். அப்புறம்தான் அவளுக்கு உயிர் வந்தாற் போலிருந்தது.

இன்பம் பயக்கும் இனிய காலை நேரம் அது. விருந்தா அடி எடுத்து முன்னேற முயன்றாள். ஆனால் அவள் கால்கள் எழவில்லை; கனத்தன பெருஞ் சுமையாக.

'படை வீரர்களுடன் போவதாயிருந்தால் மீண்டும் இந்த வீட்டுக்குள் அடி எடுத்து வைக்காதே !' என்று பிரேம் சிங் கூறிய சொற்கள் அவளுக்கு நினைவு வந்தன. அவள் ஒரு நீண்ட பெருமூச்சுவிட்டாள். அப்படியே திடும்மென்று தரையில் உட்கார்ந்துவிட்டாள். உலகத்தில் இனி அவளுக்கென்று யார் இருந்தார்கள்? அவளுக்குப் போக்கிடம் ஏது?

மனத்தில் பறந்துவிட வேண்டும் என்ற ஆசையைத் தேக்கிக் கொலைகார வேடனின் வலையிலிருந்து வெளியே வருகிறது ஓர் அப்பாவிப் பறவை. விடுதலை பெற்றபின் தான் ஈவு இரக்கமற்ற வேடன் தன் இறக்கைகளை வெட்டிப் போட்டிருக்கிறான் என்பதை அறிகிறது. அப்பொழுது அந்தப் பறவையின் மன நிலை எப்படி இருக்கும், எத்தனை துயரங்களைத் தேக்கி நிற்கும்? மரங்களின் கிளைகளை அடிக்கடி ஆசையோடு நோக்கும், சிறகு அடித்துப் பறந்து சென்று அதில் அமர்ந்து இசைக்கமாட்டோமா என்று! ஆனால் இறக்கைகளை விரிக்க முடியாத துயர நிலையில் — விவரிக்கக்கூடிய துயரமா அது ? — இயலாமை என்னும் ஆற்றாமையில் அதன் சிந்தனை இப்படித்தானே ஓடும்? 'அந்தக் கொடும் வேடன் மீண்டும் நம்மைப் பிடித்துக் கூட்டில் அடைக்கமாட்டானா?'' என்று! விருந்தாவின் நிலையும் அப்பொழுது அதே துயரம் தரும் நிகழ்ச்சியை நினைவூட்டுவதாகத் தான் இருந்தது.

விருந்தா சிறிது நேரம் யோசனையில் ஆழ்ந்திருந்தாள். பிறகு அவள் மெதுவாக எழுந்து, மந்த நடை போட்டுப் பிரேம்சிங்கின் வீட்டு வாசலை அடைந்தாள். வாசற் கதவு திறந்துதான் இருந்தது. ஆனால் அவளால் வீட்டுக்குள் அடி எடுத்து வைக்க முடியவில்லை. அவள் வீட்டு வாசலையும் சுவரையும் ஆவலோடு நோக்கினாள். உள்ளே நுழையத் தோன்றாமல் மீண்டும் காட்டுப் பக்கமே சென்று விட்டாள்.

## 6

லாகூர் நகரில் பிரசித்தி வாய்ந்த அந்தப் பகுதியில் அழகிய எடுப்பான ஏற்றம் மிகு மூன்று மாடிக் கட்டடம் ஒன்று. பசுமையும் பார்வைக்கு அழகும் நிறைந்த மலர்களோடு கூடிய குருக்கத்திக் கொடி கட்டடத்தின் சுவர்களிலும் வேலைப்பாடு மிகுந்த வளைவுகளிலும் அழகாகச் சுற்றி ஏறிப் படர்ந்திருந்தது. அந்தக் கட்டடத்தின் செல்வச் செழிப்புக்கு எடுத்துக்காட்டாக விளங்கிய அறையொன்றில் விருந்தா ஓர் இரத்தினக் கம்பளத்தில் அமர்ந்து அழகிய தோற்றமும் சூடிகையான பேச்சாற்றலும் கொண்ட மைனாவுக்குச் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தாள். அறை

யின் சுவர்களுக்கு இலேசான இளிப் பச்சை நிறம் கொடுக்கப்பட்டிருந்தது. எழில்மிகு வேலைப்பாடுகள் நிறைந்த சுவர்களில் அழகழகான படங்கள் அது அதற்கேற்ற இடங்களில் பொருத்தப்பட்டுச் சோபை அளித்துக் கொண்டிருந்தன. சந்தனம், வெட்டிவேர் ஆகியவற்றின் நறுமணம் இதயத்துக்கு இதம் அளிக்கும் வகையில் அறை முழுவதும் பரவியிருந்தது. ஒரு கிழவி அமர்ந்து 'பங்கா' இழுத்துக் கொண்டிருந்தாள். இத்தனை ஆடம்பரப் பொருள்களும் இன்பக் கிளுகிளுப்பு ஊட்டும் சாதனங்களும் இருந்தும்கூட விருந்தாவின் முகம் வாட்டமாயிருந்தது. அவள் முகம் முன்னைக் காட்டிலும் அதிகமாக வெளிறிக் கிடந்தது. மகிழ மலர் போல — வாட்டத்திலும் வாசனை குறையாத மகிழ மலர் போலத் தோன்றினள் விருந்தா.










விருந்தா இப்பொழுது லாகூர் நகரத்தில் உள்ள புகழ் வாய்ந்த பாடகிகளில் ஒருத்தி. அவள் இந்த நகரத்துக்கு வந்து மூன்று மாதங்கள்கூட ஆகவில்லை. ஆனால் அதற்குள்ளாகவே அவள் மக்களின் மனத்தில் அழியாப் புகழ் பெற்று விட்டாள். இங்கு அவளுக்கு சியாமா என்னும் பெயர்தான் வழங்கி வந்தது. லாகூர் எத்தனை பெரிய நகரமாக இருந்தால் என்ன, சியாமா பாயியின் முகவரியைக் கேட்டால் யாருமே டக்கென்று சொல்லிவிடுவார்கள். சியாமாவின் குரலிலும் பாடும் முறையிலும் ஏதோ இனம் விளங்காத கவர்ச்சி இருந்தது. அது நகரத்தின் பிரமுகர்களை மட்டும் என்ன, சாதாரண மக்களைக்கூடத் தன்பால் காதலாகிக் கசிந்துருகச் செய்தது. லாகூரில் அற்புதமாகப் பாடுகிறவர்களுக்குக் குறைவே இல்லை. அந்தக் காலத்தில் லாகூர் எல்லாக் கலைஞர்களுக்கும் வியன்மிகு வித்தைச் செயல்களுக்கும் கேந்திர ஸ்தானமாக இருந்தது. லாகூரில் குயில்களும் வானம்பாடிகளும் ஏராளம் என்றாலும் 'சியாமா' மட்டும் ஒன்றுதான் இருந்தது. சியாமா 'துருபத்' பாடுவதில் வல்லவள். அதனால் மக்கள் அவளை 'துருபத் சியாமா' என்றே அழைத்து வந்தனர்.

லாகூரில் தான்ஸேனின் குடும்பத்தைச் சேர்ந்த சிறந்த கலைஞர்கள் எத்தனையோ பேர்கள் இருந்தார்கள். அவர்கள் ராகங்களைக் கொண்டே உரையாடி வந்தனர். ஆம், அவர்கள் பேச்சிலும் ராகம் பேசும். அவர்களுக்குச் சியாமாவின் பாட்டு என்றால் கட்டோடு பிடிக்காது. சியாமாவின் பாட்டில் அவர்கள் அடிக்கடி ஏதாவது கோளாறு கூறி வந்தனர். 'அவளுக்கு ராக ஞானம் பற்றாது. இன்னின்ன ராகங்களைப் பகுத்தறியும் ஆற்றல் இல்லை' என்றெல்லாம் கூறி வந்தனர். ஆனால் அவர்கள் எடுத்துக் காட்டும் தவறுகளை யாருமே பொருட்படுத்துவதில்லை. சியாமா தவறுகப் பாடினாலும் சரியாகப் பாடினாலும், அவள் பாடுவதைக்கேட்டு மக்கள் மகிழ்ந்து போயினர்; மெய்ம்மறந்து போயினர். இதன் ரகசியம் என்னவென்றால், அவள் பாட்டு எப்பொழுதும் உள்ளத்திலிருந்து பெருகி வருவது. அவள் எந்த உணர்வுகளை வெளியிட்டு வந்தாளோ, அவற்றைத் தானும் அந்த ராக சுத்தத்தோடு உய்த்து உணருவாள். அவள் உயிரற்ற சடமாகப் பிறரின் பாட்டுக்களையும் முறைகளையும் அப்படியே 'ஈயடிச்சான் காப்பி' செய்வதில்லை. தன் மனோ தர்மத்துக்கும் கற்பனைக்கும் நிறைய இடங் கொடுத்து மெருகூட்டி வந்தாள். அதனால் அவள் இல்லாத இசை நிகழ்ச்சிகள் வெறிச்சோடி விடும். எனவே, ஒவ்வொரு கச்சேரியிலும் அவள் இருக்க வேண்டும் என்பது அவசியமாகி விட்டது. அவள் வெறும் சுலோகங்களை ராக பாவத்தோடு சொன்னாலும்போதும், அவள் இல்லாத நிகழ்ச்சி நிறப்பதில்லை என்னும் நிலை ஏற்பட்டுவிட்டது. எனவே, வாளுக்குக் கறுக்கு எவ்வளவு அவசியமோ, அவ்வளவு சியாமா கச்சேரிகளுக்கு அவசியம் என்றாகிவிட்டது. இசைக்கே உயிர் நாடியாக அவள் விளங்கலானாள். அவள் பொதுமக்களின் மனத்தில் நிரந்தரமான இடம் பெற்று விட்டாள். அவள் பல்லக்கு ஏறிக் காற்று வாங்கப் போனாலும் நாற்புறமிருந்தும் அவள் மீது மலர் மாரி பொழியலாயினர் ரசிகப் பெருமக்கள்.

மன்னர் ரஞ்ஜீத்சிங் காபுலிலிருந்து திரும்பி மூன்று மாதங்கள் ஆகிவிட்டன. ஆனால் இது வரை வெற்றி மகிழ்ச்சிக்கு விழாவே எடுக்கப் படவில்லை. திரும்பியபின் பல நாட்கள் வரை மன்னர் எக்காரணத்தாலோ மன வாட்டமாகவே இருந்தார். அதற்குப்பின் இடீரென்று அவருடைய மன நிலையில் ஒரு மாற்றம் ஏற்பட்டது. காபுல் வெற்றி பற்றிப் பேச்செடுத்தாலே அவருக்குக் கசந்தது; வெறுப்பைக் கக்கினர். யாராவது இந்த வெற்றிக்கு வாழ்த்துக் கூறத் தப்பித் தவறி வந்து விட்டால் அவரை ஏறெடுத்தும் பார்க்க மாட்டார். மாநகரம் வரையில் அவரு

## வியாபார லட்சணம்!

மிளகாய் வியாபாரி முத்துநாதன் கெட்டிக்காரன், சிக்கனக்காரன் என ஊரே பேசும் ஒருமுகமாக.

அவனது இந்த இரண்டு குணங்களுக்கும் ஒரே உதாரணம்: தினசரி மிளகாய் விற்கும்போது ஒவ்வொரு வாடிக்கைக்காரருக்கும் ஒரு மிளகாயைக் கூடப் போடுவதாகப் பாவனை செய்து அந்த மிளகாயை எடுத்துத் தனியாகக் கூடையில் போட்டு விட்டுக் கொண்டு போய்க் குழம்பு காய்ச்ச உபயோகிப்பான்.

ஒரு நாள் அவனுக்கு வெளியூர் போக வேண்டிய அவசர வேலை. தினசரி பக்கத்திலிருந்து கவனித்து வரும் தன் சின்னப் பையனை வியாபாரத்தைப் பார்க்கச் சொல்லிவிட்டு ஊருக்குப் போனான்.



வந்ததும் வராததுமாகப் பையனைக் கேட்ட கேள்வி: "வியாபாரத்தின்போது நான் செய்தது போல் ஒவ்வொரு மிளகாயைத் தனியாகப் போட்டாயா?" என்பதுதான்.

பையன் பதில் சொன்னான். "உன்னைப்போல் அடிக்கடியாக ஒரு மிளகாயைத் தனியே எடுத்துப் போடவில்லை. ஆனால் ஒரு சட்டியில் தண்ணீர் வைத்துக் கொண்டு மிளகாய் விற்றவுடன் கையைக் கழுவினேன். மூணு சட்டியில் அந்தத் தண்ணீர் சேர அதைக் குழம்பு காய்ச்ச வீட்டுக்கு அனுப்பி விட்டேன்" என்றான் அப்பனை விடக் கெட்டிக் காரனான பையன்.

முத்துநாதன் மகனைப் பாராட்டுவானா? அதுதான் இல்லை. "பாவிப் பயலே! செய்ததுதான் செய்தே சரி. மூணு சட்டித் தண்ணியையும் ஒரே நாள் குழம்பு காய்ச்சிவிடச் சொன்னியே. வைத்திருந்து உபயோகித்தால் மூணு நாளைக்கு வருமேடா...." என்றான்.

பையன் அசந்து போனான். - தேஜ்.

---

டைய மனத்தை நிறைத்த வெற்றி மகிழ்ச்சி இப்பொழுது ஒரேயடியாக மறைந்துவிட்டது. காபூலை வெற்றி கொள்ள வேண்டும் என்பது அவருடைய நீண்ட நாளைய ஆசை. ஓராயிரம் ஆண்டுகளாக இந்து மன்னர்கள் நினைத்தே கூடப் பார்த்திராத அந்தப் படையெடுப்பு அவருடைய தலைமையில் நிகழ்ந்தது; வெற்றியும் தேடித் தந்தது. ஓராயிரம் ஆண்டுகளாக இந்துஸ்தானத்தை அடக்கி ஆண்டு வெற்றிக் கொடி பறக்க விட்டுக் கொண்டிருந்த நாட்டில், ஹிந்து சமூகத்தின் கொடியைப் பறக்க விட்டவர் ரன்ஜீத் சிங்தான். கஜனி, காபூல் போன்ற இடங்களில் உள்ள குன்றுகள் மனித இரத்தத்தினால் சிவந்து கிடந்தன. இதனால் மகிழ்ச்சி அடைய வேண்டியவர் ரன்ஜீத் சிங். ஆனால் அவருக்கு எள்ளளவும் மகிழ்ச்சி ஏற்படவில்லை. அவர் மனம் இப்படி மாறிப் போன காரணத்தை — ரகசியத்தை — யாராலுமே அறிய முடியவில்லை. ஆனால் யாருக்காவது ஏதாவது கொஞ்சம் தெரிந்திருந்தால் அது விருந்தாவுக்கு மட்டுமே தெரிந்திருக்குமோ, என்னவோ?

மூன்று மாதங்கள் வரை மன்னரின் நிலையில் எவ்வித மாற்றமும் காணவில்லை. அதற்குப் பின்னர்தான் அவருடைய மனம் தன் நிலைக்கு வரலாயிற்று. அவர்பால் நல்ல எண்ணம் கொண்ட அவையோர்கள் இந்தத் தருணத்தைத்தான் எதிர்நோக்கிக் கொண்டிருந்தார்கள். ஒரு நாள் அவர்கள் மன்னரிடம் சென்று மாபெரும் வெற்றிவிழாக் கொண்டாடுவதற்கு அடி போட்டார்கள்; வேண்டி நின்றார்கள். ஆரம்பத்தில் அவர் கோபித்துக் கொண்டார். ஆனால் கடைசியில் மனக் குறிப்பை அறிந்து பேசும் அவையோர்களுக்கு வெற்றியே கிட்டியது.

விழாக் கொண்டாடுவதற்கான ஏற்பாடுகள் விரிவான முறையில் செய்யப்பட்டன. அரசாங்க அரங்க மேடை புது முறையில் அலங்கரிக்கப்பட்டது. பட்னா, பனாரஸ், லக்னோ, குவாலியர், தில்லி, புனா போன்ற இடங்களிலிருக்கும் புகழ்பெற்ற கலை அரசிகளுக்கு அழைப்புப் போயிற்று. விருந்தாவுக்கும் அவ்வழைப்பு வந்தது. வெகுநாட்களுக்குப்பின் அவள் முகத்தில் முறுவலின் ஒளிக் கோடுகள் படர்விட்டன.

விழாவுக்கான நாள் குறிக்கப்பட்டது. லாகூர் நகரப் பாதைகளிலே வண்ண வண்ணக் கொடிகள் பறக்கவிடப்பட்டன. நாற்புறமிருந்தும் நவாபுகளும் அரசர்களும் அரசுக்குரிய அணி — பணிகளுடன் வரலாயினர். நடன அரங்கு கைதேர்ந்த கலைஞர்கள் பலரால் உருவாக்கப்பட்டது; இன்ப விடுதியோ என்று ஐயமுறும் வண்ணம் அதன் எழில் மணத்தது.

மாலை நேரத்தில் அரச அவை கூடியது. மன்னர் பொன் வேயப்பட்ட அரியாசனத்தை அலங்கரித்தார். நவாபுகளும் அரசர்களும் பெருஞ் செல்வத்துக்கு உரியவர்களும் பெரு மதிப்புக்கு உரியவர்களும் யானை — குதிரைகளின் மீது அமர்ந்து அணி—மணிகளில் தங்களுக்குள்ள கைவரிசைகளையெல்லாம் காட்டிக் கொண்டு ஊர்வலமாக மன்னருக்கு வணக்கம் தெரிவித்து வாழ்த்துக் கூற வந்தனர். சாலைகளின் இருமருங்குகளிலும் வேடிக்கை பார்ப்பவர்களின் கூட்டம் நெரித்துக்கொண்டிருந்தது. மன மகிழ்ச்சிக்கும் கண் கவர் வண்ணங்களுக்கும் ஏதோ ஆழ்ந்த தொடர்பு இருக்க வேண்டும். அதனால் எங்கு பார்வை சென்றாலும் கண்களைப் பறிக்கும் வண்ணக் கலவை காட்சி தெரிந்தது. பொங்கிவரும் ஆறு பல்வகை வண்ண மலர்களை நறுமணம் கமழப் பாத்தி பாத்தியாக ஏந்தி வருவது போன்று தோற்றியது. மக்கள் வெள்ளம் அலை அலையாகப் புரண்டு வந்த கண்கொள்ளாக் காட்சி!

மகிழ்ச்சி வெறியில் ஒரொரு சமயம் மக்களிடையே நாகரிகம் பிறழ்ந்த செயல்கள் சில தலைகாட்டின. ஒரு புலவர் வயிறு தெரிய வெறும் பனியனை மட்டும் அணிந்து கொண்டு — தலையில் பெருங் குல்லாவுடன் வேடிக்கை பார்க்க வந்திருந்தார். யாரோ ஒரு குறும்புக்காரன் அவருடைய தொந்தியில் வௌவாலை ஒட்டிவிட்டான். புலவர் தொந்தி குலுங்க ஏதும் புரியாமல் இங்கும் அங்கும் அலறிப்புடைத்துக் கொண்டு ஓடினார். அதைக் கண்ணுற்றுக் கூட்டத்திலே பெரும் நகையொலி எழுந்தது. கடலின் ஆரவாரத்தை நினைவுபடுத்துகிறது போல. இன்னொரு பக்கம் ஒரு மௌல்வி நீண்டு தொங்கும் சட்டையோடு ஒரு கடையின் வாசலில் நின்று கொண்

டிருந்தார். கடைக்காரர் மிகவும் விநயமாக, ''மௌல்வி சாஹப்! எதற்காக நின்றுகொண்டு சிரமப்படுகிறீர்கள்? இதோ, நாற்காலி போட்டிருக்கிறது, பாருங்கள்! இதில் சௌகரியமாக உட்கார்ந்து கொண்டு பாருங்களேன்!'' என்றார். மௌல்வி சாஹப் பின் முகம் கடைக்காரரின் மரியாதையைக் கண்டு மலர்ந்தது. 'என் முகத்தில் பெரியோர்களுக்குரிய களை பளிச்சிடுகிறதுபோல் இருக்கிறது! இல்லாவிட்டால் இந்தக் கடைக்காரர் இத்தனைபேர் நிற்க எனக்கு மட்டும் உட்கார நாற்காலி தருவாரா? ஆட்களின் தராதரத்தை அறிவதில் கடைக்காரர்களுக்கு ஈடு இணை கிடையாது. ஆயிரக்கணக்கில் மக்கள் நின்றுகொண் டிருக்கிறார்கள். அவர்களில் யாரையாவது கூப்பிட்டு உட்காரச்சொன்னாரா, இந்தக் கடைக்காரர்? ஆயிரத்தில் ஒருவராக நம்மைத் தானே பொறுக்கினார்?' என்று எண்ணினார். முகத்து முறுவல் தாடியில் தெரிய நாற்காலியில் போய் அமர்ந்தார். அமர்ந்ததுதான் தாமதம், பின்புறமாகச் சாய்ந்தார். சாய்ந்ததோடு மட்டுமா? கீழே ஓடிக் கொண்டிருந்த கழிவு நீர்ச் சாக்கடையில் போய் விழவும் செய்தார். துணிமணிகள் தெப்பமாக நனைந்தன. கடைக்காரரை வாயில் வந்தபடியெல்லாம் திட்டினார். கண்ணியம் மிகுந்த கடைக்காரர் பாவம், வாயே திறக்கவில்லை. கூட்டத்திலேமட்டும் பெரிய நகையொலி அதிர்ந்தது. நாற்காலி மூன்றே காலில் நிற்கும் அதிசயத்தைக் கண்டு கைகொட்டி — இவ்விந்தையைப் புரிந்த கடைக்காரரை வாழ்த்துவான்வேண்டிக் கரவொலியும் புரிந்தது.



''விஜய ஜன் மல்லிகாதேவி வீட்டு மாஜி வேலைக்காரி, நம் வீட்டு வேலைக்காரியாக இப்போ வந்திருக்கிறாள். அவளுக்குக் காப்பி வேணுமாம்! சீக்கிரம் ஒரு டாக்ஸியைப் பிடித்து 'சவேரா'விலிருந்து வாங்கிட்டு வாங்க!''

ஓரிடத்தில் அபினி அருந்தும் பழக்கம் உள்ள ஒருவர் வேடிக்கை பார்க்க வந்திருந்தார். வில்லாக வளைந்த இடுப்பு, பொக்கை வாய், கலைந்த தலைக்கேசம், மருதாணி நிற மேறிய தாடி, கண்களுக்குத் தீட்டிய கரிய மை — இத்தியாதி கோலங்களுடன் காட்சி அளித்தார். யார் கவனத்தையும் கவரும் வகையில் மகிழ்ச்சி வெறியில் போதைக் கிறக்கத்தில் மயங்கியும் கிடந்தார். இந்தச் சமயத்தில்தான் அந்தப் பக்கமாக ஒரு மிட்டாய்க்காரன் தலையில் கூடையுடன் அங்கு வந்து சேர்ந்தான். ''கான் சாஹப்! வியாழக் கிழமை போட்ட ரோஜா அத்தர் தெளித்த பன்னீர் ஜாங்கிரி வேண்டுமா? இன்று மட்டும் காசுக்குக் கால் சேர் தருகிறேன். நாளைக்கு இந்தச் சலுகை இல்லை. இன்று போனால் நாளை வராது. எனவே இன்றே தின்று களியுங்கள்; இல்லாவிட்டால் பெரிதும் வருந்துவீர்கள்!'' என்று ஆசை காட்டினான்.

அபினி அருந்தியவர் பையில் கை போட்டுத் துழாவிப் பார்த்தார். ஆனால் காசுதான் கிடைக்கவில்லை. வருத்தத்தோடு கையைப் பிசையலானார். நாக்கிலோ நீர் ஊறிற்று. பன்னீர் ஜாங்கிரி, அதுவும் காசுக்குக் கால் சேர்! காசு இல்லை. இருந்தால் அத்தனையுமே தமக்கென்று நிறுத்திருப்பார்! மிட்டாய்க்காரனுக்கு நிலவரம் விளங்கி விட்டது. ''காசுக்காகக் கவலைப்படாதீர்கள்! பின்னால் வாங்கிக் கொள்ளுகிறேன். நீங்கள் என்ன நம்பத் தகாத புள்ளியா?'' என்றான். அபினி அருந்தியவர் மகிழ்ச்சியில் மது அருந்தியவர்போலானார். இதயம் கிளுகிளுத்தது. கால் சேர் ஜாங்கிரி வாங்கிக் கொண்டார். அதோடு மனத்துள் கூறிக்கொண்டார்: 'தேடிப் பிடித்துப் பணம் தருபவன் பைத்தியக்காரன்தான். வீட்டை விட்டே வெளியே வராமல் இருந்துவிட்டால், இவன் எங்கேயென்று தேடி என்னிடம் திருவை வருவிப்பான்? பார்த்து விடுகிறேன் ஒரு கை!' கைக் குட்டையில் ஜாங்கிரிகளைக் கட்டிக் கொண்டவருக்கு ஆத்திரம் தாளவில்லை. ஆர்வம் மிகுந்து விட்டால் பொறுமைக்கு ஏது இடம்? எனவே, கைக்குட்டையைப் பிரித்து ஒரு ஜாங்கிரியை எடுத்து வாயில் போட்டுக் கொண்டார். அவ்வளவுதான்! பதறிப் போய் விட்டார். வெறி நாயைப் போலத் தண்ணீருக்காக இங்கும் அங்கும் ஓடலானார். கண்களும் மூக்கும் நீரைக் கக்கின. அரை வாயைத் திறந்து வெளிக் காற்றை உள்ளுக்கிழுத்து அதன் குளிர்ச்சியில் நாக்கின் காரத்தைக் குறைத்துக் கொள்ள முயன்றார். உணர்வு திரும்பியதும் மிட்டாய்க் கடைக்காரனுக்கு ஆயிரம் திருநாமம் கூறித் தெள்ளேணம் கொட்டினார். இக்காட்சியைக் கண்ணுற்ற மக்கள் நன்றாகச் சிரித்தனர். மகிழ்ச்சி மணக்கும் நேரங்களில், இத்தகைய தீங்கில்லாத குறும்புச் செயல்கள் பெரும்பாலும் நடைபெறுவது இயல்புதான். இக்குறும்புகளை மக்களும் மன்னிப்புக்குகந்தவையாகவே கருதுகிறார்கள். ஏனென்றால், அவை பொங்கிவரும் பானையின் கொதி கொப்புளமாகும்!

ரவு ஒன்பது மணிக்கு இசை மேடையில் கூட்டம் கூடியது. மேடை முழுதும் பல வகை வண்ணக் கொத்து விளக்குகளாலும், குத்து விளக்குகளாலும் ஜகஜ்ஜோதியாகப் பிரகாசித்தது. அவையோர் அமரும் இடங்களை வண்ண வண்ண 'குளோப்' விளக்குகள் அணி செய்தன. கைதேர்ந்த சிற்பி ஒருவன் இசை மேடைக்கு இடையிலே அந்தரத்தில் பொங்கி வரும் புனல் ஒன்றை நிர்மாணித்

இருந்தான். அதன் துவாரங்கள் வழியே வெட்டிவேர், தாழம்பூ, ரோஜா, சந்தனம் ஆகியவற்றிலிருந்து வடித்து எடுக்கப்பட்ட பனி நீர் இலேசாகச் சாரலெனத் தூறிக் கொண்டிருந்தது. இப்படித் தண்ணொளி பாய்ச்சப்படவே அரங்கம் முழுவதும் 'கம்' மென்ற நறுமணத்தோடு குளிர்பதனப்படுத் தப்பட்டது போலத் தோன்றியது. மகிழ்ச்சி தனது கூடப் பிறந்த மற்றக் கேளிக்கைப் பொருள்களுடன் மகிழ்ச்சி கொண்டாடிக் கொண்டிருந்தது.

பத்து மணி சுமாருக்கு மன்னர் ரஞ்ஜீத்சிங் விஜயம் செய்தார். அவர் உடலில் மிக மெல்லிய வழுவழுப்பான வெள்ளைநிற நீண்ட சட்டை காட்சி அளித்தது. தலையை ஒருபுறம் சாய்வான தலைப்பா அலங்கரித்திருந்தது. சில புகழ்பெற்ற புலவர்கள் இத்தருணத்துக்கேற்ப மன்னரின் புகழுக்குப் புகழ் சேர்க்கும் பாமாலைகள் பல புனைந்திருந்தனர். மன்னர் இவற்றைச் செவிமடுத்தபின் இசைக் கச்சேரிக்கு உத்தரவிட்டார். தபலாவில் விரல்கள் பேசின. பக்கவாத்தியக்காரர்கள் சுருதி சேர்த்துக் கொண்டனர். தூக்கக் கலக்கத்தில் ஆடி விழுந்த விழிகள் விழித்துக் கொண்டன. இசைக் கச்சேரி தொடங்கியது.

## 7

அரசவையில் இரவு முழுவதும் இசை மாரி பொழிந்தது. பீலூ, பார்ச், தேஷ், பிஹாக் போன்ற ராகங்களின் உள்ளத்தைத் தொடும் அலைகள் எழுந்தவண்ணம் இருந்தன. பாடகிகள் முறை முறையாகத் தங்கள் கலைத் திறனைக் காட்டினர். ஒருவர் தமது பாட்டால் உள்ளத்தைத் துளைத்தால், இன்னொருவர் தமது பரத நடையில் கொன்றார். இனிய மூர்ச்சனையைக் கேட்டு, 'பலே, பலே, பேஷ் பேஷ்' என்ற ஒலிகள் எழுந்த வண்ணம் இருந்தன. ஆனால் தூய்மையோடு இசை இன்பத்தில் இணைந்த மனங்கள் வெகு குறைவாகத் தான் அங்கே தென்பட்டன.

நான்கு மணி இருக்கும். மொமாவின் முறை வந்தது. கூடியிருந்தவர்கள் நிமிர்ந்து அமர்ந்தார்கள். ஆர்வம் மிகுந்த முனைப்பில் பலர் முன் தள்ளி அமர்ந்தனர். மயக்கத்தில் மதி கிறங்கி நின்ற விழிகளும் துறுதுறுக்குற்றுத்

---

# சாட்டைத் தேள்

மதுரைக்கு வடக்கே சுமார் பதின்மூன்று மைல்களுக்கப்பால் உள்ள அழகர் மலைக் காட்டில், "தெலிபோனஸ் காடேட்டஸ்" என்ற வகை சாட்டைத் தேள்கள் ஏராளமாகக் காணப்படுகின்றன. சாட்டைத் தேள் சுமார் இருபது முதல் நாற்பது மி.மீ. நீளத்தில் கறுப்பு கலந்த சிவப்பு நிறத்தில் காட்சியளிக்கிறது. சாட்டைத் தேளுக்கு நான்கு ஜோடி கால்கள் உள்ளன. முதல் ஜோடி கால்கள் உணர்ச்சிக் கருவிகளாகப் பின்பட்டு இயற்கைச் சூழ்நிலையில் ஏற்படும் மாறுதல்களையும், தான் வாழும் இடத்தில் உள்ள நிலத்தின் வாடையையும் அறிந்து கொள்ள உதவுகின்றன. ஆகவே, சாட்டைத் தேள் நடக்கும் போது உற்றுக் கவனிப்பின் தன் முன்னங் கால்களைத் தரையில் தொட்டுத் தொட்டு நிலத்தின் வாடை அறிந்து முன்னேறுவதை உணரலாம். சாட்டைத் தேள்கள் பெரிய கற்களுக்கடியில் உள்ள இடை வெளிப் பகுதிகளிலும், கறையான் புற்றுகளிலும், இருட்டறைகளிலும் சற்று ஈரப் பசையுள்ள இடங்களில் காணப்படுகின்றன. பகல் பொழுதில் பெரும்பாலான நேரத்தைத் தரையில் குகை போன்ற குழி அமைத்து ஓய்வெடுத்துக் கொள்ளும்.

சாட்டைத் தேள் சாதாரண தேளைப் போன்று தோற்றமளித்தாலும் சாதாரண தேளைப் போன்று விஷம் வாய்ந்ததல்ல. உடலின் பின்பகுதியில் நூலிழை போன்று காணப்படும் வால் பகுதியானது நீண்டு சாட்டை போலிருப்பினும் விஷக் கொடுக்கை தன்னுடன் கொண்டிருக்கவில்லை. சாட்டைத் தேளுக்கு நாலு ஜோடி கண்கள் இருப்பினும் இக் கண்களால் ஒரு பொருளைச் சரிவரப் பார்க்க இயலாது. மாறாக ஒளியில் ஏற்படும் மாறுதலை மாத்திரம் தான் காண இயலும்.



சாதாரணத் தேளைப் போன்று சாட்டைத் தேளுக்கு உடலின் முன் பகுதியில் இரண்டு இடுக்கி போன்ற உறுப்புகள் காணப்படுகின்றன. இதன் உதவியால் தன் இரையாகிய பூச்சிகள் அல்லது புழுக்களைப் பிடித்து நசுக்கிக் கொல்கிறது. கொன்றவுடன் அப் பிராணியின் இரத்தத்தை அல்லது உடல் சாறுகளை உறிஞ்சிக் குடித்து விடுகிறது. இவ்வாறு உறிஞ்சிக் குடிக்கும்போது மற்ற வேண்டாத் தகாத பொருள்கள் இரத்தத்தோடு வந்தால் அவற்றை வாயினுள் செல்லாதவாறு தடை செய்ய இடுக்கி போன்ற உறுப்பில் மிக நுண்ணிய முடிகள் (வடிகட்டும் உறுப்பு) இருக்கின்றன. மேலும், இம்முடிகள், உணர்ச்சிக் கருவிகளாகப் பயன்படும் முதல் ஜோடிக் கால்களை அழுக்கு படிந்து விடாதபடிக்கு அவ்வப்போது சுத்தப்படுத்தவும் உபயோகப்படுகின்றன.

சாட்டைத் தேளை நாம் துன்புறுத்தினால் உடன் நூலிழை போன்ற வாலை அங்குமிங்கும் அசைத்து வாலின் நுனிப் பகுதியிலிருந்து அமிலத் தன்மை கொண்ட ஒரு வகை கெட்ட நாற்றமுடைய நீரை வெளியே பீச்சும். இத்திரவம் நம் உடலின் மென்மையான பாகங்களில் பட்டால் மிக அரிப்புக் கொடுக்கும்.

பெண் சாட்டைத் தேள் தான் இட்ட முட்டைகளைத் தன் உடலின் அடிப் பாகத்தில் தான் சுரக்கும் ஒருவகை ஒட்டும் திறனுடைய திரவத்தால் உடம்போடு ஒட்ட வைத்து, முட்டையிலிருந்து இளம் குஞ்சுகள் வெளி வரும்வரை பாதுகாக்கிறது. முட்டையிலிருந்து வெளிவந்த இளம் குஞ்சுகள் உடன் தங்கள் தாயின் முதுகில் ஏறிக் கொண்டு தாயின் கண்காணிப்பிலேயே சில நாட்கள் இருக்கும். இக்குஞ்சுகள் சாட்டைத் தேள் போன்று உருவமைப்பு கொண்டிராது. தங்களுடைய உடலின் முதல் தோல் உரிக்கும் வரை தாயின் முதுகிலேயே தங்கியிருக்கும். தோலை உரித்தவுடன் சாட்டைத் தேளின் உருவம் அடைகின்றன. சாட்டைத் தேள் பல்முறை மேல் தோலை உரித்த பின்னர்தான் பருவ மெய்துகிறது.

- அந்தோணி பேபிய

இசைப்பைக் கிளப்ப முனைந்தன. விருந்தா மேடைக்கு வந்தாள்; தலை குனிந்து நின்றாள். அவளைக் கண்டு மக்கள் வியந்து போயினர். அவள் உடலில் பளிச்சிடும் ஆடை — அணிகள் ஏதும் இல்லை. விழிகளை வியப்பில் ஆழ்த்தும் செயற்கைச் சிங்காரமும் இல்லை. அவள் ஒரு காவி நிறப் புடவை மட்டும் அணிந்திருந்தாள். ரோஜா இதழ்களில் சாயும் சூரியனின் பொன்னிறக் கிரணங்கள் பட்டால் எப்படிப் பளிச்சிடுமோ, அப்படி அவள் ரோஜா நிற இதழ்களில் புன்னகை பளிச்சிட்டது. அவளுடைய நாணம் மிகு எழில் தூய்மை தன் இயற்கை அலங்காரம் காட்டிப் புது மெருகோடு துலங்கியது. உண்மை அழகு வெளிப் பகட்டுக்காக ஏங்கி நிற்பதில்லை. இயற்கை எழில் உள்ளத்தைத் தொட்டுக் கிளுகிளுக்கச் செய்வது போல் செயற்கை அழகினால் முடிவதில்லை. என்ன தவமிருந்தாலும் இயற்கையின் பெருமை செயற்கைக்கு வராது; வரவே வராது.

'ஒரு நாளைப்போல் ஒரு நாள் இருப்பதில்லை.'

இப் பொருள் தரும் பாடலை மக்கள் இதற்கு முன்பும் எத்தனையோ முறைகள் கேட்டிருந்தார்கள். ஆனால் இன்று உள்ளத்தைத் தொட்டது போல அது மற்ற நாட்களில் தொட்டதில்லை. ஒரு நாளைப்போல் ஒரு நாள் இருப்பதில்லை. இவ்வுலக வழக்கு எல்லோருக்கும் தெரிந்ததுதான். அன்றாட வாழ்க்கையில் அடிபட்டது தான். ஆனால் இன்று அதன் ஆழ்ந்த பொருள் விளங்கியது. ஒரு செல்வந்தருக்கு அந்தக் காலத்து நினைவு வந்தது. அன்று அவர் ஒரு முடி சூடிய சுதந்திர மன்னராக இருந்தார். இன்று....? இன்னொருவருக்கு அடிபணியும் நிலையை அடைந்துவிட்டார். ஒருவருக்குத் தமது பிள்ளைப் பிராயத்தின் இன்பக் கேளிக்கைகள் நினைவு வந்தன. என்றால் இன்னொருவருக்குத் தம் இளமை வாழ்வின் நினைவு வந்தது. ஒருத்தியில் உள்ளத்தைக் கொள்ளை கொள்ள அவர் என்னவெல்லாம் எப்படியெல்லாம் கனவு கண்டு கொண்டிருந்தார்! ஆனால் வருத்தம் தரும் விஷயம் என்னவென்றால், அவர் கனவு கனவாகவே இருந்துவிட்டது. அந்தக் கனவை எண்ணிப் பார்த்தால் இன்று அவருக்கு உள்ளம் கசந்தது.



விருந்தாவும் கடந்த காலத்தை எண்ணிப் பார்க்கலானாள். ஒரு காலத்தில் அவள் வீட்டு வாசலில் கபோதத்தில் திளைக்கும் சோம்பேறிகளும் பாடகர்களும் கூட்டம் கூட்டமாகக் கூடி நின்றது உண்டு. அதைக் கண்டு விருந்தாவின் மனத்தில் அகந்தையில் ஊறிய மகிழ்ச்சி களிநடம் புரிந்தது உண்டு. ஆனால் இன்று...? அதற்கு மேல் விருந்தாவினால் எதுவுமே யோசிக்க முடியவில்லை!.... இரண்டு நிலைகளையும் ஒப்பிட்டுப் பார்த்தால் உள்ளத்தைத் துளைப்பதாக, ஏமாற்றம் தருவதாகத் தோன்றியது. அவள் குரல் இந்த எண்ணத்தில் கனத்தது. உள்ளப் புழுக்கம் தொண்டையை அடைத்தது. சட்டெனக் குரல் உட்கார்ந்து விட்டது.

மன்னர் ரண்ஜீத் சிங் சியாமாவின் இசை உணர்வையும் பாடும் முறையையும் உன்னிப்பாகக் கவனித்து வந்தார். அவருடைய கூரிய பார்வை அவளுடைய உள்ளத்தில் புகுந்து புறப்பட முனைந்தது. இவ்வளவு சிறந்த பாடகியின் வாயிலிருந்து இன்று புகழத்தக்க வகையில் மெச்சத் தகுந்த முறையில் பாட்டு வரவில்லையே என்று மக்கள் வியந்து நோக்கினர். அவர்களுக்கு மகிழ்வும் தோன்றவில்லை; வருத்தவும் தோன்றவில்லை. யோசனையில் ஆழ்ந்து போயினர். அவளுடைய உருவம், இவள் ஒரு நாளும் உணர்ச்சிக்கு அடிமை ஆகாதவள் என்பதை எடுத்துக் கூறிக் கொண்டிருந்தது. இச்சமயம் பார்த்து மன்னர் திடீரென்றுகூறினார்: "சியாமா! வருகிற வியாழக்கிழமையன்று மீண்டும் நான் உன் பாட்டைக் கேட்க விரும்புகிறேன்!"

## 8

விருந்தா போன பின் அவளுடைய பச்சிளங் குழந்தை ராஜா விழித்தெழுந்தான். கண்களைக் கசக்கிக்கொண்டே பிரேம் சிங்கைப் பார்த்துக் கேட்டான், "அம்மா எங்கே?" என்று!

பிரேம் சிங் அவனை மடியில் தூக்கி வைத்துக் கொண்டு, "மிட்டாய் வாங்கப் போயிருக்கிறாள்! இந்தா வந்துவிடுவாள்!" என்றான்.

ராஜாவுக்கு அதைக் கேட்க மகிழ்ச்சி. வெளியே சென்று மற்றக் குழந்தைகளுடன் விளையாடலானான். ஆனால் மீண்டும் சிறிது நேரத்துக் கெல்லாம் திரும்பி வந்து, "அம்மா! மிட்டாய்!" என்றான். பிரேம் சிங் மிட்டாய் வாங்கி வந்து தந்தான். ஆனால் ராஜா அழுதுகொண்டே, "அம்மா! மிட்டாய்! அம்மா, மிட்டாய்!" என்று அடம் பிடிக்கலானான். அம்மா தரும் மிட்டாய் இதைக் காட்டிலும்

இனிமையாக இருக்கும் என்று ஒரு வேளை எண்ணினுளே என்னவோ?

கடைசியில் பிரேம் சிங் அவனைத் தோளில் தூக்கிக் கொண்டு வயற்புறம் சென்ருன்; நடுப் பகல் நேரம் வரை வயல்களில் அவனேடு சுற்றினுன். ராஜா சிறிது நேரம் பேசாமல் இருப்பான். இடையே திடுதிப்பென்று, "அம்மா, எங்கே?" என்னும் கேள்வியைத் தொடுப்பான்.

பிராயம் முதிர்ந்த போர்வீரன்தான் என்ருலும் இந்தக் கேள்விக் கணைக்குப் பாவம், அவன் என்ன விடை தருவான்? அவன் குழந்தையை விட்டு ஒரு நிமிடம்கூட இந்தண்டை — அந்தண்டை போகாமல் பேச்சுக் காட்டிக் கொண்டே இருந்தான். அம்மா எங்கே என்று அவன் மீண்டும் கேட்டுவிடக் கூடாதே என்ற பயம் அவனை அச்சுறுத்திக் கொண்டே இருந்தது. சிறுவர்களின் ஞாபக சக்தி பலவீனமானது என்று கூறுவது உண்டு. ஆனுல் ராஜா எத்தனை நாள் துடித்துத் தவித்து விட்டான்! அம்மாவின் நினைவு இலேசில் அகன்றதா? சிறுகச் சிறுகத்தான் அம்மா நினைவு அவன் மனத்திலிருந்து நீங்கியது.



இப்படியே மூன்று மாதங்கள் ஓடிவிட்டன. ஒரு நாள் மாலை நேரத்தில் ராஜா வீட்டு வாசலில் விளையாடிக் கொண்டிருந்தான். விருந்தா வீடு நோக்கி வருவதைக் கண்டான். ராஜா அவளை உற்றுப் பார்த்தான்; சிறிது தயங்கினுன். அப்புறம் ஓடிப் போய் அவளுடைய கால்களைக் கட்டிக் கொண்டான். "அம்மா வந்து விட்டாள்! அம்மா வந்து விட்டாள்!" என்று உரக்கக் கூவினுன்.

விருந்தாவின் விழிகளில் நீர் ஊற்றெடுத்து ஆருகப் பெருகியது. அவள் ராஜாவை இடுப்பில் தூக்கிக் கொண்டாள். அன்புறத் தழுவிக் கொண்டு, "குழந்தாய், நான் இன்னும் வரவில்லை. பிறகு எப்பொழுதாவதுதான் வருவேன்!" என்ருள்.

ராஜாவுக்கு இதன் பொருள் விளங்கவில்லை. ஆனுல் அவள் கைகளைப் பற்றி இழுத்துக் கொண்டு வீட்டின் பக்கம் சென்ருன். குழந்தைப் பாசம் விருந்தாவை வீட்டு வாசல் வரை இட்டுச் சென்றது; ஆனுல் நிலைப்படியைத் தாண்ட விடவில்லை. ராஜா எத்தனையோ இழுத்துப் பார்த்தான். ஆனுல் அவள் முன்னேறவில்லை; அசைந்து கொடுக்காமல் நின்ருள். அப்பொழுது ராஜாவின் பெரிய கரிய விழிகள் நீர்த் திரையிட்டு நின்றன. அவன் உதடுகள் பிரிந்தன. பிழியப் பிழிய அழத் தொடங்கி விட்டான்.

பிரேம் சிங் அவன் அழுகுரலைக் கேட்டு விட்டு வெளியே வந்தான். விருந்தா நின்று கொண்டிருப்பதைக் கண்டான். துணுக்குற்று, "விருந்தாவா?" என்ருன். ஆனுல் விருந்தாவினுல் வாய்திறந்து ஏதும் பதில் கூற முடியவில்லை.

பிரேம் சிங் மீண்டும், "வெளியே ஏன் நின்று கொண்டிருக்கிருய்? வா, உள்ளே! இத்தனை நாட்களும் எங்கே இருந்தாய்?" என்று கேட்டான்.

விருந்தா கண்களைத் துடைத்துக் கொண்டு, "நான் உள்ளே வர முடியாது!" என்ருள்.

"வா, வா! இந்தக் கிழட்டுத் தந்தையின் வார்த்தைகளைத் தவருக எடுத்துக் கொள்ளாதே!" என்று கெஞ்சாக் குறையாக வேண்டினுன் பிரேம் சிங்.

"வேண்டாம், தாத்தா! நான் உள்ளே அடி எடுத்து வைக்க முடியாது!" என்ருள் விருந்தா தீர்மானமாக.

"ஏன்?"

"பிறிதொரு சமயம் கூறுவேன். இப்பொழுது நான் உங்களிடமிருந்து அந்த வாளைப் பெற்றுப் போக வந்திருக்கிறேன்!" என்ருள் விருந்தா.

பிரேம் சிங் வியந்து விதிர் விதிர்த்துப் போனுன். "அதை வாங்கிப் போய் என்ன செய்வாய்?" என்று கேட்டான்.

"தங்களை அவமதித்தவர்களைப் பழி வாங்குவேன்!" என்ருள் விருந்தா.

"என்னை அவமதித்தவர்களை என்ருல் யாரை?"

"ரஞ்ஜீத் சிங்கை!"

பிரேம் சிங் அப்படியே தரையில் உட்கார்ந்து விட்டான். விருந்தாவின் சொற்களைப் பற்றிச் சிந்திக்கலானுன். பிறகு, "விருந்தா! உனக்கு இதற்குச் சந்தர்ப்பம் எப்படிக் கிடைக்கும்?" என்று கேட்டான்.

"ஆடிக் காற்றில் சிற்றெறும்பும் சில சமயம் வானத்தில் பறப்பதுண்டே!"

"ஆனுல் ஆடு சிங்கத்தோடு எப்படிப் பொருத முடியும்?"

"இந்த வாளின் உதவி கொண்டு!"

"இந்த வாள் ஒளிவு மறைவாக யாருடைய இரத்தத்தையும் குடித்ததில்லை!"

"தெரியும், தாத்தா! இது விக்கிரமாதித்த மன்னரின் வாள்! இது எப்பொழுதும் துயருற்ரேர்களின் தோழனுக இருந்திருக்கிறது!" விருந்தா விடை பகர்ந்தாள்.

பிரேம் சிங் பேசாமல் வாளை எடுத்து வந்து விருந்தாவின் கையில் வைத்தான். விருந்தா அதை இடுப்பில் ஒளித்துக் கொண்டு, எந்தப் புறமாக வந்தாளோ அந்தப்புறமாகவே சென்று விட்டாள்.

கதிரவன் மலை வாயில் விழுந்து விட்டான். மேற்கு வானத்தில் கொஞ்சம் கொஞ்சம் ஒளி எஞ்சியிருந்தது. பசு எருமை போன்ற மிருகங்கள் தங்கள் கன்றுக்குட்டிகளைக் காண ஆவலோடு மேய்ச்சல் திடலிலிருந்து ஓடி வந்தன. வரும் பொழுதே மகிழ்ச்சிக் குரல் எடுத்துக் கூவவும் செய்தன. ஆனுல் விருந்தா....? தன் குழந்தையைக் கதறக் கதற அழ விட்டுவிட்டு மாலைமயக்கும் இருளில் அச்சந்தரும் காட்டை நோக்கி நடக்கலானுள்

## 9

வியாழக்கிழமை. இரவு மணி ஒன்பது அடித்து விட்டது. மன்னர் ரஞ்ஜீத் சிங்

தமது இன்ப மாளிகையில் வீற்றிருந்தார். ஏழு இழைக் கொத்து விளக்கு ஒன்றும் மட்டும் எரிந்து கொண்டிருந்தது. மன்னருக்கு எதிரே விருந்தா ஒரு காவி நிறப் புடவை அணிந்து அமர்ந்திருந்தாள். அவள் கையில் ஒரு வீணை இருந்தது. அதில்தான் அவள் உள்ளத்தை ஈர்க்கும் ஒரு பாடலை வாசித்துக் கொண்டிருந்தாள், வெகு அற்புதமாக.

பாட்டு முடிந்ததும் மன்னர் அவளைப் பார்த்து, "சியாமா! உன் பாடலைக் கேட்டு நான் பெரிதும் மகிழ்கிறேன்! என்ன பரிசு தர உனக்கு?" என்று கேட்டார்.

சியாமா ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவளாகத் தலை குனிந்தவாறு, "மன்னரின் அதிகாரத்துக்குள் எதுவுமே இருக்கிறது" என்றாள்.

"ஜாகீர், நிலப் பரிசு தரவா?"

"தங்கள் பெயருக்குப் பெருமை சேர்க்கும் பரிசாகத் தாருங்கள்!" என்றாள் சியாமா.

மன்னர் விருந்தாவைக் கவனமாக உற்றுப் பார்த்தார். அவளுடைய எளிமையான உருவம், அவள் பொன்னையும் மண்ணையும் பெரிதாக நினைப்பவள் அல்ல என்று எடுத்துக் கூறிக் கொண்டிருந்தது. அவளுடைய பார்வையின் தூய்மையும், ஒழுக்கத்தின் உறுதியும் அவள் எழிலை விலை கூறுபவள் அல்ல என்பதைப் பறைசாற்றிக் கொண்டிருந்தன. அவளையே வைத்த கண் வாங்காமல் பார்த்தவாறு, "கோஹினூர் தரவா?" என்று கேட்டார் ரன்ஜீத் சிங்.

"அது மன்னரின் கிரீடத்துக்கு அணியாக இருப்பதுதான் அழகு!" என்றாள் சியாமா.

மன்னர் வியப்புடன், "அப்படியானால் நீயே கேள், உனக்கு வேண்டியதை!" என்றார்.

"கேட்பது கிடைக்குமா?"

"கட்டாயம்!"

"அப்படியானால் இழைக்கப்பட்ட அநீதிக்கு நான் பழி வாங்க விரும்புகிறேன்! அந்த உரிமை எனக்கு அளிக்கப்படுமா?" என்று கேட்டாள் சியாமா.

மன்னர் ரன்ஜீத் சிங்குக்குத் தூக்கி வாரிப் போட்டது. விருந்தாவை மீண்டும் ஒருமுறை கூர்ந்து கவனித்தார். அவர் மனத்திலே யோசனை படர்ந்தது. 'இதற்கு என்ன பொருள்? நியாயம் என்பது இரத்த தாகம் கொண்டதாக இருக்க முடியாதே! இந்தப் பெண் யாரோ கொடுமையே உருவான அரசனாலோ, அரசனைப் போன்று பெருந் தனம் படைத்தவனாலோ

## "ஹலோ! மாங்காய் பச்சடி எப்படிச் செய்வது?"



வாஷிங்டனில் உள்ள 'காங்கிரஸ் லைப்ரரி'தான், உலகத்திலேயே மிகப் பெரிய லைப்ரரியாகக் கருதப்படுகிறது. இந்த லைப்ரரியை இரண்டு மணி நேரம் சுற்றிப் பார்த்தோம். 'நூலக இயல்' என்றால் அதை இங்கு தான் காண முடிகிறது. அவ்வளவு அழகாக, ஒழுங்காக நூல்களைப் பொருள் வாரியாக வைத்திருக்கிறார்கள். இங்கு கோடிக் கணக்கான நூல்கள் இருக்கின்றன. எந்த நூலும் இல்லை என்று சொல்லாத அளவில் இங்கு எல்லாவிதமான நூல்களும் சேகரித்து வைக்கப்பட்டுள்ளன.

நூலகங்களில் பெரும்பாலும் பெண்களே பணியாற்றுகின்றனர். அவர்கள் நூலகத் துறையில் தேர்ச்சி பெற்றவர்கள். எந்த நூல் எங்கு இருக்கிறது, யார் எழுதியது என்பதெல்லாம் அவர்களுக்கு மனப்பாடம்.

அமெரிக்காவில் உள்ள நூலகங்களில் வாசகர்களுக்காக எல்லா விதமான வசதிகளும் செய்திருக்கிறார்கள். மாங்காய்ப் பச்சடி செய்ய வேண்டும் என்றால் நாம் இங்கே ஒரு நூலகத்துக்கு டெலிபோன் செய்து 'மாங்காய்ப் பச்சடி எப்படிச் செய்வது?' என்று கேட்க முடியுமா? ஆனால் அமெரிக்காவில் நூலகர் (பெண்மணி) பதார்த்தங்கள் செய்யும் விதத்தை டெலிபோனில் விளக்கமாகக் கூறி உதவுகிறார். இப்படித்தான் ஒரு பெண்மணி ஆப்பிளைக் கொண்டு ஏதோ பட்சணம் செய்ய நூலகத்துக்கு டெலிபோன் செய்தாள். உடனே அவளுக்கு அதை எப்படிச் செய்வது என்று 'சமையல் குறிப்பு' சொல்லப்பட்டது.

தகவல்: கிரிஜா.

சொன்னவர்: பள்ளிக் கல்வி இயக்குநர் திரு சிட்டிபாபு.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

துன்புறுத்தப்பட்டிருக்க வேண்டும். இவளுடைய கணவனே ஏதாவது ஒரு பகுதியின் அரசனாக இருந்தாலும் வியப்பதற்கில்லை. அப்படித்தான் இருக்க வேண்டும். அவனை யாராவது குரூரமாகக் கொன்று போட்டிருக்க வேண்டும். நியாயம் இரத்தவெறி பிடித்ததாக ஆகிறது என்றால், அதற்கு இத்தகைய ஏதாவது ஒரு நிலைதான் காரணமாக இருக்க வேண்டும். இம்மாதிரி நிலைமையில் தான் நியாயம் இரத்த வெறி பிடித்த மிருகமாக உருமாறுகிறது. அவள் கேட்பதைத் தருவதாக நான் வாக்கு அளித்துவிட்டேன். அவள் விலையுயர்ந்த பொருள் ஒன்றைக் கேட்டிருக்கிறாள்! அநீதிக்குப் பழி! அதாவது நெறி தவறியவனைக் கொல்லும் உரிமை! அதை அவளுக்கு வழங்கிவிட வேண்டியதுதான்! ஆனால் யாரைப் பழி வாங்க விரும்புகிறாள் இவள்?"

மன்னரின் யோசனை மீண்டும் தடம் புரண்டது. முன் யோசனைகளுக்கு மாறுகச் சிந்தனையைத் திருப்பினார். 'இவள் யாருக்குக் கொலைத் தண்டனை தர விரும்புகிறாள்? இந்த எண்ணம் என் மனத்தில் எழவே கூடாது. நியாயம் எவருடைய இரத்தத்தைக் கேட்கிறதோ, அவருடைய இரத்தத்தை நான் தர வேண்டும். நியாய

# நிறைவான கருத்தடைச் சாதனத்தைத் தேடி அறவே இனி அலைய வேண்டியதில்லை.




கருத்தடை முறைகள் பல: விடாய் கணக்கு முறை, வெளி இழுப்பு, பாதுகாப்பு முறை, கழுவல் முதலியன. உங்களுக்கென்று நீங்கள் ஒன்றைத் தேர்ந்தெடுத்திருக்கக்கூடும். ஆனாலும், நீங்கள் இப்புதிய கருத்தடைச் சாதனத்தை உபயோகித்துப் பாருங்களேன். அதுதான் டெல்ஃபென்

கருத்தடைச் சாதன வரலாறு காணாத வகையில் மிகச் சக்தி வாய்ந்த உயிரணுக்களைக் கொல்லும் மருந்துகளடங்கிய கருப்பை வழிக் க்ரீம் டெல்ஃபென். அது பாதுகாப்பானது, மென்மையானது. உலகெங்கிலுமுள்ள நாகரிக இல்லத்தரசிகள் டெல்ஃபென் உபயோகிக்கத் தொடங்கி வருகின்றனர். பயன்மிக்க, வசதியான இதை ஒரு முறை உபயோகித்துப் பார்த்தால், நீங்களும் கூட இதையே நாடுவீர்கள். அதற்கான காரணங்கள் இதோ:

- டெல்ஃபென் விரைவிலே உபயோகிக்க எளிதானது.
- உணர்ச்சிவேகத்துக்கு ஊறுசெய்யாது.
- பாதுகாப்பானது.
- மென்மையானது, எரிச்சல் தராது.
- சுத்தமானது, எண்ணெய்ப்பசையற்றது கணவன்-மனைவி இருவருக்குமே இன்பமானது.
- தேவையானபோது மட்டுமே உபயோகிக்கப்படுவது.
- மிகவும் சிக்கனமானது. ஒருதடவை உபயோகிப்பதற்கான செலவு 15 காசு தான்.
- சுவடின்றி மறைந்து விடுகிறது
- உலகெங்கும் டாக்டர்களால் சிபாரிசு செய்யப்படுகிறது.

நீங்களும் உங்கள் குடும்ப டாக்டரை விசாரிக்கலாம். இப்போது நீங்கள் உபயோகித்து வரும் கருத்தடைச் சாதனத்துடன் டெல்ஃபெனை ஒத்திட்டுப் பாருங்கள். டெல்ஃபென் அளிக்கும் நலன்கள் யாவையும் சிந்தித்துப் பாருங்கள்...

நிறைவான கருத்தடைச் சாதனத்தைத் தேடி அறவே இனி அலைய வேண்டியதில்லை என்று இப்போது ஒப்புக் கொள்கிறீர்களா?

50கி, 100கி, டியூபுகள் மற்றும் கையடக்கமான பிளாஸ்டிக் பைகளில் டெல்ஃபென் இப்போது கிடைக்கிறது. புதிய 2.5கி. அப்ளிகேடர் மூலம் டெல்ஃபெனை உபயோகித்து மேலும் சிக்கனம் செய்யுங்கள்.

விளக்கப்படங்களுடன் கூடிய இலவச கைப்புத்தகத்திற்கு எழுதுக:

**டிபார்ட்மென்ட்எஸ், எத்னுர் லிட்., 30ஏ, ஃபோர்ஜெட் ஸ்ட்ரீட், பம்பாய்-26.**

நம்பிக்கையின் மறு பெயர்

# டெல்ஃபென் க்ரீம்

பதிவு பெற்ற டிரேடு மார்க். JAISONS-186

உணர்வுக்கு எதிரே எல்லாருடைய இரத்தமும் ஒன்றுதான். ஆனால் நியாயம் இரத்தம் பெற உரிமை உள்ளதுதானா, கொலைத் தண்டனை அளிக்கத் தகுதி யானதுதானா இதை யார் தீர்மானிப்பது? பகைமை உணர்வும் வெறி நோயும் கொண்ட மனிதனின் கையில் இதனைத் தீர்மானிக்கும் உரிமை இருக்கக் கூடாது. இந்தப் பகைமை உணர்வு ஏற்பட எது காரணமாக இருக்க முடியும்? உலகத்தில் கேலியும் குத்தலும் போன்று கேடு விளைவிக்கும் பொருள் வேறு எதுவுமே கிடையாது. '....ஆறுதே நாவினால் சுட்ட வடு!' என்று தெரியாமல் சொல்லவில்லை மக்கள். உள்ளத்தைச் சுட்டுத் துளைத்துப் புண்ணாக்கும் கேலிச் சொல்தான் மனிதனின் மனத்தில் இரத்த வெறியை உண்டாக்கும். உள்ளத்தையுருக்கும் இந்தக்கேலித் தீ, அதன் மீது இரத்தத் திவலைகளைத் தெளிக்காதவரை அடங்குவதில்லை; ஆறுவதில்லை. நான் வாக்கு கொடுத்து விட்டேன். தவறு; மிகத் தவறு. முழு விவரமும் அறியாமல் மரண தண்டனை அளிக்கும் காரியத்தைச் செய்ய எனக்குஉரிமை கிடையாது. ஆனால்... முன்பின் யோசியாமல் வாக்கு அளித்துவிட்டேன். வாக்கு அளித்த பின் பிறழக் கூடாது.... வாக்கைக் காக்க நீதியையும் நேர்மையையும் பலி இடுவதா? என்ன தர்மசங்கடம்?' இவ்வெண்ணங்கள் மன்னரை வெகு நேரம் வரை சிந்தனைக் கடலில் ஆழ்த்தித் திக்குமுக்காட, மூச்சு முட்ட வைத்து விட்டன. கடைசியில் அவர், "சியாமா! நீ யார்?" என்னும் கேள்வியை வெகு யோசனைக்குப் பின் உதிர்த்தார்.

"ஒரு இராணியற்ற, நாதியற்ற பெண்!" என்றாள் விருந்தா.

"உன் வீடு எங்கே இருக்கிறது?"

"மாதுந் நகரில்!"

ரஞ்ஜித் சிங் மீண்டும் விருந்தாவை உன்னிப்பாகக் கவனித்தார். பல மாதங்களுக்கு முன் ஓர் இரவில், மாதுந் நகரில் சூதுவாது அறியாத ஒரு பெண்ணின் உருவம் மனத்திரையில் பதிந்ததே, அதன் சாயலை இப் பெண்ணிடமும் கண்டார். ஆம், அப்பொழுது பார்வை இப்படி அச்சம் தவிர்த்ததாகத் தோன்றவில்லை. அப்பொழுது விழிகளில் வெட்கம் ஒளி வீசியது; நாணம் குமிழி யிட்டது. இப்பொழுதோ குறும்பு தாண்டவமாடியது. அப்பொழுது நன்முத்தாகத் தெரிந்தது. இப்பொழுது போலி முத்தாக, பொய் முத்தாகத் தோன்றியது.

"சியாமா! நியாயம் யாரைப் பழி வாங்க விரும்புகிறது?" என்று கேட்டார் மன்னர்.

"தாங்கள் யாரைக் குற்றவாளி என்று தீர்மானிக்கிறீர்களோ, அவர்களை! மன்னர் மாதுந் நகரின் மைதானத்தில் ஒரு நாள் இரவு தண்டு இறங்கியிருந்த காலத்தில், அன்றிரவு தங்கள் படை வீரர்கள் என்னைப் பலவந்தமாகத் தங்கள் கூடாரத்துக்கு இழுத்துச் சென்றார்கள். என்னை வீடு திரும்ப அருகதையற்றவளாகச் செய்து விட்டார்கள். நான் அவர்களுடைய தீய நோக்குக்கு இரையாகும் படி ஆயிற்று. அவர்களுடைய நாணமற்ற நாவும், வெட்கங்கெட்ட சமிக்ஞைகளும் என் மானத்தை மண்ணோடு மண்ணாக்கின. தாங்கள் அப்பொழுது அங்குதான் இருந்தீர்கள்; தங்கள் ஆட்சிக்கு உட்பட்ட ஓர் அநாதைக் குடிமகள் கொடுமைக்கு உட்படுத்தப்பட்டாள். இதற்கு யார் பொறுப்பாளி? யார் குற்றவாளி? நியாயம் யாருடைய இரத்தத்தைக் கோருகிறது? இதையெல்லாம் தாங்கள்தான் தீர்மானிக்க வேண்டும்!" என்றாள் விருந்தா.

ரஞ்ஜித் சிங் தரையில் முகம் புதைத்தவாறு எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்தார். விருந்தா சற்று மூச்சு விட்டு மீண்டும் சொல்லலுற்றாள்: "நான் ஒரு கைம்பெண். என் மரியாதையைக் காக்க வேண்டியவர், என் மானத்தைப் போற்றவேண்டியவர் தாங்கள். கணவனைப் பிரிந்தபின் மூன்றரை ஆண்டுகள் நான் தவமகளாக வாழ்க்கையை ஓட்டி வந்தேன். ஆனால் தங்கள் ஆட்கள் என் தவத்தை மண்ணாக்கி விட்டார்கள். நான் என் வீடு திரும்பிச் செல்லும் யோக்கியதையை, தகுதியை இழந்து விட்டேன். என் குழந்தைக்கு என் மடியில் இடம் கிடையாது. என் கிழட்டுத் தந்தைக்கு எதிரே தலை நிமிர்ந்து நிற்கும் ஆற்றல் எனக்கு இல்லை. நான் இப்பொழுது என் கிராமத்துப் பெண்களை ஏறெடுத்துப் பார்க்கும் ஆற்றலையும் இழந்து விட்டேன். என் மானம் சூறையாடப்பட்டு விட்டது. பெண்ணுக்கு மானம் என்பது எத்தனை விலை மதிக்க முடியாத பொருள்? இது யாருக்குத் தெரியாது? சொல்லித் தெரிய வேண்டிய விஷயமா இது? ஒரு பெண்ணின் மானத்துக்காகப் பெருமை மிகு இலங்காபுரி ராஜ்யமே அழிந்தது. ஒரு பெண்ணின் மானத்தைக் காக்கக் கௌரவ வம்சம் பூண்டு அற்றதாகச் செய்யப்பட்டது. பெண்ணின் மானத்தைக் காப்பதற்காக எப்பொழுதுமே இரத்த ஆறுகள் பெருகியிருக்கின்றன. இராஜ்யங்கள் மண்ணோடு மண்ணாகி யிருக்கின்றன. என் மானத்தைக் குழி தோண்டிப் புதைத்தவர்கள் தங்களுடைய ஆட்கள். நானோ தங்களுடைய குடி-படை. இதற்கு யார் பொறுப்பாளி? நியாயம்

---

## முதல் உதவி

குடம் ஓட்டையாகி விட்டது. ஓட்டையை அடைக்க வசதியில்லை. ஈயம் பூசுபவரைத் தேடிப் போக நேரமில்லை. எப்படிச் சமாளிப்பது?



பலாப் பிசின் வைத்து அடைப்பது, தேன் மெழுகை வைத்து அடைப்பது இதெல்லாம் ஒரு முறை. பலாப் பிசினும், தேன் மெழுகும் எங்கும் எப்போதும் கிடைக்குமா?

பின் என்ன செய்வது? சாம்பிராணி கிடைக்காத கிராமம் இந்த நாட்டில் இராது. சாம்பிராணியைப் பொடித்துக் குடத்து ஓட்டைக்குச் சரியாகத் தூவி, தணலை அதன் அருகில் கொண்டு செல்ல அது உருகி ஓட்டை அடைபட்டுவிடும்.

இப்படி அடைப்பதால் ஒரு சௌகரியம். பல நாட்கள் தாங்கும். பலாப் பிசினோ தேன் மெழுகோ போல் வெந்நீரை எடுத்தால் உருகி ஓடிவிடாது.

அனுபவம்: "தேஜ்"

---

## கண்கட்டு வித்தை!

அறையின் மத்தியில் உங்கள் நண்பரின் கண்களைக் கட்டிவிட்டு உட்கார்த்தி வையுங்கள். தலையை எந்தப் பக்கமும் திருப்பாமல் அமரும்படி சொல்லிவிட்டு அவரது கண்களின் பார்வை செல்லும் கற்பனை நேர்க்கோட்டில் (அவரது எதிரில்) சற்றுத் தொலைவுக்குச் சென்று இரண்டு காசுகளைத் தட்டி ஒலி எழுப்புங்கள். பிறகு அந்த இடத்தை விட்டு நகர்ந்து சற்று முன் சத்தம் செய்யப்பட்ட இடத்தை ஊகிக்கும்படி சொல்லுங்கள். கட்டாயம் தவறான இடத்தையே சொல்வார். ஏன் தெரியுமா? இரு காதுகளுக்கும் சமமான தூரத்திலிருந்துவரும் ஒலியைக் கண்கள் பார்க்காதவரை காதுகளால் மட்டும் ஊகிக்க முடியாது.



"தமிழ்"

யாருடைய இரத்தத்தைக் கோரும்? இதைத் தாங்களே முடிவு செய்யுங்கள்!"

விருந்தாவின் முகம் ஒரேயடியாகச் சிவந்தது.

மன்னர் ரன்ஜீத் சிங் ஒரு கிராமத்துப் பெண்ணின் இந்தத் துணிச்சலை, இந்த உயரிய சீரிய எண்ணத்தை, உணர்ச்சி மிகுந்த சொல்லாற்றலைக் கண்டு அயர்ந்து விட்டார். 'கண்ணாடிச் சில்லு உடைந்த போனால் கூரிய கத்தியாகிவிடுகிறதே, அதே நிலைதான் மனிதனின் உடைந்து ஒடிந்த உள்ளமும் அடையும் போலும்! — இப்படி எண்ணிய மன்னர் கடைசியில் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டார். மிகவும் துயரம் தோய்ந்த குரலில், "சியாமா! நீதி யாருடைய இரத்தத்தை விரும்புகிறதோ, அது நான்தான்!" என்றார்.

இதனைக் கூறியதும் ரன்ஜீத் சிங்கின் முகம் திக்கென்று ஒளிர்ந்தது. காலோடு தலை உணர்ச்சி வெள்ளம் கொப்புளித்துக் கரை புரண்டது. இருக்கையில் இருப்புக் கொள்ளாமல் எழுந்து நின்று விட்டார். உடல் வெடவெடவென்று நடுங்க, உள்ளம் பறபறவென்று பரக்க, உரத்த குரலில் கூறினார்: "சியாமா! நீதி யாருடைய இரத்தத்தைத் தேடுகிறதோ, அது நான்தான். உனக்கு இழைக்கப்பட்ட கொடுமைக்கு நான்தான் முழுப் பொறுப்பாளி. ஆன்றோர்கள் இதுபற்றி வரையறுத்திருக்கிறார்கள். தன் குடி படைகளுக்குக் கொடுமை இழைக்கப்படுமானால், பலாத்காரத் தீமைகள் புரியப்படுமானால், அது யார் செய்தாலும் ஆண்டவனுக்கெதிரே அதற்குப் பொறுப்பாளி நாட்டை ஆளும் அரசன்தான் என்று கூறியிருக்கிறார்கள்."

இதைக் கூறியதும் அரசர் தமது அங்கியின் பொத்தான்களை அவிழ்த்து விட்டார். விருந்தாவின் எதிரில் மண்டியிட்டு மார்பு தெரிய அமர்ந்தார்: "சியாமா! உன் உடையில் அதோ வாள் ஒளிந்திருக்கிறது. அது விக்கிரமாதித்தரின் வாள். அது எத்தனையோ இக்கட்டான தருணங்களில் நியாயம் வழங்கியிருக்கிறது. இன்று ஓர் அதிர்ஷ்டம் கெட்ட மன்னனின் குருதியை வழங்கி அதன் வறட்சியைத் தணிப்பாயாக. எந்த நாட்டில் ஆதரவற்ற மக்களின் மீது அநீதியும் கொடுமையும் இழைக்கப்படுகின்றனவோ, அந்த நாட்டின் மன்னன் உண்மையிலேயே அதிர்ஷ்டக்கட்டை; ஆளத் தகுதியற்றவன். அவன் இருப்பதும் இறப்பதும் ஒன்றே!" என்றார்.

விருந்தாவின் மனத்தில் இப்பொழுது மாபெரும் மாறுதல் ஒன்று நிகழ்ந்தது. பழி வாங்கும் வெறி அன்புக்கும் ஆதரவு மிகுந்த மரியாதைக்கும் அங்கே இடம் அளித்துவிட்டு மறைய முயன்றது. ரன்ஜீத் சிங் தமது பொறுப்பையுணர்ந்து தவறை ஒப்புக்கொண்டு விட்டார். அதோடு அவள் எதிரே ஒரு குற்றவாளியாக, வாள் வழங்கும் நியாயத்தை ஏற்கச் சித்தமாக நின்று கொண்டிருந்தார். இப்பொழுது மன்னரின் உயிர் அவள் கையில் இருந்தது. அவரைக் கொல்வதோ, காப்பதோ அவள் கையில் இருந்தது.

விருந்தா மனத்தை அடக்கி இடையிலிருந்து உடை வாளை உருவினாள். அது வரை துணிந்தவளால் அதற்கு மேலும் துணிய முடியவில்லை. ஆம், அவளால் அவரைக் குத்த முடியவில்லை. அதற்குள்ளாகக் கை நடுக்கத்தில் நிலைகுலைந்து குத்துவாள் கீழே விழுந்து தரையை முத்தமிட்டது.

பெண்ணின் துணிவு அவளைக் கைவிட்டு விட்டது; மோசம் செய்து விட்டது என்பதை மன்னர் ரன்ஜீத் சிங் உணர்ந்தார். அவர் வேகமாகப் பாய்ந்து வாளைத் தம் கையில் எடுத்துக் கொண்டார். திடீரென்று அவருடைய வலது கை உயர்ந்தது. "வாஹ் குரு கீ ஜய்!" என்று ஒரு முறை உரக்கக் கூவினார். அடுத்த நிமிஷம் — வாள் மார்பைத் தழுவ முனைந்தது; ஒரு வெட்டு வெட்டி மின்னல் இதய வானத்தில் புகத் துடித்தது. அதைக் கண்ட விருந்தா வீறிட்டுக் கிறீச்சிட்டாள்! எங்கிருந்து அவளுக்குப் பலம் வந்ததோ, தெரியவில்லை! அரசரின் உயர எழும்பிய கையைத் தன் இரு கைகளாலும் இறுகப் பிடித்துக்கொண்டாள். ரன்ஜீத் சிங் ஓர் உதறலில் தம் கையை விடுவித்துக் கொள்ள முயன்றார். ஆனால் வலுவில்லாத பெண்ணின் பிடிதான் என்றாலும் அது, உள்ளத்தை அன்பு பற்றுவது போலப் பற்றியிருந்தது. எவ்வளவோ முயன்றும் அவரால் தம்மை விடுவித்துக் கொள்ள முடியவில்லை. வேறு வழியின்றி, "சியாமா! நியாயம் தன் தாகத்தைத் தணித்துக் கொள்ளட்டும். என் கையை விட்டு விடு!" என்று வேண்டினார்.

"மகாராஜ்! இதன் தாகம் தணிந்து விட்டது. இந்த வாளே அதற்குச் சாட்சி!" என்றாள் சியாமா.

மன்னர் வாளைப் பார்த்தார். அதில் இரண்டாம் பிறைச் சந்திரனின் ஒளி பளிச்சிட்டது. நெறி, நேர்மை என்னும் கதிரவன் உரிமையோடு அந்தச் சந்திரனுக்குத் தன் கதிரை ஊட்டி ஒளி வழங்கியிருந்தான்.

தமிழாக்கம்: **ரா. வீழிநாதன்**

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

# ANNOUNCING!

The sale of

## BLENDED AND FANCY FABRICS

made by mixing cotton and

## GRASIM STAPLE FIBRE

from to-day at

**AKASH-DEEP, SANDHURST BRIDGE, CHOWPATTY**

- Attractive Fancy Dress material for ladies
- Immaculate Bush Shirtings for gents
- Decorative Tapestry and Curtain materials
- Priced cheaper than cotton fabrics



**ALIOR RAYON SILK MFG. (WVG.) CO. LTD., BIRLAGRAM, NAGDA (M.P.)**

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon





**"SUPREME WHERE CLOSE TOLERANCES ARE REQUIRED"**



At the Tool works of Addison & Company we have just one object—to be precise and to build tools which are highest in accuracy, in quality and in length of effective service.




- TWIST DRILLS (INCLUSIVE OF FORGE-FORM STRAIGHT SHANK DRILLS) ● MILLING CUTTERS ● REAMERS
- INVOLUTE GEAR CUTTERS ● SLITTING SAWS
- GROUND THREAD TAPS ● CARBIDE TIPPED TOOLS

**ADDISON & COMPANY LIMITED, MADRAS-2.**

*(A Member of the Gauge and Tool Makers' Association, U.K.)*

*DISTRIBUTORS:* J. N. Marshall & Co., Bombay — for Maharashtra, Gujarat & Part of Madhya Pradesh. Macneill & Barry Ltd., Engineering Division — for West Bengal, Bihar, Assam, Orissa, Uttar Pradesh, Haryana, Punjab, Delhi, Himachal Pradesh, Jammu & Kashmir, Rajasthan & Part of Madhya Pradesh. Addison & Co. Ltd., Madras — for Tamil Nadu & Coastal Andhra. Addison & Co. Ltd., Bangalore—for Mysore State. Batliboi & Co. Private Ltd., Secunderabad — for Andhra Pradesh excluding Coastal Andhra. Batliboi & Co., Private Ltd., Ernakulam — for Kerala State.

ATW-29